Regd No 2975

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3

## ஸ்ரீராமாநுஜன்—284

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரு. 1O ஜீவியச் சந்தா ரு. 58

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி •
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி•—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி •
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1—6—1972ல் வெளியிடப்பட்டது.

# அட்டையின் மூன்றுவது பக்கம் முன்னம் வாசிக்கவேணும்

பதிகமாகிய *மஞ்சாடுவரை யேழுந்திரு மொழியின் அடிவரவு......இருங்கைபார் தூவடிவு வாரணமிருந்தண்* என்றுள்ளதேயன்றி 'வாரணம் வெருவாதாள்' என்றில்லே. வெருவாதாள் பதிகத்தின் அடிவரவு......பந்து சேலுகளும் கைம்மானம்* என்றுள்ளதேயன்றி 'பந்து சேலுகளுமேழை' என்றில்லே. ஏழையேதலன் பதிகத்தின் அடிவரவு......மாகம்துளங்குமாடங்கை *என்றன்றி மாடமிருந்தண்* என்றில்லே. இனி நவீனவாதி என்ன சொல்லவேண்டு மென்றுல் "அடிவரவு செய்தருளின வர்களே மருண்டார்களென்று சொல்லித் தீரவேண்டும். *யஸ்ய நைகமிகம் தத்வம் ஹஸ்தாமலகதாம் கதம்* என்று தேசிகளுல் புகழப்பட்ட ¤அசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்ய சாலிகளுக்கே குறைசொல்லவரும் வ்யக்தி ஸ்ரீவைஷ்ணவராகார்.

உபபத்திகளைக் காண்மிலென்பதும் செவியேற்கத் தக்கதன்று. யுக்த்யா பாஸங்களே அவை. பெரிய திருமொழியென்ற வ்யபதேசத்திற்குத் திருவாய் மொழியோடு ஒரு தொடர்புமில்லே. பெரியாழ்வர் திருமொழி, நாச்சியார் திரு மொழி, பெருமாள் திருமொழி என்றவற்றில் வைலக்ஷண்யம் தோற்றப் பெரிய திருமொழியென்றதத்தனே. (திருவந்தாதிகளில் பெரிய திருவந்தாதிபோல.)

திருக்கண்ணபுரத்தைப் பாடுகின்ற குலசேகராழ்வார் "காவிரிநன்னதிபாயுங் கணபுரம்" என்கிறுர். நம்மாழ்வார் ¤வேலேமோதும்மதிள் சூழ் திருக்கண்ணபுர மென்கிறுர். இத்தலத்திற்குப் பத்துப் பதிகங்கள் பாடின திருமங்கையாழ்வார் ¤துள்ளு நீர்க்கண்ணபுரம்¤ திரையெடுத்தவருபுனல் சூழ் திருக்கண்ணபுரமென்று பொதுவாக நீர்வளத்தை மட்டும் பேசியுள்ளார்.

ஆழ்வார்கள் செய்தருளும் பகவதநுபவங்களின் படிகளைக் கூரத்தாழ்வான் போல்வார்களே அறியவல்லார்கள். "பக்திப்ரபாவ பவதத்புதபாவபந்தஸந்துக்ஷித ப்ரணயஸாரரஸௌக பூர்ண: - ஜீயாத் பராங்குச பயோதிரஸீமபூமா" என்றரு ளிச் செய்தவர் அவரொருவரே. திவ்யப்பிரபந்தத் தனியன்களைக் காண்போம். திருவந்தாதி பணித்தார் என்றிவ்வளவே பொய்கையாழ்வார்க்குத் தனியன். திரு வடிகளை யிறைஞ்சினேனென்பது பூதத்தார் தனியன், உதித்தலூர் மண்டங்குடி யென்பது தொண்டரடிப்பொடியாழ்வார் தனியன். இங்ஙனே தனியன்களில் வைலக்ஷண்யம் போலே ஆழ்வார்கள் செய்தருளின அர்ச்சைத் திருமேனி யநுபவங் களிலும் நெடுவாசியுண்டு. "இக்ஷுக்ஷீரகுடாதீநாம் மாதுர்யே மஹதந்தரம் — தத்ர ஜிஹ்வைவ ஸாக்ஷிணீ."

எம்பெருமானே வேத வேத்யனென்று பொதுவாகப் புகழ்வதோடு விசே ஷித்து ஸாமவேத வேத்யனென்றும் ஸாம்ஸ்வரூபியென்றும். புகழ்வர்கள்; ¤சாமவேத கீதனுய சக்ரபாணியல்லேயே¤ என்றுர் திருமழிசைப்பிரான். திருவெவ் வுட்கிடந்தான் *சாமியப்பனென்னப்பட்டான். ஸ்ரீரங்கநாதனே *சந்தோகன் பௌழி யன் ஐந்தழலோம்புதைத்திரியன் சாமவேதி¤ என்றதுபோலவே அழுந்தூர்மேல் திசை நின்றவம்மானே நோக்கியும் ¤சந்தோகா பௌழியாதைத்திரியா சாமவேதி யனே" என்றுர் கலியன். சந்தோகவிமானப் பாடலென்பது பொருளற்றது.

ஆக, தென்னரங்கமும் திருவரங்கமும் சோழநாட்டில் ப்ரஸித்தமான ஸ்ரீரங் கமே யென்றும், வெருவாதாள் பதிகமும் ஏழையேதலன் பதிகமும் ஆழ்வாரருளிச் செய்த அடைவிலேயே திகழ்வனவென்றும் உண்மையுணரத்தக்கது. (ப்ர-அ.)

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ காஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம்
ஜகதாசார்ய மஹாமஹிமோபாத்யாய
அண்ணங்கராசார்யருடைய க்ருதிகளில் 913.

# யதார்த்த ராமாநுஜனெண்பத்திரண்டு

சுலோகம்: 1. ஸ்ரீமத்ஸுந்தரஜாமாத்ரு முநிமாநஸவாஸிபி:,
ஸர்வைச் ச பூர்வைராசார்யைஸ் ஸநாதோஹம் ஸதா ஜயீ.

2. யதார்த்த ராமாநுஜ நாமதேயம்
யதார்த்த வைதேசிகவாக்ப்ரபஞ்சம்,
யதார்த்த விந்மாநஸ சோகஹேதும்
யதார்த்த வாக்பிச் சகலீகரோமி.

(வெண்பா) எண்பத் திரண்டா மெழில்வார்த்தை மாலைகளால்
நண்பர் மனத்தை நளிர்விக்கும்—பண்புடையேன்
சாரமிகு சொற்களினல் சாதுசன் சந்தாபம்
தீரவிதைச் சொல்வேன் சிறந்து.

—முன்னுரை—

1. எண்பத்திரண்டாம் பிராயம் புக்கவடியேன் எண்பத்திரண்டு மாலைகள் பல வற்றால் நண்பர்களை மகிழ்வித்து வருகிறேனென்பதை உலக முழுதுமுணரும். இப் போது ஒரு எண்பத்திரண்டு மாலை எதிர்பாராத வகையில் அவதரிக்கத் தொடங்கு கின்றது. "யதார்த்தராமாநுஜன்" என்றொரு சிறு சுவடி இன்றே (31-5-72) நமது பார்வைக்கு வந்திருக்கின்றது. இது 1971ல் வெளியிடப்பட்டதாகவுள்ளது. ஆனால் 'நஞ்சுடைமை தானறிந்து நாகங் கரந்துறையும்" என்ற கணக்கில் இன்றளவும் கரந்துறைந்து இன்று கால வசாத் கண்ணில்படலாயிற்று. இந்தச் சுவடியை ஏற்கனவே சிலரோ பலரோ பார்த்திருந்தால், அவர்களுக்கு—'இதில் ஆக்ஷேபங் கள் எப்படிப்பட்டவை? அவற்றுக்கு எவ்விதமான ஸமாதானம்? ஆக்ஷேபகர்த்தா யார்? ஸமாதானங்கள் பொருத்தமான வழியில் அமைந்து விட்டனவா? 'இத்யாதி

களை ஆலோசிக்க ப்ரஸக்திபோயிராது. ஏனெனில்; இன்னவிதமாக இன்னுரெழுதினர்; அதற்கு இன்னவிதமான ஸமாதானம் கேண்மின்' என்று கண்ணாடி போல் காட்ட வகையில்லே. ஆர்ஜவமில்லை. ஏதோ ஸமாதானம் எழுதிவிட்டோம் என்று சிலருடைய கண்ணைத்துடைக்கவும் தனது கண்ணையும் துடைத்துக் கொள்ளவும் தலைவிதியேயென்று எழுத எழுந்தபடியந்தோ!

2. அந்தச் சுவடியினுல் யார்க்கும் எவ்விதமான உணர்ச்சியும் தோன்ற ப்ரஸக்தியில்லையென்பது திண்ணம் ஆகவே அதனைப் பொருள்படுத்தி நாம் ஒன்றெழுதத் தேவையில்லை ஆனாலும் நாமெழுதுவது உலகுக்கு மிகமிகப் பயன்பட்டேயிரும். ஆக்ஷேபங்களெல்லாம் P.B.A. என்கிற நம்முடையவையேயாகும். ப்ரக்ருத யதார்த்தராமாநுஜன் இரண்டாவது பக்கத்தில் "1945 வரு நவம்பர் டிஸம்பர் மீ ஸஞ்சிகையில்" என்றெழுதியிருப்பதால் ஏறக்குறைய முப்பது வருஷகாலமாகத் தொடர்ந்து வருகிற நமது ஆக்ஷேபங்களுக்கு இதில் பதிலெழுதப் புகுந்திருக்கிருரென்பது தெரிய வருகிறது, முதலில் காட்டியுள்ள விஷயஸூசிகையில் குவலயாநந்தம் என்பது தொடக்கம். ப்ரத்யஸ்த்ரம் என்பது முடிவு. நாம் ஒவ்வொரு விஷயத்தையும் எடுத்து அலசியலசித்தொலைப்போம். முடிவாக ப்ரத்யஸ்த்ரம் என்றது சுவையுடைத்து. தேசிக திவ்யஸூக்திகளில் "ப்ரத்யஸ்த்ரமஞ்ஜலிரஸௌ' என்பது ப்ரஸித்தம். தேசிகன் கண்ட ப்ரத்யஸ்த்ரம். அஞ்ஜலியேயன்றே. அது தான் தமக்கு முடிவாகத்தஞ்சமாகுமென்று யதார்த்தராமாநுஜகாரர் தெரிவித்தாராகிருர். ... ...

3. இப்போது நாம் மறுக்கும் சுவடியில் (தூஷணம்) என்கிற சொல் அடிக்கடி பிரயோகிக்கப்படுகிறது, சததூஷணீ என்னும் க்ரந்த நாமத்திலுள்ள தூஷணபதத்திற்கு என்ன அர்த்தமோ அந்த அர்த்தத்தில் எழுதப்படுவதன்றிது. தன்னுடைய ப்ரபல கோபத்திற்குக் காரணமான ப்ரபலபரிபவத்திற்கு உத்பாதகரான ஒருவர்க்கு இவர் இட்டிருக்கிற திருநாமமிது! *தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேச:* என்னுமாபோலே தூஷகர்க்கு தூஷண மென்று பெயரிட்டார் போலும். நூற்றுக் கணக்கான தூஷணங்களை யிட்டருளின தேசிகனுக்கும் தூஷணமென்கிறதிருநாமத்தை இடலாம் இவர்.

4. இது கிடக்கட்டும். வாதப்ரதி வாதங்களில் ஒரு தலையில் வெளிவரும் வாதங்கள் எதிரி வாய்திறக்க வழியில்லாமல் அப்ரத்ருஷ்யமாயிருப்பதுண்டு; அப்போது எதிரிக்கு உள்ளடங்காத துக்கம் உண்டாகும். அது கோபமாகப் பரிணமிக்கும். அதனுல் தலைகால் தெரியாமல் நிந்திக்கத் தோன்றிவிடும். நிந்தைகளினுலேயே பத்ரபூரணம் பண்ணிவிடுவது பாமரக்ருத்யம். அதுபண்டிதர்களுக்கு உற்றதன்று; துக்கத்தையும் கோபத்தையும் உள்ளடக்கி ம்ருதுமதுரபாஷிதங்களாலே நூலை அமைப்பது அழகியது. சாஸ்த்ரீய விஷயங்களை யெடுத்து விளக்க சக்தியற்றவர்களே தேள்பாம்புகள் விஷத்தைக் கக்குவது போல் கடுஞ்சொற்களையே நிரப்பிச் சில பாமரர்களை மகிழச் செய்யப் பார்ப்பர். விவேகிகள் நாலுவரி வாசித்தவுடனே வெறுப்படைந்து சுவடியைக் கீழே எறிவர்கள். இடையிடையில் சில நல்ல விஷயங்கள் புகுந்திருந்தாலும் அவை சோபிக்கமாட்டா.

5 ப்ரக்ருதச்சுவடியின் தொடக்கப்பக்கம் ஒரு சுபலக்ஷணமுமின்றி ப்ரஸ்தாவம் என்றுள்ளது. என்ன ப்ரஸ்தாவமென்றுல் அர்த்தமில்லாதவசவுகளை நிரப்பும் ப்ரஸ்

தாவமே அந்தவாக்யங்களைக் கேளீர்; "உலகத்திலேயேதனக்கு ஒத்தார்மிக்கார் ஒருவருமில்லையென்று கர்வப்பட்டு" செய்து வருகிறது" என்பதாம்' இங்கு கர்த்தா யார்? என்றுகேட்டால் எழ வாயில்லை' இதற்குமேல்"தேசிகன்ஸ்ரீஸூக்திகளில் இது செய்த குசோத்யங்களுக்கெல்லாம் நாம் இதுவரையில் ஸமாதானம் சொல்லியிருக்கிறோம்" என்கிறார். தேசிகன் ஓரிடத்தில் "வேச்யை பதிவ்ரதாதர்மோபதேசம்பண்ணுமாபோலே "என்கிறார்· அதுதான்நினைவுக்கு வருகிறது. தத்வடீகாஸூக்திதூஷணயச:படஹம் திசைதொறும் முழங்கநிற்பவர் இங்ஙனேயெழுத வெள்காதது வியப்பல்லவா?

6. எல்லாவற்றுக்கும் [அதாவது 1941. ஸூ முதல் தன்மீது விழுந்த சித்ரபுங்க த்ரகாசாநாம் வித்யுத்ஸத்ருசவர்ச்சஸாம்' ராகவபாணுநாம் பரிஹாரங்காட்ட இப்போது எழுந்தவிவர் *அத்ராஸ்தி பஹ்வஸாமஞ்ஜஸ்யத்துக்கும் பரிஹாரம் காட்டாமலிருப்பரா? காட்டுவரே. காட்டியேயிருப்பர். விஷயஸூசிகையில்"ரூபகபரிசுத்தி' பக்கம்41" என்று குறிப்பிட்டுள்ளார். அங்கே இந்த மஹான் என்ன எழுதியுள்ளார் தெரியுமோ?

7. சிறுகதை கேண்மின்.. ஒருவன் ஒரு பெரியவரை விதவாபுத்திரரென்று நிந்தித்து அவஸ்கந்திதனானன்' அவன் விடையிறுக்கிறான்—இவர் தகப்பனார்இறந்த பின் பத்தாண்டு கழித்துப்பிறந்தவரென்று ப்ராசீனபக்ஷம்; இல்லை, இரண்டாண்டு கழிந்தபிறகு பிறந்தவரென்று நவீநபக்ஷம்,' இதைப்பற்றி நான் சர்ச்சைசெய்தேனத்தனை,' ப்ராசீநபக்ஷந்தான் ஸரியென்றேனத்தனை—என்றான்' உடனே விடுதலையடைந்து விட்டானும்.

8. மற்றொன்றுங்கேண்மின் ஒருவன்ராஜபுத்ரியைநோக்கி' மாதேவா சம்போகம் தா' என்று சொல்லி அவஸ்கந்திதனாய் "நான் அப்படிச்சொல்லவில்லை, மாதேவா! சம்போ! ஸ்கந்தா! என்று எனது வழிபடு தெய்வங்களை யழைத்தேனத்தனை என்று சொல்லி விடுதலை பெற்றான். இது மெச்சத் தக்க சாதுரியம். இவரது சாதுர்யத்தைதான் உகந்து கொள்ள வேணும். "அந்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்ற இவர்தமது வாக்கியத்தில் (அத்ர) என்றதற்கு எந்த க்ரந்தம் விஷயம்? என்றும், அந்த அஸாமஞ்ஜஸ்யத்திற்குப் பரிஹாரம் செய்தீரோ! என்றும் கேட்பாரில்லை யென்பது இவரது நினைவு.

9. தேசிக திவ்யஸூக்திகளில் குசோத்யங்கள் செய்யும் ஸ்ரீவைஷ்ணவர் யாருமிலர். தத்வஜிஜ்ஞாஸயா எழும் கேள்விகளுக்கு விடையிறுக்கப் பிறந்தவரல்லர் இவர். சின்னி விராதாதம் போல் 'அதற்குக் கண்டனம் செய்து விட்டேன், இதற்கு மறுப்பெழுதிவிட்டேன்' என்று பறை சாற்றவே பிறந்தவராவர்.

## வேணுகோபால ஸந்நிதி ஸந்ந்யாஸி

10 தேவப்பெருமாள் ஸந்நிதி அனந்தஸரஸ்ஸின் கரையில் ஸ்ரீவேணுகோபாலன் ஸந்நிதியுள்ளது. அதில் அறுபதாண்டு கட்குமுன் ஒரு ஸம்ந்யாஸி வஸித்துவந்தார் அவர் எந்த பெரியவரையும் ஈச்சம்பாடி ஸ்வாமியையும் திருப்புட்குழி ஸ்வாமியையுங்கூட) ஏகவசனமிட்டே பேசுவராம். ஒருநாள் ஒருவர் அவரிடம் சென்று "சப்த மஞ்ஜரீ புஸதகம் ஸாதிக்க வேணும்" என்றாராம், அதற்கு அவர் அது என்னிடமில்லை, எதிரேயுள்ள பாடசாலையில் சென்றுகேள் என்றாராம். "ஸ்வாமீ! சப்தமஞ்

ஜரி பலரிடமிருக்கிறது. அவையெல்லாவற்றிலும் ஏகவசன த்விவசன பஹுவசனங்கள் உள்ளன! நீர்வாசித்த சப்தமஞ்ஜரியில் ஏகவசனம் மட்டுமே யுள்ளதாகத் தெரியவருவதால் அதைக்காணவேணுமென்று ஆசை என்றுராம் கேட்டவர். ..... அதேபோல் இவர் வாசித்த சப்தக்தில் (இது) என்பது தவிர உயர் திணைச்சொல் ஒன்று கூட இல்லைபோலும். இவருடைய கல்விக்கு ஏற்ற விலக்ஷணபரிபாஷை இவர்க்கே காபிரைட்டாக இருக்கட்டும். அது நமக்கு வேண்டா. உயர்திணையாகவே நாமெழுதுவோம். இவர் என்றால் எவர்? என்று கேட்கமாட்டீர்களே. "ஒருத்தி மதியெல்லா முள்கலங்கி மயங்குமா லென்னீரே *(திருவாய்மொழி) என்றயிடத்து வியாக்கியானம் ஸேவிப்பது.

—முன்னுரை முற்றிற்று.—

—இனி நூல் தொடக்கம்—

# குவலயானந்தம்

11 இவர் குவலயானந்த மென்று மருடமிட்டெழுதியிருக்கும் விஷயத்தில் நாம் பதிலெழுதுவது ப்ரேதசிரஸிப்ரஹாரத்தோடொக்கும். யாதவாப்யுதயகாவ்யத்தில் கோவர்த்தநோத்தரணப்ரகரணத்தில் தேசிகன்ஸாதித்தருளிய "அதியஜேத நிஜாம் யதி தேவதாம்" இத்யாதிச்லோகமானது குவலயானந்தத்தில் உதாஹ்ருதம். இது வேதவாக்ய கர்ப்பமான சுலோகம். இதில் மூன்றுவது பாதம் "க்ஷிதிப்ருதைவ ஸதேவதகா வயம்" என்பது. ஸதைவதகா: என்று சிலரோ பலரோ கொண்டிருக்கிற பாடத்தை நாம் மறுப்போமல்லோம். அது பொருளற்ற பாடமன்று. ஆனால் ஔசித்யம் பார்க்குமளவில் வேதபரிமளம் மிக்க பாடம் (ஸதேவதகா:) என்பதேயாகும். தேசிகன் எந்த வேத வாக்யத்தைக் கொண்டு இந்த சுலோகம் இயற்றினுரோ அதில் தேவதா சப்தந்தான் இருமுறையுள்ளது. தைவதசப்தமில்லை ஆகவே(ஸதேவதகா:) என்கிற பாடமே உசிதம். ஆனால்இதுவன்று விசாரஸ்பதமான விஷயம்.

12 இவர் எந்த வியாக்கியானத்தோடு குவலயானந்தத்தைப் பதிப்பிக்க எழுந்தாரோ அந்த வியாக்கியானகாரர் (ஸதேவதகா:) என்ற பாடத்தையே கொண்டு அதில் வியாகரண தோஷம் சங்கிப்பார்க்கு இடமற பாணிநிஸூத்ரமும் காட்டியுள்ளார் இங்கு விஷயமின்னதென்றே புரிந்து கொள்ளாதவிவர் வ்யாக்க்யாதாவுக்கு அபிமதமான பாடத்தை ஒரு விதத்திலும் காட்டாமலே (ஸதைவதகா:) என்கிற பாடத்தையே பதிப்பித்தார். இங்கு நாம் அப்போதே விஷயத்தை விளக்கி ஸமுத்போதனம் செய்தோம்; தெளிவு பெற்று உடனே பிழைதிருந்தம் வெளியிட்டு விட்டார். இதை இவர் அபலபிக்கவில்லை.

13 இது நடந்தது 1945 ஆம் வருடத்தில் இதை மறந்து போனவர்கள் பலர். மறந்ததை யெடுத்துக் காட்ட லஜ்ஜிக்க வேணும். அப்போது நாமெழுதியிருந்ததும் இவர் தாம் காணுக் கண்ணிட்டிருக்க வேண்டியதுமான வொருவாக்கியத்தையும் அந்தோ! இங்கெடுத்துக் காட்டுகிறுர்; (அதாவது) — "(நாம் தெரிவித்ததை மறுக்க மாட்டாமல் இசைந்து கொண்டு திருத்தம் வெளியிட்டது பற்றி ஸந்தோஷம்; வழிக்கு வந்து விட்டீர்; ப்ராமாணிகர்களின் வழி இது தான்; எந்தெந்த விஷயங்களில் நமக்குள் விவாதம் நிகழ்ந்து வருகிறதோ அவ்வவ்

விஷயங்களெல்லாவற்றிலும் இங்ஙனனே திருத்திக் கொள்வ தொழிய வேறு கதியில்லை'' என்றெழுதியிருந்தோம். இதையும் வெளியிட்டுக் கொள்ளுகிறரே! அந்தோ! அன்று முதல் இன்றறுதியாக அப்படித்தானே யாகிறது. 'வியாக்கியானத்திலுள்ளபாடத்தை மூலத்தில் காண்பிக்காமல் போய்விட்டேன்' என்றுதவறினை உள்ளபடி ஒப்புக் கொண்டானபிறகு வ்ருதா வாக் ப்ரபஞ்சங்கள் ஏதுக்கு?

14 இந்த பிரகரணத்திலெழுதுகிறரிவர்— குற்றங்காண்பதையே நாம் (PBA) லக்ஷியமாகக் கொண்டிருக்கிறோமென்றும், குற்றங் குறைகண்டு பிரசுரம் செய்வதற்காகவே நாம்இவர்தம்முடைய பத்ரிகையை வாசித்தோமென்றும்; அந்தோ! இப்படியெழுதுகிறவரை என்னென்பது! அமரஸிம்ஹன் ''வித்வாந் விபச்சித் தோஷஜ்ஞ: என்றுனேயொழிய குணஜ்ஞ: என்றுனில்லையே. சிங்கம் புறப்படுவது யானையை வதஞ்செய்வதற்காகவே என்னுமாபோலே ஈதென்னவார்த்தை! கருத்மாந் ஸர்ப்பங்களைத் தேடுவதில்லை; விதிமாண்ட ஸர்ப்பங்கள் தன்னடையே தத்த்ருஷ்டிஜுஷ்டங்களாகின்றன; ஆனபின்பு கதிமோக்ஷமேது? ''குணதோஷௌ புதோ க்ருஹ்ணந்'' இந்யாதிஸுபாஷிதப்படியே எல்லாரும் இருந்து விட்டால் தேசிகன் போல்வாருடைய க்ரந்தங்களுக்கு உதயமேயில்லையாகுமே.

15 மொத்தத்திற்கும் ஒரே வார்த்தை கேளீர். படித்தவர்கள் அதிலும் வயது சென்றவர்கள் எழுதுகிற வாக்கியம் தேடிப்பிடிக்கவும் முடியவில்லையே! ''துள்ளிக் குதித்து எழுந்து இதோபார் ..... ...'' இத்யாதி அச்வசாகடிக பாஷிதங்கள் இவர்க்கு எங்கே எங்ஙனே பரிசிதமாயினவோ? நாம் காட்டின குற்றங்களில் ஒன்றுக்காவது பரிஹாரம் செய்து விட்டு இப்படி யெழுதினுலும் தொலைகிறது என்னலாம். அதற்கு வழியில்லையே. ஒவ்வொன்றிலும் அஞ்ஜலிபந்தமேதஞ்சமென்று காட்டி நிற்குமிவர் பீதபங்கிலபாநீய மண்டூகரடிதம் குத: கரோதீதி ந ஜாநீம:. இங்கு வயிறு அபரிமிதமாக எரிவது பலபல அபத்த அஸம்பந்தவாக் ஜாலங்களால் விம்மி வெளிவந்து ஒளி வீசுகின்றது. பார்ப்பவர்களெல்லாம் ஐயோபாவமென்பர்கள். இனி, இவர் உபேக்ஷிக்கத்தகாத எனது சபதம் நினைவூட்டப்படுகிறது.

## உலகம் உறங்குகின்றதா?

16 திருவாய் மொழியில் ஆழ்வார் ஓரிடத்தில் ''உலகோவுறங்குமே'' என்றுர். இவர்க்கும் நமக்கும் நடந்துவரும் வாதவிவாதங்களை உலகம் மறந்து ஒருகாலுமுறங்காது. இந்நிலவுலகிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர் ஒவ்வொருவரும் இறையும் மறவாது ஊன்றிநோக்கிக் கொண்டேயிருப்பர். முக்கியமாக இதை நினைவூட்டுகிறேன். சென்ற ஸாதாரண ஹு ஆவணிமாதத்தில் ஸ்ரீராமாநுஜன் ஸ்பெஷல்ஸஞ்சிகையென்று ஒன்று வெளியிடப்பட்டது. அதில் விஷயமென்னவென்றுல்— அங்குள்ள சில முக்கியமான பகுதிகளை அப்படியே இங்கு மறுபதிப்புச் செய்கிறேன்.

17 அன்பர்களும் உதாஸீனர்களுமான உபயகலையார்க்கும் விஜ்ஞாபனம். இது ஸ்பெஷல் ஸஞ்சிகையென்று முகப்பில் தெரிவித்திருக்கிறேன். என்னுடைய பற்பல நூல்களையும் தாமாகவே விரும்பிப் படித்திருக்கின்ற உங்களை இப்போது இதனை விசேஷித்துக் குறிக்கொண்டு படிக்கவேணுமென்று கோரவேணுமோ?

1 ஸ்ரீமதுபயவே. வித்வான். கோமல். சேஷாத்ரியாசார்யஸ்வாமி.
2 ,, வித்வான். நவநீதம் ஸ்ரீராமதேசிகாசாரியர் திருவிண்ணகர்.
3 ,, வித்வான். பாதூர் ராகவாசாரியர் ஸ்வாமி, மதுராந்தகம்.
4 ,, வித்வான். வாஸுதேவாசாரியர் ஸ்வாமி, உத்தரமேரூர்.
5 ,, சேட்லூர். கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, புநர்வஸு பத்ராதிபர்
6 ,, M.S வரதாசாரியர். "மஹரவிவேகி" அடையாறு.

18. இந்த ஆறு ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகளை மத்யஸ்தர்களாயிருந்து விமர்சிக்கும்படி முன்னம் வேண்டிக் கொள்கிறேன். ஒருதலையான ஆக்ரஹமும் மாச்சரியமுமில்லாமல் விஷயங்களில் மட்டும் கண்செலுத்தி ஆராய்ச்சி செய்யக் கூடியவர்களென்கிற விச்வாஸத்தினால் இப்பெரியார்களைக் குறிப்பிட்டேனிங்கு. இவர்கள் ஆராயவேண்டிய விஷயம் எது? என்பது மேலே விளங்கும். ஸம்ப்ரதாய பேதஸித்தமான விஷயங்களில் இப்பெரியார்கள் மத்யஸ்தர்களாக இருக்க முடியாதாகையாலே அத்தகைய விஷயங்களில் நாம் இவர்களுக்குப் பரிச்ரமந்தைக் கொடுக்க விரும்பவில்லை. விரும்புவது உசிதமுமன்று, ராஜமார்க்கமாகவுள்ள தேசிகதிவ்யஸூக்திகளில் நேர்ந்திருக்கின்ற விவாதங்களில் மட்டுமே விரும்புவது.

19. ஸ்ரீமான் தாதாசாரியாரவர்களுக்கும் நமக்கும் பலவருஷங்களாகப் பல விஷயங்களில் விவாதம் விளைந்து அது க்ரந்தங்களிலும் ஏறியிருந்து இடையில் சிலகாலம் ஓய்ந்திருந்தது. அவர் விடைகூற வேண்டிய நிலைமையில் நிற்கிறார் இவருடைய ஆக்ஷேபங்களுக்கு ஒன்று விடாமல் விடையிறுந்துவருகிறோமென்பதை உலகமறிந்திருக்கிறது இவர் தமக்கு வேண்டாத பூர்வாசாரியர்களை [பெரியவாச்சான் பிள்ளை முதலானோரை] தேசிகன் ஆசார்யபதவியில் வைத்து ஆராதிப்பவர் என்பதை நமது நூல்களால் நன்கு தெரிந்துகொண்டதனால் அவர்களை நிந்தித்துந் தாம் க்ருதக்ருத்யராக வேணுமென்று உறுதி கொண்டு விட்டார். அந்த நிந்தைகளெல்லாம் ஸர்வாத்மநா அஸ்தாநே என்று விளக்குவதற்காகவே நமது பூதிகந்தி புஷ்பப்ரஞ்சன நூல் அவதரித்தது.

20. ஸாரமாகத் தெரிவிப்பதைக் கேண்மின். கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையிலும் ஸச்சரித்ரரக்ஷையிலும் விசிஷ்ய த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவளீதத்ஸாரங்களிலும் தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளையே அடியொற்றியிருக்கிறாரென்றும், பிள்ளானுடைய ஆறுயிரப்படியை தேசிகன் ஓரிடத்திலும் அநுஸரிக்கவில்லையென்றும், திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படியென்று ஒரு வியாக்கியானமிருந்ததாகவே தேசிகன் அறிந்திலர் (அல்லது) அறிவித்திலர் என்றும் நாம் விரிவாக நிரூபித்திருக்குமவற்றை இவர் மறுக்கவும் மறைக்கவும் பார்க்கிறார். இவர்க்கு ஸ்வஸம்ப்ரதாயக்ரந்தங்களிலேயே பரிசய லேசமுமில்லையாயிருக்க, பெரியவாச்சான் பிள்ளை முதலானோருடைய திவ்யஸூக்திகளில் அது ஸுதராம் அப்ரஸக்தம். ஸர்வதந்த்ரஸ்வதந்திரரான தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியையே அஸமஞ்ஜஸமென்று தூஷித்தவிவர் தேசிகனுக்கும் தேசிகர்களான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளை தூஷிக்கிறாரென்றால் இதில் என்ன வியப்பு?

21. தமது பூதிகந்திபுஷ்பத்தில் (பக்கம் 78ல்) "ஸ்ரீ ராமாநுஜன் 132ல்" என்று தொடங்கி இவரெழுதியுள்ளவற்றை அப்படியே அநுவதிக்கிறேன்;—

"ஸ்ரீராமானுஜன் 132ல் (P.B.A. எழுதியிருப்பதாவது) ஸம்ப்ரதாயவிஷயமாக நாமெழுதும் நூல்களுக்கு ஜீவநாடியான விஷயங்கள் இரண்டே; (1தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளை மணவாளமாமுனிகளுக்கும் மேலாகக் கண்ட பாடம் செய்திருந்தவர்; அந்த ஸ்ரீஸூக்திகளையே பற்றுக்கோடாகக் கொண்டு எழுதுமவர் தேசிகன் என்கிறவிது ஒருவிஷயம் (2) இவ்வுண்மையை அறியகில்லாதவர்களாய் (அல்லது) அறிந்துவைத்துங்கூட அபலபிப்பவர்களான நவீனர்கள் தேசிகனைப் பெரியவாச்சான் பிள்ளைக்கு விரோதியாக எழுதுவதும் அந்த தேசிகனோடு தங்களுக்கொரு தொடர்பு இருப்பதாக அபிநயிப்பதும் மிகத் தவறு என்கிறவிது மற்றொரு விஷயம்

(இப்படி உண்மையாக நாம் எழுதியிருப்பதை அநுவதித்துவிட்டு மேலே மூலைக்கலக்க மித்யாதிகளால் நம்மை அபரிதமாக ஸம்பாவித்திருக்கிறார். அந்த ஸம்பாவனைகளையெல்லாம் உகந்து ஏற்றுக்கொள்வோம், மேலே உதாஹரித்த ஜீவநாடியென்னும் இரண்டு விஷயங்களும் ஸத்யமானவையே "ஸத்யமானவையே" யென்று என் கையினலெழுதுவதிலும் என் வாயினற் சொல்லுவதிலும் என்ன பயன்? இவர் வாயினல் சொல்லுவித்து இவர் திருக்கையினல் எழுதுவிக்கிறேன்.

22. இவர் தமது பூதிகந்தி புஷ்பத்தில் 64. 65. 66. பக்கங்களில் த்ரமிடோப நிஷத்தாத்பர்ய ரத்னவளீ ஸாரங்களுக்கு ஆறாயிரப்படியோடு பொருத்தத்தையும், பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளோடு ஸம்பந்தமில்லாமையையும் மூதலிக்கப் பாடுபடுகிறார். [கீழே மத்யஸ்தர்களாக நம்மால் வரிக்கப்பட்டுள்ள மஹநீயர்கள் அறுவரும் இங்கே விசிஷ்ய மதிசெலுத்தவேணும்.] திருவாய்மொழி பத்தாம் பத்தின் முதற்பதிகமான *தாளதாமரைக்குப் பிள்ளான் இட்டருளின அவதாரி கையின்படியின்றிக்கே நம்பிள்ளை முதலானார் இட்டருளின அவதாரிகையையே தேசிகன் ஆதரித்து ரத்நாவளீயையும் ஸாரத்தையும் பணிந்துள்ளாரென்று நாம் (நினைவுக்கு வருகிறவரை, ஐந்து நூல்களில் நிரூபித்திருக்கிறோம். இவர்எழுதுகிறார்—

> "இங்கு மஹா-வித்வான் (P.B.A) திருவாய்மலர்ந்தருளுகிறார் 'ஸத்கதிஸ்ஸயாத்' என்பதற்கு வியாக்கியான மிட்டவர்கள் 'காளமேகப்பெருமாளை வழித்துணையென்று' என்றெழுதி வைத்தார்கள்......" இத்யாதி.

மத்யஸ்த மஹான்களுக்கு இங்கு விஜ்ஞாபிக்கிறேன். "ஸத்பதவ்யாம் ஸஹாயம்" என்று தாத்பர்யரத்நாவளியிலும், ஸத்ஸரணிம் என்று ஸாரத்திலும் தேசிகன் அருளிச் செய்திருப்பதை இவர் தாதாசார் தமது கையாலெழுதுகிறார். இப்பதி கத்திற்கு ஆறாயிரப்படியில் காணுமவதாரிகை—"திருக்கண்ணபுரத்திலெம்பெரு மானையநுபவித்து இப்போது திருமோகூரிலெம்பெருமானையநுபவிக்கிறார்" என்னு மிவ்வளவே. "ஸத்பதவ்யாம் ஸஹாயம்" என்று தேசிகன் ஸாதிக்கும்படியாக ஆறாயிரப்படியில் ஓரெழுத்துமில்லை. மற்ற வியாக்கியானங்களில் தானுள்ளது. (அதாவது) நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களில்தானுள்ளது. இதைத் தான் தேசிகன் பொன்னேபோல் போற்றினர் என்பது ப்ராமாணிகபரிசீலநீயம்.

23 இதற்கு இவர் எழுதுகிறார் – ஸத்பதவ்யாம் ஸஹாயம் என்பது த்ரமிடோப நிஷத்ஸாரத்தில்தான் உள்ளது. ஸாரக்ரந்தம் ஒரு சதகத்தின் ஸாரார்த்தத்தைத் தெரிவிப்பதேயொழிய தசகத்தின் ஸாரத்தைத் தெரிவிப்பதன்று;

ஏவஞ்ச தேசிகன் கூறின ஸத்பதவீஸஹாயத்வம் பத்தாம்பத்தின் (அதாவது நூறுபாசுரங்களின்) ஸாரார்த்தமே யொழிய *தாளதாமரையென்கிற ஒரு பதிகத்தின் ஸாரார்த்தமன்று—என்று. இதற்கு முண்டித மஸ்தகலலநாமணிகள் சிலர் ஏமாற்றமடையலாமத்தனை பத்துப்பாசுரங்களில் ஸாரத்தைச் சொல்லும் போது பதிகத்தில் ஒரு பாசுரத்தையோ ஒன்றிரண்டு பாசுரங்களையோ தான் உயிராகக் கொள்ளமுடியும். அப்படியே ஒரு சதகத்தின் ஸாரத்தைச் சொல்லும் போது ஒரு பதிகத்தின் ப்ரமேயந்தையே உயிராகக் கொள்ளமுடியும். வேறு விதமாக முடியவே முடியாது". ப்ரக்ருதத்தில் ஸத்பதவ்யாம் ஸஹாயமென்றது சதகத்தின் ஸாரமே; எந்த தசகத்தை உயிராகக்கொண்டு இதை ஸாரார்த்தமாக தேசிகனருளிச்செய்தாரென்று கேட்டால் கட்டகுட்யாம் ப்ரபாதம். அந்த ஸாரத்திலேயே (சுலோகம் 21ல்) "த்ரிவர்சாதிக்ராந்த ஸ்திரநகரகண்டாபத........ ஸஹாயீகுர்வாணச் சரமசதகே விந்ததி முநி:" என்றருளியதும் பத்தாம்பத்துக்குத் தாளதாமரைப் பதிகத்தை உயிராகக்கொண்டே யொழிய வேறு எந்த பதிகமும் ஸஹாயத்வத்திற்கு ஸூசகமாக விரகில்லை.

23. மத்யஸ்தமஹாநீயர்களே! உபஸம்ஹரிக்கிறேனிதை. தேசிகன் பெரிய வாச்சான்பிள்ளையின் ஸ்ரீ ஸூக்திகளை எவ்வளவோ கொள்ளைகொண்டு அநுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்திருக்கிறாரென்பது நம்மால் செப்பேடும் கல்வெட்டுமாகச் செய்யப்பட்டிருக்கிறது. ஆறாயிரப்படியை உபஜீவித்த விடம் ஒன்றிருந்தாலும் எடுத்துக் காட்டட்டுமிவர். பிள்ளானுடைய நிர்வாஹமென்று இருபத்து நாலாயிரப்படியிலும் ஈட்டிலும் பலவிடங்களில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. அப்படி ஓரிடமாவது தேசிக க்ரந்தங்களிலெடுத்துக் காட்ட இயலுமா? *ஓடும் புள்ளேறி* *இவையுமவையும்* என்கிற பதிகங்களின் ப்ரமேயத்தைப்பற்றியே நாம் முதன் முதலாக விசாரம் தொடங்கினோம். இதில் இவர் ஆந்தனையும் போராடியிருக்கிறார்; கடைசியாக இப்போது ஆறாயிரப்படியில் இல்லாத ப்ரக்ஷிப்த வாக்யங்களையெடுத்துக்காட்டியிருக்கிறார்; இதைப்பற்றி நாம் மேலே (பக்கம் 9ல்) "நமது பிரபலமான சபதமொன்று" என்றெழுதியிருப்பதை இந்த நூலுக்கு ஜீவநாடியாகக் கொள்ளுங்கள். 'இதுகாறும் நான் வெளியிட்டிருக்கிற எண்ணூறு நூல்களையும் மயிலையில் கொணர்ந்து மஹான்களின் முன்னிலையில் கிழித்தெறிந்து விட்டு அவ்விடத்திலேயே தொண்டர்தொண்டனுயிருந்து ஆயுச்சேஷத்தைக் கழிக்கக்கடவேன்" என்பது என்னுடைய சபதமென்பதை உணருங்கள் அந்த விஷயத்திலும் தாள தாமரைப்பதிகத்தைப்பற்றி யீண்டு உபபாதித்த விஷயத்திலுமே உங்களுடைய மாத்யஸ்த்யம் விரும்பப்பட்டது.

— நமது பிரபலமான சபதமொன்று —

24. தடஸ்தர்களான மஹான்களை :நோக்கி விஜ்ஞாபிக்கிறேன். நாற்பது வருஷமாக, (இவரோடு முப்பது வருஷமாக) நடந்துவரும் விவாதம் இன்றோடு முடிவு பெற்றதென்று கொள்க. தீவிரமான சபதம் செய்கிறேனிப்போது. உண்மையறிவாளிகளும் உண்மையுணர விரும்புமவர்களும் அவதானங்கொள்ள வேணுமிங்கு. நான் உலகத்தை வஞ்சித்து வருவதாக அடிக்கடி யெழுதி வருகிறாரிவர். இவருடைய வஞ்சனையை இங்குச்சில விஷயங்களைக் கண்ணாடிபோல் காட்டி மூதலிக்கிறேன்.

இவருடைய வாக்கிய ராசியில் *இவையுமவையும் பதிகத்திற்கு ஆறுயிரப்படி யவதாரிகையென்று இவர் எடுத்தெழுதியிருப்பதாவது "ஆர்ஜவகுணானுஸந்தானம் பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் பண்ணின அநுபவரஸத்தை யருளிச்செய்கிறார்." என்பதாக.

வஸ்துஸ்திதியில் இப்படியொரு அவதாரிகை பிள்ளான் அருளிச் செய்திருந்தால்— (மேலே கேளுங்கள் எனது தீவிரமான சபதத்தை—

25. இந்த விவாத விஷயமாக மட்டுமன்றிக்கே மற்றும் பல பலவிவாதங்கள் விஷயமாகவும் லோகாபிராமமாகவும் ஸம்ஸ்க்ருதத்ராவிட நாநா க்ரந்த வ்யாக்யான ரூபமாகவும் இதுகாறும் நானெழுதி யச்சிட்டு வெளியிட்டிருக்கிற எண்ணூறு நூல்களையும் மயிலையில் வந்து பல மஹான்களின் முன்னிலையில் கிழித்தெறிந்து விட்டு அவ்விடத்திலேயே தொண்டர் தொண்டர் தொண்டனாயிருந்து ஆயுச்சேஷத்தைக் கழிக்கக்கடவேன். P.B.A.

26. பிள்ளானருளிச் செய்த ஆறுயிரப்படியானது மற்றும் பல வியாக்கியானங்களோடு சேர்ந்தும், தனிப்படவும் தமிழ் லிபி தெலுங்கு லிபி ஆகிய இரண்டு லிபிகளிலும் பன்னிரண்டு பதிப்புக்கள் ஏறியுள்ளது. என் கண்ணில் பட்டவை இவ்வளவு கண்ணில் படாதவை இன்னமுமிருக்கலாம். முதன் முதலாக அச்சேறினது August 1871 இற்றைக்கு ஏற்றத்தாழ்வின்றியே தொண்ணூற்றொன்பது வருஷங்களாயின. அதன் பிறகு 1921ஆம் ஆண்டு வரையில் பதிப்புகள் பல. நடந்திருக்கின்றன. 1913ஆம் வருஷத்தில் ஆறுயிரப்படி மட்டும் தனிப்பதிப்பாக மைசூர் ஸ்ரீபரகாலமடத்தின் மூலமாக (தெலுங்கு லிபியில் வெளிவந்துள்ளது. ஆக இப்பதிப்புக ளெல்லாவற்றிலும் *இவையுமவையும் பதிகத்தின் ஆறுயிரப்படி அவதாரிகை—"இப்படி யெம்பெருமானென்னோடு ஸம்ச்லேஷித்தருளினானென்கிறார்." என்றிவ்வளவே யொழிய இதற்குமேல் ஓரெழுத்தும் கிடையாது. ஓரக்ஷரமுங்கிடையாது. அனைவரும் தம் தம்மிடமுள்ள ஸ்ரீகோசங்களை யெடுத்து ஸேவிக்கலாம், இவர் காட்டுகிற "ஆர்ஜவ குணானுஸந்தானம் பண்ணின" இத்யாதிவாக்யம் ஒன்றிலும் கிடையாது. பொய் வஞ்சனை மருள் இருள் துயக்கு மயக்கு ஆகிய எல்லாவற்றுக்கும் கொள்கலமானவிவர் ஏதோ க்ருத்ரிமம் செய்கிறபடி இது; இதைச் சிறிய விஷயமாக நினையாதீர்கள். மிகப் பெரிய விஷயம்.

—மேலே குறித்த நமது ப்ரபல சபதத்தின் தொடர்ச்சி—

27. *ஓடும் புள்ளேறிப் பதிகத்தில் ஆர்ஜவ குணானுபவமென்பதை பிள்ளான் நெஞ்சிலும் நினையாதவர். நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானங்களில்

மட்டுமே இந்த நிர்வாஹமுள்ளது. இதையே தேசிகன் ஆதரித்து ச்லோகம் பண்ணி விட்டார். தேசிகபக்தம்மந்யராயிருப்பவர்களுக்கெல்லாம் இதனுல் மிக்க தலைவணக்க முண்டாயிற்று. இத்தகைய பல விஷயங்களில் இதுவொன்று. இவருடைய வகுப்பில் திருவாய்மொழிக்கு உரையெழுதப்புகுந்தவர்கள் இதை நோக்கினுர்கள்; மநஸா வாசா தேசிகனைக் கடிந்தார்கள். "பிள்ளானே எம்பெருமானுடைய ஐச்வர்யம் சொல்லுகிறது என்ருர்; தேசிகனே நமக்கு வேண்டாத ஆசாரியர்களை யடிபணிந்து ஆர்ஜவம் சொல்லுகிறதென்கிருர். இதற்கென்ன பண்ணித்தொலைக்கிறது" என்று பார்த்தார்கள். "இப்படி ஆர்ஜவசபளித திவ்யைச்வர்யத்தை யநுஸந்தித்த வாழ்வார்" என்றெழுதி ஒருவாறு துயர் தீர்ந்தார் பரகாலஸ்வாமி. (ஆர்ஜவ சபளித) என்ருல் என்ன அர்த்தமோ!; அவரைத்தான் கேட்கவேண்டும். ஆர்ஜவத்திற்கும் ஐச்வர்யத்திற்கும் என்ன ஸம்பந்தமோ? அது தொலையட்டும்.

28. ஸமீபகாலத்தில் பரகாலயதீந்த்ரக்ரந்தமாலாயாம்—பகவத்விஷயம் என்று அச்சிட்டபரகாலமடம் "துணிந்த கட்டைக்கு துக்கமில்லை" என்று கொண்டு துணிந்து *ஓடும்புள்ளேறி* இவையுமவையும் என்கிற இரு திருவாய்மொழிகளினுடையவும் ஆருயிரப்படியையே உருமாற்றி விட்டது. *ஓடும் புள்ளேறியாருயிரப்படியில் "ஸ்வருபமான ஆச்ரயணமுடைய ஈச்வரன் கரணத்ரயத்தாலும் கிட்டமாட்டாத சேதநரிடத்தில் ஆர்ஜவ குணத்தோடே ஆச்ரித ஸம்ச்லேஷம் பண்ணிக்கொண்டிருப்பானென்று அருளிச்செய்கிருர்" என்றும். *இவையுமவையுமாருயிரப்படியில் இப்போதிவர் காட்டும் வாக்யத்தையும் ப்ரக்ஷேபம் பண்ணிவிட்டது.

29. இங்ஙனே ப்ரக்ஷேபித்து அச்சிட்டது 1941ல் பிறகு 1943ல் அந்த மடமே ஆருயிரப்படியை மட்டும் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறது. முன்பு ப்ரக்ஷிப்தமானது அதில் உத்க்ஷிப்தமாய்விட்டதென்பதைக் கண்ணுடையார் காணலாம். குருகுலவாஸம் பண்ணி யறியாத இவர், இது ஸங்கதமா அஸங்கதமா என்று கூட ஆலோசிக்கமாட்டாமல் தன்னுடைய மருளை நம்மீதேற்றி அட்டஹாஸம் பண்ணுவதை ஆராய்ந்து புடைக்க ஆருமில்லையா?

30. மத்யஸ்தர்களாகக் கோரப்பட்ட பண்டிதர்கள் அறுவரும் கவனிக்க வேண்டிய திவ்வளவே. எந்த ஸ்ரீராமாநுஜன் ஸ்பெஷல் ஸஞ்சிகையை நோக்கி யதார்த்த ராமாநுஜன் இவரால் எழுதப்பட்டதோ அந்த ஸ்ரீராமாநுஜனிலுள்ள முக்கியமான இதையெல்லாம் அபலாபம் செய்து விட்டு அட்டஹாஸம் செய்கிருரிவர்; உண்மையான பாண்டித்யமிருந்தால் இதைப்பற்றி பதிலெழுதி எம்மை அடிமை கொள்ளட்டும். அதற்கு வழியில்லை. கிடந்துறங்கட்டும்.

உலகில் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் கவனிக்க வேண்டிய விஷயமிது. தேசிகன் பெரியவாச்சான்பிள்ளையையே பகவத்விஷயாசார்யராகக் கொண்டு அவருடைய வியாக்கியானத்தையே உபஜீவித்து தாத்பர்யரத்னாவளீ ஸாரங்களைப்பணித்தார் என்பது நமது கல்வெட்டான நிரூபணம். இந்த நிருபணத்தை இவர் ஏழேழ்பிறவி தவம் புரிந்தாலும் அசைக்கவும் முடியாது. முடிந்தால் ஒருகை பார்க்கட்டும். இதை விட்டு வேறு ப்ரஸங்கங்களில் காடு பாய்வதன் மருமத்தை மத்யஸ்தர்கள் உணருவர்கள். உலகமுழுது முணரும்.

## அபந்தக்களஞ்சியத்தில் ஸுபந்தமானது ஒன்றே

31. தேடித் தேடிப் பார்த்தாலும் உண்மையான விஷயம் ஒன்று கூடக் கிடைக்கமாட்டாத இவரது சுவடியில் உண்மையுரையொன்றுள்ளது. அதாவது

"இதுக்கு அது தெரியாது இது தெரியாது எதுவும் தெரியாது''

என்றெழுதியிருப்பதுண்டே இது "ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம்' என்னத்தக்கது.

32. ஏதோ சில தெரிபுமென்கிறார். உண்மையில் அதுவும் தெரியாது. ஆசார்ய ஸார்வ பௌமர் "அஜ்ஞாநாம் அஹமக்ரணீ. அத ச மாம் மந்யே ப்ருசம் பண்டிதம் என்கிறார். அதே போல ஜ்ஞானலேச ஹீநனாயிருக்கச்செய்தேயும் நான் செருக்குக் கொள்வதில் குறையில்லை. "கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது மலையளவு" என்கிற உலகவசனம் பரத்வாஜ மஹர்ஷியை நோக்கித் தோன்றியது. அவர் கதை அப்படியிருக்க நாம் எவ்வளவிலோம்.

33. ஸஹஸ்ரநாமத்தில் எம்பெருமானுக்கு அவிஜ்ஞாதா என்றொரு திருநாமமுள்ளது. நாமும் அவனோடு ஸாம்யம் பெற்று அவிஜ்ஞாதாவாகவே யிருக்கத் தடையில்லை. இது பழிப்பன்று.

34. பாரமார்த்திகஸத்யம், வ்யாவஹாரிகஸத்யம் என்று இரண்டுண்டே, அதில். பாரமார்த்திகஸத்யமிது. வ்யாவஹாரிகஸத்யஸ்திதியை அடுத்தபடி தெரிவிக்கப்போகிறோம்.

35. தம் பெருமை கூறுமிவர் "அதிதமத்யாபிதம் ஆர்ஜிதம் யச:'' என்கிறார். "ரகுவம்ச ராமோதந்தாதிகம் படிதம் பரடிதம்' ஆர்ஜிதம் யச:'' என்று தாராளமாக எழுதிக் கொள்ளலாமிவர். "அத்யாபிதம் மயா" என்று ஒருவர் சொல்லிக் கொள்ள வேணுமானால் அவர் அத்யாபகரென்று பெயர் பெற்றிருக்கவேணும். அத்யாபக: என்கிற நாமதேயம் (பங்கஜாதிவத்) யோகரூடி பெற்றது. 'ச்ருதி சதசிரஸ்ஸித்தம் அத்யாபயந்தி" என்ற பட்டர் ஸ்ரீஸூக்திக்கு ஏற்ப அந்நாள் தொடங்கி ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் வழங்கிவரும் அத்யாபகவ்யபதேசம் ஏழேழ்பிறவி தவம் புரிந்தாலும் இவர்க்குக் கிடைக்கமாட்டாததென்பது சிலா லிகிதம். ஆகவே (படிதம் பாடிதம் ஆர்ஜிதம் யச:) என்று வேணுமானால் சொல்லி மார்பு தட்டிக் கொள்ளட்டுமிவர் எதிர்ப்பாரில்லை.

36. கீழே ப்ரஸ்தாவித்த வ்யாவஹாரிக ஸத்யஸ்திதியை இனிக் கேண்மின் நன்னூலாசிரியர் "தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும், தான் தற்புகழ்தல்

தகுதியன்றே" என்று முன்னங் கூறி, உடனே "மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கிலும், மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும், தன்னை மறுதலை பழித்தகாலையும், தன்னுடையாற்றலுணராரிடையினும், தன்னைப் புகழ்தலும் தகும் புலவோற்கே." என்றார். "மத்த: ப்ரத்யவர: கச்சித் நாஸ்தி ஸௌக்ரீவஸந்நிதௌ" என்று சொல்லவிருக்கிற திருவடி "பந்நகாசந மாகாசே பதந்தம் பக்ஷிஸேவிதே, வைநதேயமஹம் சக்த: பரிகந்தும் ஸஹஸ்ரச:" என்றார். "அமர்யாத: க்ஷுத்ர:...ந்ருபசு:" என்று சொல்லிக் கொள்ளுகிற ஆளவந்தார் "ந வயம் கவயஸ் து கேவலம் ந வயம் கேவலதந்த்ர பாரகா:, அபி து ப்ரதிவாதிவாரண ப்ரகடாடோபவிபாடந க்ஷமா:" என்று கர்ஜித்தார்.

37. இந்த சுலோகத்தை இக்காலத்தில் சொல்லிக்கொள்ள வேணுமானால் நாமொருவரே அதிகாரியென்பதைசிங்ககர்ஜனையோடு சொல்லுகிறோம். முற்காலத்தில் ஒரு மஹாபண்டிதர்—"அநாராத்ய காளீம் அநாஸ்வாத்ய கௌளீம் விநா மந்த்ர தந்த்ரை ருதே சப்த சௌர்யாத், ப்ரபஞ்ச ப்ரஸித்த ப்ரபந்த ப்ரவக்தா விரிஞ்ச ப்ரபஞ்சே மதந்ய: கவி: க:?" என்று சொல்லிக் கொண்டாரென்று ப்ரஸித்தம். இந்த ச்லோகமும் அவருக்கடுத்தபடி நாமே - நாமே சொல்லிக்கொள்ளத் தகும். "விம்சத்யப்தே விச்ருத நாநாவி தவித்ய:" என்றும் நாம் சொல்லிக்கொள்ளத் தடையில்லை.

38. ஸ்ரீஹர்ஷகவி நைஷத காவ்யத்தில் "அதிதிபோ தாசரணப்ரசாரணை: தசாச் சதஸ்ர: ப்ரணயந் உபாதிபி:" என்கிறச்லோகத்தினால் காட்டிய சதுர்தச வித்யா பாரங்கதத்வமும் நம்மிடத்தில் குறையற்றது. ✳ பஞ்சாசார்யபதாச்ரித; * என்னப்பெற்ற மஹா சார்யரைப்போலே நாமும் ஆசாரியர்கள் ஐவரை அடிபணிந்து கற்கவேண்டியதெல்லாம் கற்றோம். கல்வியின் பயனையும் கல்மஷமறப்பெற்றோம்; "அஸதாம் கர்வோபி நிர்வாபித:" என்றுஸாதித்த தேசிகன் இவர்போல்வாருடைய செருக்கையடக்கினது ஸாவசேஷமாயிருந்தபடியால் அவருடைய நியமனங்கொண்டே சேஷபூரணம் பண்ணிவருகிறோம். இதனாலுண்டான வயிற்றெரிச்சல் அபரிஹார்யமாயிருப்பதனாலேயே "இது திருமலையில் பங்கமடைந்தது, மன்னார் குடியில் இல்லாததைச் சொல்லி ஏச்சுக்கிடமாச்சுது" என்றிப்படி சில பொய்க்கதைகளைக் கட்டிச் சில பாமரர்களை மயக்க எழுதியுள்ளார். எவ்வளவும் எழுதட்டும்.

39. எங்கும் நமக்கு பஹுமானமே யொழிய வேறொன்றுக்கு ப்ரஸக்திலேசமும் கிடையாது. மதாந்தரஸ்தர்களிடையே நாம் அவர்களுடைய மதக்ரந்தங்களை யெடுத்துக் காட்டிஅவர்களை வாய்மூடச்செய்து வருகிறோமேயொழிய வேறில்லை. இதைத் தென்னாடும் வடநாடும் எந்நாடும் அறிந்துள்ளது "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:" என்ற கீதாச்லோகத்தின் சங்கரபாஷ்யத்திலே மன்னார்குடி ஸதஸ்ஸில் நாம் நடத்தின சர்ச்சைஇன்னதென்பதே இவர்க்குத் தெரியாது; நாம் நிற்குமிடங்களில் நமது நிழலுக்குக் காதவழிக்கு அப்பாலோடி நிற்குமிவர்க்குத் தெரியவும் ப்ரஸக்தியில்லை.

40. நாம் ஸதாசார்யஸன்னிதியிலே க்ரஹித்த அர்த்த விசேஷங்கள் எங்கும் நம்மை பஹுமானமடைவிப்பவையேயன்றி விபரீதம்செய்ய அவகாசலேசமுமில்லை. இதை நாம் எழுத வேண்டியதில்லை; ஊரும் நாடுமுலக முழுணரும். சென்னையிலுள்ள உயர்நீதிபதிகளும், தலைநகரிலுள்ள உயர்நீதிபதிகளும் சென்னை கவர்னரும் மற்றும் பலபல பிரமுகர்களுமன்றோ வெளியிட்டுள்ளார்கள்.

41. இப்போது ஒரு ஸம்வத்ஸரத்திற்குள் (1971 ஆகஸ்டில்) நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியை நினைவூட்டுகிறோம். அலஹாபாத் பாரதீபரிஷத்தைச் சேர்ந்த மஹா பண்டிதோத்தமர்கள் இக்காலத்து வித்வான்களுள் ஏழு சிறந்த வித்வான்களை ஸப்தர்ஷிகளாகத் திரட்டி பஹுமானிக்கவேணுமென்று ஒரு பெருங் கூட்டத்தில் நிச்சயித்து காச்மீரத்திலும் நேபாளத்திலும் பீஹாரிலும் ஆறு வித்வான்களைக் கண்டெடுத்து, தென்னாட்டுக்காக (சென்னைமாகாணத்திற்காக) காஞ்சீ அண்ணங்கராசாரியரென்கிற ஒரு வ்யக்தியையே தேர்ந்தெடுத்து உபராஷ்ட்ரபதிமூலமாக மஹா மஹிமோபாத்யாய விருதையளித்து மிகச் சிறந்த ஸம்மானங்கள் செய்தனர்.

42. ஸம்ஸ்க்ருதம் தமிழ் தெலுங்கு ஹிந்தி ஆகிய நான்கு பாஷைகளிலும் நாம் இயற்றி வெளியிட்டிருக்கிற நூல்களையெல்லாம் அப்போது ஒரு மாதத்திற்கு முன்னாடியே அந்த பாரதீபரிஷத்தினர் வரவழைத்துக்கொண்டு அவ்விடத்துப் பெரிய ஹாலில் எக்ஸிபிஷன் வைத்தார்கள். அவர்களுக்குத் தமிழும் தெலுங்கும் தெரியாதாகையாலே ஸம்ஸ்க்ருதத்திலும் ஹிந்தியிலும் நாம் இயற்றி வெளியிட்டிருந்த நூல்களில் சிலபல பகுதிகளை உபராஷ்டிரபதி ஸபையில் வாசித்துச் செய்த ஆந்தோளனங்கள் அபரிமிதம்.

43. நாலாயிரதிவ்யப்பிரபந்தங்களுக்கெல்லாம் நான்கு பாஷைகளிலும் நரமெழுதி அச்சிட்டுள்ள வியாக்கியானங்கள் நான்கு திசைகளிலும் பரவியுள்ளன. "பரகீய யசோவஹ்நி தக்த ஸர்வாங்கஸஞ்சயா:" என்னப்பட்டவர்களில் முன்னணியில் நிற்பார்க்கு இவை தெரியாமலில்லை. "ஈர்ஷ்யாஸூயா பரவசமநஸாம்" என்பதற்கு மேலுள்ளதை நாம் எடுத்துக்காட்ட வேணுமோ?

— ஸபாப்ரவேச ஸமாரோஹங்கள் —

44. வைகுண்டவாஸியான ஸ்ரீமத் ஆஸூரி. சின்ன ராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கும் நமக்கும் *அத்யமே பத்யார்த்த விஷயமாக க்ரந்த சர்ச்சை நடந்ததுண்டு. அப்போது நாமெழுதி வெளியிட்ட க்ரந்தங்கள் இன்னும் விளங்குவனவேயன்றி ஒன்றும் மறைந்ததில்லை. ஸபையில் வந்து வாதம் செய்ய அவர் நம்மைக் கையைப்பிடித்திழுத்ததாகவும் நாம் திமிறிக்கொண்டு ஓடிவிட்டதாகவும் ஒரு பொய்ச் செய்தி யெழுதி இதனால் தம்முடைய வயிற்றெரிச்சல் தீரப்பார்க்கிறாரிவர். அப்போது நாம் "அத்யமே பத்யார்த்த சததூஷணீ" என்றொரு ஸம்ஸ்க்ருத நூலெழுதி அதன் முதல்பரிச்சேதத்தை வெளியிட்டோம். இந்தவிவாதம் வளர வேண்டாமென்று ஸ்ரீமத் பெரிய ராமாநுஜாசார்ய ஸ்வாமி ஸஹ்ருதயராய் நியமிக்க அவ்வளவோடு சாந்தமாயிற்று. இந்த அஸூயுவின் பேச்சு அபத்தம்.

— வாதஸபைகளுக்கு நாம் அஞ்சுவோமல்லோம் —

45. நாம் வேதாத்யயநஸர்வஸ்வ மெழுதி வெளியிட்டபோது திருக்குடந்தை அக்நிஹோத்ரிப்ரப்ருதிகள் ஒரு வாக்கின் ஸ்வாமிகள் காஞ்சீபுரத்திற்கு வந்து வைசாகோத்ஸவத்தில் ஆரணி ஜாகீர் மாளிகையில் மஹாஸபை கூட்ட நிச்சயித்து நமக்குத் தெரிவித்தார்கள். அவர்கள் பலரும் நான் ஒருவனுமாக இரண்டு நாள் ஸபை நடந்தது. ஜகத் ப்ரஸித்தரான வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கா

4

ரவர்கள் தலைமை வஹித்து, நமது ஸர்வஸ்வநூலின் ப்ரமேயத்தை முந்துற முன்னம் நாம் உபந்யஸிக்கும்படி கோரினார்கள். இரண்டுமணி காலம் நாமெடுத்துரைக்கக் கேட்டு "இதில் விவாதம் விளைய ப்ரஸக்தியே யில்லையே. அண்ணங்கராசாரியருடைய பாண்டித்யத்தை வேதத்தில் செலுத்தியிருப்பது மெச்சத் தகுந்ததேயொழிய இப்படி ஸபை கூட்ட வேண்டிய அவசியமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. என்று சொல்லிக் கொண்டே எழுந்துபோய்விட்டார். இது நடந்தது 1930-ஆம் வருஷத்தில்; இற்றைக்கு 42 வருஷமாகிறது; அன்று முதல் இவருடல் வேகிறது.

— ராஜமன்னார் ஸன்னிதி ஸதஸ்ஸு —

46. மன்னார்குடி அக்ரஹார ப்ரடசாலையில் வேதவாத்யாராக இருந்த துரைஸாமி கனபாடி என்னுடைய ஸர்வஸ்வ க்ரந்தத்தைப் பார்த்தவுடனே ஆனந்தம் பொங்கி அபரிமிதமாக ப்ரசம்ஸித்தெழுதிவிட்டார். அது மஞ்ஜுபாஷிணீ பத்ரிகையில் வெளிவந்தது. அதுகண்ட திருக்குடந்தை ஸ்வாமிகள் அவரைக் கடிந்தார்கள். அதன்பிறகு அவர் "நான் மேலெழுந்தவாரியாகப் பார்த்து ப்ரசம்ஸித்துவிட்டேன்; உட்புகுந்து பார்த்ததில் அநுபபத்திகள் தோன்றுவிதால் இவ்வூரில் ஒரு ஸதஸ்ஸு நடத்த எண்ணுகிறேன்; எழுந்தருள முடியுமா? எப்போது ஸௌகரியம்? தெரிவிக்கவேணும்" என்று எழுதியிருந்தார். "இதற்கு நாள்பார்க்க வேண்டிய அவஶ்யமில்லை; நாளையிரவு புறப்பட்டு மறுநாள் காலை அவ்விடம் வந்து சேருகிறேனென்று தெரிவித்துவிட்டு அப்படியே சென்று சேர்ந்தேன். இடையில் ஒரு நாள் அவகாசம் கொடுத்திருந்தபடியால் அவர் திருவையாறு சென்று அங்கிருந்து உவே. ஈயுண்ணி ஸீமாச்சார் ஸ்வாமி யென்கிற நையாயிகரை அழைத்து வந்தார். அவர் வேதவார்ஸனையே அறியாதவர். கைக்கபிக்கவென்று ஏதோ பேசிவிட்டு எழுந்துபோய்விட்டார். அங்கு நடந்த செய்திகளை சேனங்குளம் அண்ணுத்துறை கனபாடிகள் அப்போதே யெழுதி வெளியிட்டிருக்கிறார். அவர் முதலில் நமக்கு விமதராயிருந்து பிறகு என்னுடைய நிருபணங்களை நன்கு புரிந்துகொண்டு "இதில் வேதாப்யாஸ ஜடர்கள் பிரவேசிப்பது வீண்" என்று நிலையிட்டு நமது ஸர்வஸ்வ நூலின் வழிகளைத் தாமே ஆங்காங்கு பிரசாரம் செய்துவந்தார். இது ஏடேறியுள்ளது.

— ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் —

47. இவர் கும்பகோணவாஸி. சிறந்த பண்டிதர். மஹாமஹோபாத்யாய விருதுபெற்றவர். நமக்கு இளமையிலிருந்து ப்ராண நிர்விசேஷராயிருந்தவர், இவரையும் வேதவிவாதத்தில் ஈடுபடுத்தி ஒன்றிரண்டு வருஷகாலம் நம்மோடு எதிரம்பு கோக்கச் செய்திருந்தனர். பிறகு அவர் திருச்சி ஏ. வி. கோபாலாசாரியரைப் போலவும் சேட்லூர் நர்ஸிம்ஹாசாரியரைப்போலவும் க்ஷாமணம் செய்துகொண்டு பழைய ஸௌஹார்தத்தைப் புதுப்பித்துக் கொண்டது அப்போது வெளிவந்து கொண்டிருந்த ஆர்யதர்ம பத்ரிகையில் உலகம் பரவ விளங்கிற்று. எல்லாம் ஸாக்ஷிகம்.

— திருப்பதி கபிஸ்தலம் ஸ்வாமீ —

48. திருப்பதி புரிசை ஸ்வாமியின் ப்ரதான சிஷ்யரான ஸ்ரீமத் கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி நம்முடைய வேதாத்யயந ஸர்வஸ்வத்தைக் கடாக்ஷித்தருளியும், பல ப்ரகரணங்களில் நம்மையே வாசிக்கச் சொல்லிக் கேட்டும் உடலுமுள்ளமும் பூரித்து "அண்ணங்கராசாரியர் போயிருக்கிறவழி மிகச் சிறந்தது" என்று நிரூபித்து அருளிய அபிநந்தன பத்ரிகை வெளிவந்தபின்பு இந்த விவாதம் ஓய்ந்தது. இந்த நபர் அந்த கபிஸ்தலம் ஸ்வாமியிடம் சென்று "நாங்கள் பலர் தலை வணக்கமடையும்படியாக தேவரீர் இப்படி அபிநந்தன பத்ரிகை ஸாதிக்கலாமா?" என்று கத்தினபோது அந்த மஹாஸ்வாமி விசாலமான திருவுள்ளங்காட்டி ஸாதித்த வார்த்தைகள் பொன் தகட்டில் பொறிக்கத்தக்கவை.

— பண்டிதரத்னம் லக்ஷ்மீபுரம் ஸ்வாமி —

49. மைஸூர் ஸம்ஸ்தான மஹாவித்வானுயிருந்த லக்ஷ்மீபுரம் ஸ்வாமியும் ஸர்வஸ்வ க்ரந்தத்தைப் பரிசீலித்து "வித்வான்களுக்கே போக்யமாக அண்ணங்கராசாரியர் ஸ்வாமி எழுதியுள்ள ஸர்வஸ்வ க்ரந்தத்தில் வேதாப்யாஸ ஜடர்கள் பிரவேசித்து சர்ச்சை செய்வது அத்புதம்" என்றெழுதி வெளியிட்ட பிறகு இந்த வேத விவாதம் அறவே ஓய்ந்தது. நாற்பது வருஷங்களுக்குப் பிறகு இதை இவர் கிளப்புவதும் பொய்க் கதைகளை யெழுதுவதும் பாமரர்களையும் மயக்கமாட்டாததே. ... *

# விரலுக்குத் தகாத வீக்கங்கள்

50-54. அஜ்ஞானத்தின் ப்ரபேதங்கள் நான்கு. அநுதயம், ஸம்சயம், விபர்யயம், விஸ்ம்ருதி-என்பன. அநுதயமாவது அடியோடு அறியப் பெறுமை. ஆஸேசநகம் என்றால் என்ன? என்று கேட்டால் இப்பதம் கேட்டதில்லை, பொருள் தெரியாது' என்பர். இங்ஙனே பலபல, இதை அநுதயவகுப்பில் சேர்ப்பது. (2) ஸம்சயமாவது நிச்சயமான அறிவில்லாமை. சணகம் என்றால் என்ன? என்று கேட்டால் 'உப்போ, கடலையோ—இரண்டிலொன்று; ஐயமாகவுள்ளது என்பர். (3) அந்தர்வாணி யென்றால் என்ன? என்று கேட்டால் ஊமைக்குப் பெயர் என்பரேல் இது விபரீத நிச்சயத்தின்பாற்படும். (4) விஸ்ம்ருதியாவது மறப்பு. இதற்கு விவரணம் வேண்டா. இங்ஙனே நால்வகைப்பட்ட அஜ்ஞானங்களுக்குமேல் மிகவும் அதிசயிக்கத்தக்க ஒரு அஜ்ஞானமுள்ளது. அது ஸ்வாஜ்ஞாநாஜ்ஞான மெனப்படும். பலபல விஷயங்களில் தனக்கு அஜ்ஞானம் அபரிமிதமாகவே யிருந்தும் அதை அடியோடு தெரிந்துகொள்ளாமை. இப்போது நம்மிடம் சிக்கிக்கொண்டிருக்கும் நபர்க்கு இந்த அஜ்ஞானம் அளவுகடந்துள்ளது. அதனால்தான் தான் தலையிடத்தகாத விஷயங்களில் இவர் மிகமிகத் தலையிடலாகிறது.

55. வேதம், வேதபாஷ்யம் திருப்பல்லாண்டு, திருநெடுந்தாண்டகம், விட்டுணுசித்தன், பிரபந்தசாரம் வம்பவிழ்கோதை, பண்ணுதடேக்ஷு, பரகதஸ்வீகாரம் என்றிப்படிப்பட்ட விஷயங்களில் இவர் தலையிட்டுக் கொக்கரிப்பது மிகவும் சோசநீயம்.

56. இப்படி சோசநீயமென்று மட்டுமெழுதி நாம் விட்டுவிடுவோமல்லோம். ஒவ்வொன்றையும் அலசியலசி ஆராய்ந்து உதறித்தள்ளித் தொலைத்தே தீருவோம். ஆனால் இவை புதிய விஷயங்களல்ல. நமது பல புத்தகங்களில் நெடுநாளைய சர்ச்சையாக ஏறிக்கிடப்பவை இவை. ஒவ்வொன்றிலும் ஸாரமாகச் சிறிதே வரைந்திடுவோம்.

57. உலகில் புதிதுபுதிதாக நபர்கள் தோன்றிக்கொண்டேயிருப்பதால் பழைய விஷயங்கள் புதியவர்களுக்குத் தெரியமாட்டாமையால் அவர்களுக்கும் தெரியட்டுமென்றே இவர் நினைத்து என்றைக்கோ முடிந்து நீறுகி யொழிந்த விஷயங்களுக்கு இன்னமும் உயிர் இருப்பதுபோல் பாவனைசெய்து செத்துப்போன விஷயங்களையே திருப்பித் திருப்பியெழுதி வருகிறார். புதிய விஷயம் ஒன்றேனுமுண்டாவென்று ஒவ்வொருவரும் பார்க்கலாம். ஆனால் நாம் புதிய புதிய பிரமாணங்களையே காட்டுவோம்.

58. ஒருவன் "நான் ஐந்நூறு வீரர்களின் கால்களையெல்லகம் இதோ வெட்டி விட்டு வருகிறேன்" என்றான். "தலைகளை வெட்டாமல் கால்களை ஏன் வெட்டினாய்? என்று கேட்க "மூன்று மாதங்களுக்கு முன்பு தலைகளையெல்லாம் ஒருவர் வெட்டி விட்டபடியால் நான் இன்று கால்களை வெட்டி விட்டேன்" என்றானும். அதே ரீதியில் தான் இவர் செய்யும் கண்டனங்கள். இதில் ஸந்தேஹகந்தமுமில்லை.

— ஒரு பரமஸந்தோஷம் —

59. எண்ணூற்றுக்கு மேற்பட்ட என்னுடைய நூல்களையும், ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை (283வரை) ஒவ்வொன்றையும் இவர் கண்ட பாடம் செய்து வைத்துக் கொண்டிருப்பவர் என்பது இவரது சுவடியில் வரிதோறும் தெரிவதனால் இதற்கு நாம் எவ்வளவு ஸந்தோஷப்பட்டாலும் போதாது. நம்முடைய சிற்சில நூல்களை மட்டும் வாசித்துத் தரித்து வைத்துக் கொண்டாலே போதுமானது; நமது நூல்களெல்லாவற்றையும் அல்லும் பகலும் பாராயணம் செய்து அவற்றிலேயே போதைப்போக்கி வருமிவருடைய பாக்கியமே பாக்கியம். இந்த பாக்கியம் படைத்தவர்களில் இவரை அத்விதீயராகவும் ஸ்வஸத்ருசதரித்ரராகவும் மதிக்க வேண்டும்.

60. கீதையில் "அபிசேத் ஸுதுராசாரோ பஜதே மாம் அநந்யபாக், ஸாதுரேவ ஸ மந்தவ்ய:" என்றவிடத்தில் (மந்தவ்ய:) என்றதற்கு (எண்ணத் தகுந்தவன்) என்றுரைத்தார் சங்கராசாரியர்; ஸ்வாமி ராமாநுஜரோ வென்னில் [பஹுமந்தவ்ய:] என்றிட்டு "பஹுமானிக்கத்தக்கவன்" என்று விலக்ஷணமான பொருளுரைத்தார். அவ்வண்ணமாகவே இவர் பஹுமந்தவ்ய கோடியிலே சேர்ந்தவராவர். எதற்காக? நம்முடைய வாங்மயங்களெல்லாவற்றையும், வேதத்தைச் சந்தை சொல்லி உருச்சொல்லி நெட்டுருப்போட்டு தரித்து வைத்துக்கொள்ளுவாரைப் போலே தரித்து வைத்துக்கொண்டிருக்கிறாரே, அதற்காக.

61. ஒருவர் என்னைக் கேட்டார்; *கங்கை கங்கை யென்றவாசத்தாலே கடுவினை களைந்திடகிற்குங் கங்கை* என்று பெரியாழ்வார் ஸாதிக்கிறார்; கங்கையென்று உச்சரித்தாலுங்கூட ஸகல பாபங்களும் தொலைந்து ஸத்கதியுண்டாகும் என்று

நின்றது; மத்ஸ்ய கூர்ம மகர திமிங்கிலாதிகள் ஸதா ஸர்வதா கங்கையில் வாழச் செய்தேயும் அவற்றுக்கு ஏன் ஸத்கதி யுண்டாகவில்லை? பரஹிம்ஸையிலேயே ஊன்றியிருக்கின்றனவே! இதற்கு என்ன காரணம்? என்று (கேட்டார்); இதை எதற்காக் கேட்கிறீர்? என்றேன். அப்போது சொன்னரவர்—"தேவரீருடைய சிற்சில நூல்களை வாசித்தவர்களுக்கெல்லாம் தெளிந்தஞான முண்டாயிருக்கக் காண்கிறோம்; தேவரீருடைய ஸகல நூல்களையும் வாசோவிதேயமாகக் கொண்டிருக்கிற இவர்க்குமட்டும் ஏன் அந்த பாக்யமுண்டாகவில்லை? என்று கேட்பதற்குப் பரியாயமாக இதைக் கேட்கிறேனென்றார். அவர்க்குச் சொன்னேன்—"தண்டேன் நுகரா மண்டூகம் தண்டாமரையினுடன் பிறந்தே, வண்டே கானத்திடைப் பிறந்தும் வந்தே கமலமதுவுண்ணும்" என்று.

## வேதத்தில் நமது பரிச்ரமம் கேளீர்!

62. தைத்திரீயயஜுஸ் ஸம்ஹிதை ஸப்தகாண்டங்களையும் நெடுநாள் குருகுலத்தில் வாழ்ந்து பதக்ரம ஜடாதிகளுடன் ஓதினவர்களுக்கும் பலவகையான ஸந்தேஹங்கள் தோன்றக்கூடியதுண்டு. அந்த ஸந்தேஹப்ரகாரங்களைச் சுருக்கமாக முன்னம் தெரிவிக்கிறேன்.

63. ஆகாராந்தமாக ஸம்ஹிதையில் காணப்படும் பதங்களில் மூன்று விதமான ஸந்தேஹங்கள்; இது ஆகாராந்தமேதானா? மேலே விஸர்க்கமுமுண்டா? அல்லது ஐகாராந்தமா? என்று மூவகையான ஸந்தேஹங்கள் தோன்றும். சில விடங்களில், இது ஆகாராந்தமேதானா? ஆகாரத்திற்கு அடுத்தபடி விஸர்க்கமுமுண்டா? என்று இருவகையான ஸந்தேஹமே தோன்றும். "உபா வாமிந்த்ராரநீ ஆஹுவத்யா உபா ராதஸஸ் ஸஹ மாதயத்யை", என்கிற இடத்தையெடுத்துக்கொள்வோம். இங்கு (உபா) என்கிற பதம் பதகாலத்தில் ஆகாராந்தமேதானா? மேலே விஸர்க்கமுமுண்டா? என்று ஸந்தேஹமுண்டாகக் கூடியது. விஸர்க்கமிருந்தாலும் அது ஸந்தியில் லோபிக்குமாகையாலே ஸந்தேஹத்திற்கு அவகாசமுள்ளது.

64. (உபா வாம்) என்பதை (உபௌ ஆம்) என்றும் பிரிக்கலாமே; அப்படியும் ஒரு ஸந்தேஹ சரீரம் வைக்கலாமே யென்னில், இது வேதவாஸனையேயில்லாத இவர்போல்வார்க்குத் தோன்றக் கூடிய ஸந்தேஹமேயொழிய குருகுலக்லிஷ்டர்களுக்குத் தோன்றக் கூடியதன்று. மேலே (ஆஹுவத்யா உபா) என்றவிடத்தில் (ஆஹுவத்யா) என்று ஆகாராந்தமான பதமா? (ஆஹுவத்யா:) என்று விஸர்க்காந்தமான பதமா? (ஆஹுவத்யை) என்று ஐகாராந்தமான பதமா? என்று மூவகையான ஸந்தேஹம் உதிக்கக் கூடியது. இத்தகைய ஸந்தேஹங்களுக்கு ஆஸ்பதமான இடங்கள் ஸம்ஹிதையில் நூற்றுக் கணக்காகவுள்ளன. சில பதங்கள் நியமேந ஆகாராந்தங்களே. சில பதங்கள் நியமேந (ஆகாரோத்தர) விஸர்க்காந்தங்களே. சில பதங்கள் க்வசித் ஆகாராந்தங்களாயும், க்வசித் விஸர்க்காந்தங்களாயுமிருக்கும். இத்தகைய பேதங்கள் அர்த்தத்தைப் பொறுத்ததேயாகும். ஆனாலும் அர்த்த விசாரத்தில் புகாமல் பதசரீர நிர்ணயம் மட்டும் காட்டுவதற்கு

ஒரு உபாயம் செய்துவைத்தன ஸப்தலக்ஷணதிகளான முன்னோர்களின் நூல்கள். வ்யுத்பத்தி யில்லாதவர்களுக்கு அவை இருக்கட்டும். சாஸ்த்ரஜ்ஞான ஸூரபித மதிகளான ப்ராஜ்ஞர்களுக்கு நாம் காட்டியுள்ள வழிகள் பண்டிதைக போக்யங்கள்.

65. ஒன்று பாருங்கள்; (கர்மணே வாம் தேவேப்யச் சகேயம்) என்றவிடத்தில் கர்மணே பதத்தில் ஸந்தேஹமுதிக்க ப்ரஸக்தியில்லை; *இஷேத்வாநுவாகத்தில் (கர்மண ஆப்யாயத்வம்) என்றவிடத்தில் ஏகாராந்தமா? விஸர்க்காந்தமா? என்கிற ஸந்தேஹம் உதித்தேதீரும். இங்கு முன்னே (ச்ரேஷ்டதமாய) என்றுள்ள விசேஷணத்தைக் கொண்டு தெளியலாம். ...இவ்வண்ணமாகவே நாம் ஆங்காங்கு ஸகல ஸந்தேஹங்களுக்கும் பரிஹாரபத்ததியைக் காட்டிவருகிறோம். ஆகவேதான் ஸ்ரீமத் கபிஸ்தலம் ஸ்வாமியும் லக்ஷ்மீபுரம் ஸ்வாமியும் போல்வார் அஸ்மதுபஜ்ஞமான இந்த பத்ததியை அஸூயையின்றி அபிநந்தனம் செய்ய ப்ராப்தமாயிற்று.

66. வேதமோதினவர்களும் வேதபாஷ்யபரிசயம் பண்ணினவர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களிற்காட்டில் ஸ்மார்த்தர்களில் விசேஷமாக விளங்குகின்றார்கள். அவர்களெல்லாரும் நம்முடைய ஸர்வஸ்வாதி க்ரந்தங்களை *ந பூதோ ந பவிஷ்யதி* யென்றுதான் கொண்டாடுகிறார்கள். ப்ரஹ்மஸ்ரீ. காலடி ஸுப்ரஹ்மண்ய கனபாடிகள், காசீ கனபாடிகள் இருவரும் சென்னையில் ஸூர்ய சந்திரர்கள்போல் விளங்கி வருகிறார்கள். அவர்களைக் கேட்டால் தெரியவரும்.

67. இவ்விடத்திற்கு "ரஸபரிமல ச்லாகாகோஷஸ்புடத்புடபேதநம் லவணவணிஜ: கர்ப்பூரோத்கம் கிமித்யபிமந்வதே" என்கிற யதிராஜஸப்ததி ஸூக்தி மிகப்பொருத்தமாக அநுஸந்தேயமாகும். வேதவைதேசிகரானவிவர் ரகுவம்ச ராமோதந்தாதிகளோடு நிற்கவமையுமென்று பலகால் சொல்லியுள்ளோம்.

68. மேலமாம்பலத்தில் சங்கர மடத்தில் வேதப்ரசாரம் அவிச்சின்னமாக நடந்து வருகிறது. அடிக்கடி பரிஷத்துகள் நடத்தி நினைவு மலர்களும் வெளியிட்டு வருகிறார்கள். அவற்றில் நம்முடைய வேத ஆராய்ச்சி வியாஸங்களை வேண்டிப் பெற்று நியமேந வெளியிட்டுவருகிறார்கள். இந்த அஸூயா பிண்டஸ்வாமியின் அஸூயைக்கு அஸ்து நித்யஸ்ரீ:.

## — பதபாடமும் — வேதபாஷ்யங்களும். —

69. நம்முடைய நாநாக்ரந்தச்ரேணிகளில் வேதபாஷ்ய பரிசீலனமென்பதுமொன்று; பட்டபாஸ்கரரும் ஸாயணருமான வேதபாஷ்யகாரர்கள் சில பல்விடங்களில் பதபாடத்தை அநுஸரியாமலும் பாஷ்யம் செய்திருக்கிறார்களென்று நாம் அவச்யம் கூறியிருப்பதுண்டு. சில்பலவிடங்களை எடுத்துக்காட்டி யிருப்பதுமுண்டு. அந்நூலை இவர் தமக்கு யாரே கொண்டுவந்து காட்டினதாக எழுதி, அந்த விஷயங்கள் தனக்குப் புரிந்துவிட்டதுபோலவுங் காட்டி "வேதபாஷ்யகாரர்கள் பதபாடத்தை அநுஸரிக்கவேண்டிய அவசியமில்லை" என்று இவர் மஹாவைதிகர் போல் எழுதுகிறார்.

— அஸ்வப்நஜ: — பட்டபாஸ்கரர் —

70. முதல்காண்டத்தில் *க்ருணுஷ்வபாஜ:* என்னுமநுவாகத்தில் ''அஸ்வப்நஜஸ் தரணயஸ் ஸுசேவா: அதந்த்ராஸ: அவ்ருகா அச்ரமிஷ்டா:'' என்கிற ருக்கில் (அஸ்வப்நஜ:) என்கிற பதத்திற்கு. ''அஸ்வப்நஜ இத்யஸ்வப்ந-ஜ:'' என்று பதபாடமோதின வைதிகர்களால் வேஷ்டந மோதப்பட்டு வருகிறது. இங்கு அர்த்தரீதியில் (அஸ்வப்நஜா:) என்று பஹுவசநாந்தமாக இருக்கவேணும். ஏகவசனமாக வுள்ளது. ''வசநவ்யத்யயச் சாந்தஸ:'' என்றெழுதிவிட்டார் ஸாயணபாஷ்யகாரர்.

71. பட்டபாஸ்கரரோவென்னில் அப்படி கொள்ளாமல் (அஸ்வப்நக், அஸ்வப்நஜௌ, அஸ்வம்நஜ:) என்று (அகாராந்த சப்தமாகக் கொள்ளாமல் ஜகாராந்த சப்தமாகக் கொண்டு) வசனவ்யத்யயத்திற்கு இடங்கொடாமல் பஹுவசனமாகவே வைத்து பாஷியம் செய்தார். இது மிகவும் உசிதவானதேயொழிய அநுசிதமானதன்று. அப்படியிருந்தும், உடனே என்ன எழுதினுர் தெரியுமே? ''பதகார அநபிமதத்வாத் அந்யதா வ்யாக்க்யாயதே'' என்றெழுதி ஸாயணபாஷ்யகாரருரைத்தபடியே உரைத்து முடித்தார். இந்த வாக்கியத்தை (அதாவது) ''பதகார அநபிமதத்வாத் அந்யதா வ்யாக்க்யாயதே'' என்கிற வாக்கியத்தை வேதவாஸனையற்ற இவர்க்கு நாம் காட்டுகிறேமல்லோம்; வேதபரிச்ராந்தர்களுக்குக் காட்டுகிறேம். இதனுல் பதபாடத்தை யநுஸரித்தே பாஷ்யம் இயற்றவேண்டுமென்கிற நியமத்தை பாஷ்யகாரர்தாமே ஸ்பஷ்டமாக ப்ரகாசனம் செய்துவைத்தாராயிற்று.

— ப்ரஹ்மா தேவாநாம் பதவீ: கவீநாம் —

72. பதபாடத்தை யநுஸரித்தே வியாக்கியானம் செய்யவேணுமென்றெழுதிய பட்டபாஸ்கரர் தாமே சில விடங்களில் பதபாட விப்ரதீபமாகவும் வியாக்கியானம் செய்துள்ளாரென்பதையும் எடுத்துக் காட்டியிருக்கிறேன். (3-4.) ''ப்ரஹ்மா தேவாநாம் பதவீ: கவீநாம் ருஷிர் விப்ராணும்'' என்றவிடத்தில் (பதவீ:) என்கிற பதத்திற்கு இரண்டு மூன்று வகையாக வியாக்கியானம் செய்துவிட்டு ''அநவதாரணுத் அநவக்ரஹ:'' என்றெழுதிவிட்டார். வேஷ்டனத்திற்கு அவக்ரஹமென்று பெயா. [பதவீ: என்பதற்கு வேஷ்டனமில்லை] என்று தெரிவித்தபடி, பதவீரிதி பத—வீ: என்று வைதிகவுலகமெல்லாம் ஓதாநிற்க இவர் இப்படி எழுதிவைத்தது ப்ரமத்தாலோ ப்ரமாதத்தாலோ விஸ்ம்ருதியாலோ ஆகவேண்டும். இங்கு நாமெடுத்துக் காட்டிய பங்க்திக்கு அது அர்த்தமன்று என்று யாரும் சொல்லமுடியாது.

— மிக வருத்தமாம் —

73. உபதேச ரத்தினமாலையைத் தாம் தூஷிக்கவேண்டாமலிருந்தும் தூஷிக்க நேர்ந்துவிட்டதாம்; அதற்காக மிக வருத்தமாம். யமன் பாசஹஸ்தனுன ஸ்வபுருஷனை நோக்கி ''பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந்'' என்கிருன்; இதை உச்சைர்கோஷத்துடனே சொல்லவேண்டியிருக்க, ''வததி யம: கில தஸ்ய கர்ணமூலே'' எனப்பட்டது. இதனை அநுவதிக்கிற திருமழிசைப் பிரானும் ''நமனும் தன் தூதுவரைக் கூவிச் செவிக்கு'' என்றருளிச்செய்தார். கர்ணதோடே ரஹஸ்யமாகச் சொல்ல வேண்டிற்றென்? என்று சங்கிக்கநேரும். இங்குப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்

செய்வது-"ராஜதார ப்ராவண்யநிஷேதமும் பிறரறியில் பொல்லாதிறே" என்றுள்ளது. உபதேச ரத்தினமாலையை தூஷித்தேனென்கிற இந்த அநுவாதமும் இவர்க்கு நரகஹேதுவாகும். எதுவும் இவரெழுதின மை உலருவதற்குமுன்னே பாறு பாறுக்கி நீறு நீறுக்கப்பட்டுவருகிறது. பிரபந்தசாரம் ஸர்வாத்மநா அபத்தம் கல்பிதம் என்று அசைக்க முடியாதபடி செய்துள்ள நிரூபணங்களுக்கு இது விடையாகாது. ப்ரத்யுத அதன் ஸாவத்யத்வமே நிலைநாட்டப்பட்டதாகும்.

— திருச்சந்தவிருத்தம் 127 பாட்டு —

74. இவர் தாம் இப்படி ஓரிடத்தில் எழுதிவிட்டாராம்; அது தன்னுடைய குற்றமன்றென்றும் ஸ்ரீமத் D. R. ஸ்வாமியின் குற்றமென்றும் மூதலிக்க வருகிறார். இத்தால் "புராண மித்யேவ ந ஸாது ஸர்வம்" என்கிற மஹாகவிச்லோகத்தின் சரம சரணத்திற்குத் தாம் லக்ஷ்யபூதர் என்று சிலாசாஸனம் செய்துகொள்ளுகிறார்.

— நாவகாரியம் — விட்டுணுசித்தன் —

75. ஸர்வாத்மநா வேதபாஹ்யனை—வேத அநதிகாரியான வொரு சாதியன் வேதபாட விசாரம் செய்யப் புகுந்தால் அவனுக்கு மறுமொழி கூற ஒரு வைதிகரும் முன்வரமாட்டார். அதேபோல நாமும் இதுபோன்ற விஷயங்களில் இவரை நோக்கிக் கூறுது தத்வஜிஜ்ஞாஸுக்களுக்குத் தத்துவமுணர்த்துகிறோம். * நாவகாரியம் சொல்லிலாதவர்* என்கிற திருக்கோட்டியூர்ப் பதிகம் எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம். இதில் அடிதோறும் மூன்று கனிச்சீரும் ஒரு காய்ச்சீரு மிருப்பதாக இவர் எழுதுவது தமிழ்நாட்டில் விலை செல்லமாட்டாதது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தினுள் ஒரு பாசுரத்திலும் கனிச்சீர் பயின்றது கிடையாதென்பது குருமுகமாக நாலாயிரமு மோதினவர்களுக்குத் தெரியும். கனிச்சீர்க்கு மேற்பட்டது நிழற்சீர். அதுவும் இயன்றதாம்படி சீர் பிரிக்கலாமிவர்? நாலாயிரத்தினுள் *சலங்கொண்ட விரணியன் பதிகம் பெரிது. திருநெடுந்தாண்டகப் பாசுரங்கள் பெரியன. இவற்றிலெல்லாம் காய்ச்சீர் மாச்சீர் விளச்சீர்களைக் காணமுடியுமே யொழிய கனிச்சீர் காணப்ரஸக்தியே யில்லை. பெரியாழ்வாருடைய பதிகங்களிலும் நாச்சியார் பதிகங்களிலும் விட்டுசித்தன் விட்ணுசித்தன் விட்டுணுசித்தன் (விஷ்ணுசித்தன் என்றுங்கூட) இஷ்டமானபடி சொல்லுவார் இல்லாமற்போகவில்லை. இந்த சுஷ்கவிசாரத்தினால் யாதொரு பயனுமில்லை யிவர்க்கு. பட்டபரிபவங்களுக்கு இதனாலா பரிஹாரமாகும்?

— கைங்கர்யத் தொடர்ச்சி —

76. ஆசார்ய ஸூக்திரக்ஷண கைங்கரியத்தைத்தான் நெடுநாளாகச் செய்துவருவதாகவும் மேலும் செய்துவரப்போவதாகவும் இவர் தெரிவிப்பது அபஹாஸ்யம். "செவிலிமேட்டு மாந்தோப்புக் காவல்காரன் கதை" ஒன்று தேரமுந்தூராண்டவன் ஸாதிப்பதுண்டு; இரண்டு காலும்மில்லாத வொருவனைக் கொணர்ந்து அவனுக்கு சொக்காய் நிஜார்கள் போட்டுக் கையில் தடியைக் கொடுத்து உட்கார வைத்திருப்பனும் மாந்தோப்புக்காரன். அனைவர்க்கும் இது தெரியுமாகையாலே தாராளமாகப் பழங்களைப் பறித்துக்கொண்டு போவார்களாம். "இதோ எழுந்து

வருகிறேன் பார்'' என்பனும் இந்த முடவன். ஓடிவாடாப்பா'' என்பராம் ஒவ்வொருவரும். அப்படிப்பட்ட ரக்ஷகரே இவரும்.

77. தேசிக திவ்யஸூக்தியை அஸமஞ்ஜஸமென்றே என்று அநுதாபங்கொண்டிலர். ''உடையவரும் கூரத்தாழ்வானுஞ் சேர்ந்து வடகலையா யிருந்த கோவில்களையெல்லாம் தென்கலையாக்கிவிட்டார்களென்று எழுதித்தொலைத்தோமே யென்று இதற்கும் அநுசயித்திலர். இவர் ஸம்ப்ரதாய ரக்ஷகராம். ஒரு பூனை எலிகளை ரக்ஷிப்பதாக ப்ரதிஜ்ஞைபண்ணி ருத்ராக்ஷமணிந்து ஓரிடத்தில் ஆஸனத்தில் அமர்ந்திருக்க, எலிகளெல்லாம் அதனை வலம்வந்துகொண்டே யிருக்குமாம்; கடைசியில் செல்லும் எலியைமட்டும் நித்யமும் பக்ஷிக்குமாம் ருத்ராக்ஷ மார்ஜாரம். அது என்றைக்கோ ஒருநாளில் தெரிந்ததாம். இவருடைய ரக்ஷணம் ஷோலாப்பூர் சுவடியிலிருந்து உலக மறிந்ததே.

— ஸ ஹி மந்ததாப: —

78. அப்பயதீக்ஷிதர் இயற்றிய வரதராஜ ஸ்தவத்தில் ''பாநுர் நிசாஸு'' என்று தொடங்கும் சுலோகத்தின் சரம சரணம் ''தாபம் பஜத்யநுதிநம் ஸ ஹி மந்ததாத:'' என்பது அவர் கூறினபாடம். அர்த்தமில்லாதபடி ''ஸ ஹி மந்ததாப:'' என்று தப்பான பாடம் வந்துவிட்டது. குவலயானந்தத்தில் தீக்ஷிதர் தம்மாலேயே உதாஹரிக்கப்பட்ட இந்த ச்லோகம் எல்லாப் பதிப்புகளிலும் தவறான பாடமாகவே விழுந்திருக்கிறது. நான் பதினான்காவது வயதில் திருத்தகப்பனாரிடம் (குவலயானந்தம்) வாசிக்கையில் மந்ததாத: என்கிற பாடம் அவரால் திருத்திக் கொடுக்கப்பட்டது. அப்போதே நான் இதை மஞ்ஜுபாஷிணியிலும் விஜ்ஞான சிந்தாமணியிலும் வெளியிட்டுப் பரிசுபெற்றிருக்கிறேன். அக்காலத்தில் இவர்க்கு அக்ஷராப்யாஸமும் ஆயிராது. இந்த பாடத்திருத்தம் முதன்முதலாக என் மூலமாகவே வெளிவந்ததென்பது ஸஸாக்ஷிகம். இங்கு இவரெழுதும் அஸம்பத்தோக்திகள் அபத்தங்களே. இதை நாம் வெளியிட்டிருக்கும் தேதியையும் இவர் குறிக்கும் தேதியையும் கொண்டு உண்மை கண்டறியவல்லாருளர்.

இப்படிமற்றும் பல விஷயங்களுள்ளன. அவற்றை இவர் தொடாமலே யிருப்பது க்ஷேமாய, மஹதே மஹியஸே ச க்ஷேமாய.

— ஸஹகாரிகாரண நைரபேக்ஷ்யம் —

79. எம்பெருமானுடைய ஷாட்குண்யத்தில் ஆறாவது குணம் தேஜஸ்ஸென்பது; அதன் ஸ்வரூபத்தை விளக்கி யருளாநின்ற பட்டர் ''ஸஹகார்யபேக்ஷமபி ஹாதுமிஹ ததநபேக்ஷகர்த்ருதா, ரங்கதந! ஜயதி தேஜ இதி ப்ரணதார்த்திஜித் ப்ரதிபடாபிபாவுகம்'' என்றார். இதனை யறியகில்லாதவிவர் செய்யும் ரோதனம் யாவஜ்ஜீவம் நெடுகச்செல்லுக.

— முக்கியமான மருளை மாய்த்தல் —

80. ''நாம் செய்யவேண்டியது ஒன்றுமில்லை, சோம்பேறியாய்த் திரியவேண்டியதே'' என்றும், ''நாம்செய்யும் தவறுகளையெல்லாம் எம்பெருமான் போக்யமாகக்

கொள்ளுகிறுன்'' என்றும் தென்ஞசாரியர்களின் கொள்கையாக இவர் உலகுக்குக் காட்டுவது இருளும் மருளும் மயக்கும் துயக்குமானது.. பட்டர் ''நித்யம் காம்யம் பரமபி'' என்கிற சுலோகத்தில் ''அஸங்கா: விதததி விஹிதம்'' என்று ஸாதித்து விட்டு உடனே ''ஸ்ரீரங்கேந்தோ ! விதததி ந ச தே'' என்ருர். இதுதான் தென்ஞசார்ய ஸித்தாந்தஸாரம். அவ்விடத்து நம்முடைய வியாக்கியானம் கண்டு தெளிவது. வாத்ஸல்யகுணத்தின் ஸ்வரூபத்தை ஆயிரந்தடவை எடுத்துரைத்தாலும் தெளியமாட்டாதவிவர் இப்பிறப்பைக் கலக்கத்தோடே தொலைக்கட்டும். ச்ருதப்ரகாசிகையில் ''ஸம்பந்த விசேஷாந்விதேஷு ப்ரீதி: ஸ்நேஹ:; யஸ்ய விபாகா: அஸ்தாநபயசங்கித்வம் தோஷாநவபாஸ: தோஷேபி குணத்வபுத்தி:'' என்றருளிச் செய்திருப்பதை ஒருஸமயம் நாம் திருச்சி ஏ. வி. கோபாலாசாரியர்க்குக் காட்டின போது ''ஐயோ! இதுகாறும் வாழ்நாளைப் பாழே கழித்தேனே! பகவத்குணமஹிமை தெரியாமல் மருண்டொழிந்தேனே'' என்று புலம்பினுர். இவர் புலம்ப ப்ரஸக்தி ஏது?

## — ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் —

81. எழுதுகிருரிவர் — நிரவத்யமாகவும் ஸுஸங்கதமாகவும் எழுதுவதில் தனக்கு ஒத்தாரும் மிக்காரும் இல்லையென்று இது கருவங்கொள்ளுகிறது. இதன் அஸமஞ்ஜஸ வாக்யரசனையில் ஒன்றை இதோ காட்டுகிறேன் பாருங்கள்'' என்று. (காட்டியிருப்பதற்கு, மேலே தினவடங்கச் சொல்வோம்.) ''இது கருவங்கொள்ளுகிறது'' என்ற வார்த்தை யுண்டே; இது ஸர்வாத்மநா ஸத்யம். *நீசனேன் நிறையொன்றுமிலேன்* என்ற ஆழ்வார் தாமே ஒரு பதிகம் பூர்த்தியாக ''எனக்கு எவ்வுலகம் நிகரே ?—எனக்கார்நிகர் நீணிலத்தே—எனக்கார்பிறர் நாயகரே !'' என்று தோள்தட்டிப் பேசினுப்போலே *ஸ்ரீவைஷ்ணவாநாம் கோஷ்டீஷு தத்தாஸ இதி விச்ருதரான நாமும் வாதிபீகர விருதுக்கேற்பத் தோள்தட்டியும் மார்பு தட்டியும் பேசப் பின்வாங்குவோமல்லோம். சக்ரவர்த்தி திருமகளைப்பற்றி *அஹம் வேத்மி மஹாத்மாநம்* என்று பேச ஒருவரே முன்வந்தார். நம்மைப்பற்றிப் பேசினவர்கள் எண்ணிறந்தவர்கள். *முதலாவார் மூவரென்ற கணக்கிலே ஒரு மூவர் பேச்சை மட்டும் இங்குக் காட்டுகிறேன்.

82. ஸ்ரீமத் பரமஹம்ஸ தென்பரை யாண்டவன் எழுந்தருளியிருந்த போது திடீரென்று ஒருநாள் நம்முடைய ஸம்ஸ்க்ருத த்ராவிடவாத க்ரந்தங்களையெல்லாம் அனுப்ப நியமித்தருள், அப்படியே அனுப்பினபிறகு அவற்றை முழுதும் கடாக்ஷித்தருளி ஸாதித்த ஸ்ரீமுகம் நம்முடைய பல நூல்களில் பதிப்பிக்கப்பட்டுள்ளது; இவரும் கண்ணுர ஸேவித்ததேயாம். அது இங்கு மறுப்திப்புச் செய்யலாகிறது; ''ஸ்ரீ. ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதீத்யாதி பிருதாலங்க்ருதாநாம் ப்ரதிவாதி மத்தகஜ பயங்கர கண்டீரவாணும் ஸ்ரீமதாம் அண்ணங்கராசார்யாணும் வாதப்ரதிவாத க்ரந்தஜாலம் அதிகதம். ஸ்ரீமதாசார்ய வர்யாணும் கடாக்ஷபாத்ரஞ்ச அபவத். ஸர்வம் ஆநுபூர்வ்யா கடாக்ஷிதவந்தஸ் தே குருசரணு ஏவம் ப்ரசசம்ஸு: — பஹு ஸுதர்க்க ஸச்சாஸ்த்ராநுஸாரி ப்ரமாண புஞ்ஜமஞ்ஜுளந் ஸஹ்ருதய ரஸிகஹ்ருத்ரஞ்ஜக நிரதிசயாச்சர்ய சைலீப்ரகும்பித வசநமணி மாலாலங்க்ருதாந் தர்சநாவஸரேஷு நவம்நவம் அத்யுத்ஸாஹஜநகாந் விவித விசித்ர விஷய

வர்க்காந் தர்சம்தர்சம் நிரவதிகதுஷ்டிம் அலபந்த. கிஞ்ச, ஏவமேவ யுஷ்மாகம் சேஷமாயுரபி நித்ய நிரவத்ய கைங்கர்யோபயுக்த தேஹாரோக்ய தநதாந்ய ஸம்ருத்திசாலி பூ யாத் இதி ஸ்ரீரங்கநாயிகாஸமேதம் ஸ்ரீரங்கநாதம் புந: புந: ப்ரார்த்தயே—இதி ஸ்ரீகார்ய துரந்தரா:.''

மிகவும் ஸரளபான இந்த வாக்ய ராசிகளுக்குத் தமிழ்மொழிபெயர்ப்பு வேண்டா. இத்தகைய பல விஷயங்களை வர்த்தமாந ஸ்ரீமதாண்டவன் திருவுள்ளமறியும்.

(2) ஜகத் ப்ரஸித்தராய் உத்துங்கபதவிகள் பலவும் வஹித்தவரான ஸ்ரீ உவே. S. வரதாசார்ய ஸ்வாமியின் அபிநந்தன பத்ரிகையில் ஒரு பகுதி;—

''ஸ்ரீ. உ. வே. வித்வான் அண்ணங்கராசாரிய ஸ்வாமியிடம் பெரிய சபைகளை ஸ்தம்பிக்கச் செய்யும் அதிசய சக்தியுண்டு. இவரது உபன்யாசங்களைக் கேட்கப் பெரிய கூட்டங்கள் சேருவது வழக்கம். பெரிய சபைகள் முன் இவர் ஸம்ஸ்க்ருதத்திலும், தமிழிலும், தெலுங்கிலும் உபந்யசிக்கவல்லவர்; சிலகாலமாக ஹிந்தி பாஷையையும் இவர் பழகுவதாகத் தெரிகிறது. இவர் மிகவும் வெற்றிகரமாகச் செய்து முடித்த மிக மிகப் பெரிய பணி என்ன வென்றால், ஸ்ரீ ராமாநுஜர், ஸ்ரீ நம்பிள்ளை, ஸ்ரீ வேதாந்த தேசிகர், ஸ்ரீ மணவாளமாமுனிகள் இந்நான்கு பெரிய ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களின் கிரந்தங்களை யெல்லாம் தொகுத்து ஒரு கோர்வையாக வெளியிட்டதே. இது இவர்சாதித்த ஓர் அரிய பெரிய காரியமாகும். ஆனால் இது இவருடைய வெளியீடுகளின் ஓர் பகுதியேயாகும். ஏனென்றால் ஹிந்தியிலேயும், ஸம்ஸ்க்ருதத்திலேயும் தமிழிலேயும் அறிவு பொருந்திய வியாசங்கள், சர்ச்சைகள், மத விஷயங்கள், தமது சொந்த கற்பனைகள் வியாக்கியானங்கள் இவைகளைக் கொண்ட அநேக பத்திரிகைகளை வெளியிடுவதிலேயே இவருடைய காலம் சென்று கொண்டிருக்கிறது''.

ஸர். எஸ். வரதாசாரியர்,
(ரிடைர்ட் பெடரல் கோர்ட் ஜட்ஜ்)

[கீழே நிதர்சித்த ஸ்வாமிகளிருவரும் வைகுண்டவாஸிகள்: உலகின் பரம பாக்கியத்தினால் நம்மிடையே விளங்கிவருபவரும் ஸஹ்ருதயரஸ்கமணி யென்று நாம் விருதிடப் பெற்றவரும் தைவஜ்ஞருமான ஸ்ரீமதுபயவே D. ராமஸ்வாமி ஐயங்காருடைய அமுத மொழிகள் காணீர்:—

''வாதப்போர் நடத்துவதில் நம் ஸ்வாமிக்கு வெகு உற்சாகம். இதனால் ஸ்வாமியாலும் ஸ்வாமி விஷயமாகவும் அநேக ரஸமில்லாத கிரந்தங்கள் உற்பத்தியாகியிருக்கின்றன வென்றாலும் இவற்றுக்கெல்லாம் காரணம் ஸ்வாமியின் அதி சக்தி வாய்ந்த குணாதிசயமென்றே சொல்லவேண்டும். இவ்வளவு சக்திவாய்ந்த ஒரு மஹா புருஷர் விஷயத்தில் அசூயையையும் பொறாமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம். ஆனால், எவ்வித வாதப்போரிலும் ஸ்வாமி பின்வாங்கவேமாட்டார், இவருடைய வாதமே கடைசியாக ஓங்கி நிற்கும். இந்த ரீதியில் அனேகம் உள்ளன. விஷயங்களைத் தேங்காய் உடைப்பது போல், வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று உடைத்துக்காட்டுவார்! இவை ஒருபக்கம் கிடக்கட்டும். ஸ்ரீவைஷ்ணவத்திற்காக இவர் செய்திருக்கும் செய்துகொண்டிருக்கும் பணி கணக்கிட முடியாதது. நம் தேசமெங்கும் ஆயிரக்கணக்கிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் கொண்டாட நிற்பவரிவர்.

# பாதூர் ஸரளகவிஸ்வாமி

மதுராந்தகத்தில் வ்யாகரணப்ரவீணராயும் பரமபவித்ரஹ்ருதயராய் யெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுப்யவே. பாதூர். ராகவாசார்ய ஸ்வாமி ஒரு ஸம்வத்ஸரம் எம்பெருமானுருத்ஸவத்திற்கு ஸ்ரீபெரும்பூதுரெழுந்தருளியிருந்தபோது சில் நாட்கள் ஆனந்த ஸந்தோஹமயமாகச் சென்றன. பரதாழ்வான் சித்ரகூடம் வந்து திரும்பின பிறகு பெருமாள் அப்பரதனுடைய ம்ருது மதுரவார்த்தைகளை நினைந்துநைந்துள்கரைந்துருகியிருந்து "ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி ப்ரியாணி மதுராணி ச, ஹ்ருத்யாநி அம்ருதகல்பாநி மந:ப்ரஹ்லாதநாநி ச." என்று வாய்வெருவிக்கொண்டிருந்தாப்போலே ஸல்லாப யோக்யரும் ஸஹவாஸ யோக்யருமான பாதூர் ஸ்வாமியின் மதுரபாஷிதங்களை அடிக்கடி நினைப்பதுண்டடியேன். வேதபாராயண கோஷ்டியோடு கூடவே எழுந்தருள்வர். (இராக்காலங்களில்) வீதிகளில் கிடந்துறங்கும் சுனகங்கள் வாத்ய கோஷங்கேட்டெழுந்து, மண்டைவிளக்கு தூக்கிக்கொண்டு வருகிற குருவிக்காரர்களைக் கண்டவாறே அபரிமிதமாகக் குலைப்பதைக்கண்டு (பாதூர் ஸ்வாமி) அதற்குக் காரணம் ஸாதித்தார்; மிகப்பொருந்தமாயிருந்தது. இவருடைய பஷணத்திற்கு அப்படியொரு காரணமுமில்லையே.

— நாம் காட்டுங் குற்றங்களுக்கு இவருடைய பதில் —

இவரைப்பற்றின நமது நூல்களில் நாம் காட்டியுள்ள தோஷங்கள் எழ்றைக்குமேழேழ்பிறவிக்கும் இவரால் பரிஹரிக்க முடியாதவை. ஏதோ பதில் சொல்லியாகவேணுமே; நம்முடைய வேதாந்த தேசிகக்ரந்தமாலைப் பதிப்பில் சில குற்றங்களிருப்பதாகக் காட்டி, இவர் த்ருப்தியடையப் பார்க்கிறார். நாம் இங்கு உலகுக்கு உணர்த்துகின்ற திவ்வளவே. தேசிக க்ரந்தமாலையை நாம் பத்தே மாதங்களில் அச்சிட்டு முடித்தோம். ஐந்தாறு அச்சுக்கூடங்களில் இரவும்பகலும் வேலை நடந்து கொண்டிருந்தது. கற்றைகற்றையாக ப்ரூப் வந்துகொண்டேயிருந்தது. பதினையாயிரம் பக்கங்கள் அச்சாகியிருக்கின்றது. உதவிப்பரிசோதகர்களையும் கொண்டிருந்தோம். அவர்களின் பெயர்களையும் வெளியிட்டிருக்கிறோம். ஆயினும் பிழைகள் புகுந்தேயிருக்கும். ஜகத்ப்ரஸித்தரான ஸ்ரீஉவே. V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி தேவப்பெருமாள் ஸன்னிதி வஸந்தோத்ஸவ மண்டபத்தில் ஸபை கூட்டி இதைப்பற்றிப் புகழ்ந்துகொண்டிருக்கையில் இவரைப்போன்றவொருவர் "சோதனத்தில்" என்று ஏதோ வாயெடுத்தார்; அவரை முகம் சிதறப்புடைத்தார் அந்த மஹான். "அதிமாநுஷமாக நடந்திருக்கிற காரியத்தில் வாய்திறக்க நீர் யார்?" என்றார். பூர்வாசார்ய க்ரந்தங்களில் லக்ஷம் பக்கமன்றோ நாம் பதிப்பித்தது.

ஸ்ரீராமாநுஜன் 276ல் ஸுதர்சநஸந்தர்சனமென்றொரு பெரிய கட்டுரை வெளியிட்டோம். ஸ்ரீஉவே. வாதம்ருதவர்ஷி ஸ்வாமிக்கும் மற்றொருவர்க்கும் நடந்துகொண்டிருந்த லேகப்ரதிலேகங்களில் இவர் தலையிட்டு எழுதியவற்றில் கண்ட அஸமஞ்ஜஸ வாக்கியங்களைத் திருத்திக் காட்டியிருந்தோம். அதற்கு வாய் திறக்க வழியில்லாமல் நமது நிரவத்ய வாக்யமொன்றில் குறைகூறவருகிறார்; மாககாவியம் நான்காவது ஸர்க்கத்தில்—"ஏதஸ்மிந் அதிகபயச் ச்ரியம் வஹந்த்ய: ஸம்க்ஷோபம் பவநபுவா ஜவேந நீதா:, வால்மீகே: அரஹிதராமலக்ஷ்மணாநாம் ஸாதர்ம்யம் தததி கிராம் மஹாஸ்ஸரஸ்ய:." என்றொரு சுலோகம். இது, வால்மிகி மஹர்ஷிவாக்குக்கும் குளங்களுக்கும் சிலேடையினால் ஸாம்யமுரைப்பது. இதில் த்விதீயையையும் ஷஷ்டியையும் ஸங்கரம் செய்திருப்பது ஸாதுவல்லவென்று சேஷிப்பாரைப் போல்வரிவர். நாம் நிரூபித்த அஸாமஞ்ஜஸ்யங்களைப் பரிஹரிக்கட்டுமிவர்.

***இடையில் சிறுகுறிப்பு;—82 என்கிற எண்ணிக்கை போராது; மற்றும் பலபல முக்கிய விஷயங்களைத் தடஸ்தர்கள் விமர்சிக்கத் தருகின்றேன்***

## ஸ்வகதஸ்வீகார - பரகதஸ்வீகாரங்கள்

—மீண்டும் ஒரு எண்பத்திரண்டு தருகிறேன்—

**1.** இவரெழுதினப்ரதீபத்தில் (பக்கம் 82ல்) 55 என்று பாராலக்கமிட்டு எழுதியிருப்பதாவது—ஸூர்யகிரணங்களுக்கு ஸூர்யனோடு ஸம்பந்தமில்லையென்று ராஹு பந்துக்கள் சொல்வதுபோல வடகலையாருக்கு தேசிகனோடு ஸம்பந்தமிருந்ததில்லையென்று சபதம் செய்யுமிவர் தேசிக க்ரந்தங்களில் சொல்லப்பட்டுள்ள அர்த்தங்களுக்கு விபரீதமாகவே பேசுபவர்கள் வடகலையார்கள் என்று உலகுக்கு ப்ரமத்தை யுண்டாக்க முயலுகிறார். வெகு காலமாகவே இவர் இப்படி சொல்லி வருகிறார். இங்கு உண்மையை நாமும் பிறரும் நூறுதடவை நிரூபித் திருந்தும் வெட்க மில்லாமல் அதையே மேன்மேலும் அச்சடித்து ப்ரசுரஞ் செய்கிறார். ஏனிப்படி செய்கிறீரென்று கேட்டாலோ, நீங்களும் நீங்கள் சொன்னதையே மேன்மேலும் அச்சிட்டு வெளியிடுங்களே, தடுப்பாரார்? என்கிறார். தேசிக ஸ்ரீஸூக்திகளிலிருந்து தென்னசார்ய ஸம்பிரதாயார்த்தங்களை நிலைநாட்டப் பார்ப்பதானது ஸ்ரீபாஷ்யத்திலிருந்து அத்வைத ஸித்தாந்தத்தை ஸ்தாபிக்கமுயல்வதோடொக்குமென்று வித்வான்கள் அறிந்துகொள்ள வேண்டியது என்றெழுதி அதில் (பக்கம் 85ல்)¤ அநந்ய சேதாஸ்ஸததம் என்கிற கீதா ச்லோகத்தில் ஸ்வகதஸ்வீகாரம் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. அவ்விடத்து பாஷ்யத்திலும் “ய: ஸ்மரதி தஸ்ய நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய” என்றிருக்கிற க்ரந்தத்தாலே அந்த ஸ்வகத ஸ்வீகாரம் நன்றாக விளக்கப்பட்டு விட்டது. இப்படி ஸ்வகத ஸ்வீகாரம் பண்ணின அதிகாரிக்கு பகவான் எவ்விதமாக எளியனாகிறா னென்பதை உபபாதிக்க வந்த பாஷ்யகாரர் ‘தத்வியோகம் அஸஹமாந; அஹமேவ தம் வ்ருணே: மத்ப்ராப்த்யநுகுண உபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:¤’ என்றருளிச் செய்தார். இங்கு அவதாரிகையிலும் ச்லோகத்திலும் அதன் பாஷ்யத்திலும் முமுக்ஷுவுக்கு ஸ்வவ்யாபாரம் வேண்டுமென்று திடமாகச் சொல்லியிருப்பதை உதறிவிட்டு ச்லோகத்தின் உட் கருத்தை விளக்குவதற்காக முடிவில் பாஷ்யகாரர் எழுதியுள்ள (அஹமேவ தம் வ்ருணே) இத்யாதி வாக்யத்தைப் பிடித்துக்கொண்டு தப்புப் பொருளுக்கு ஆதாரமாக உதாஹரிக்கிற இவருடைய வஞ்சனையை எல்லாரும் எளிதாக அறியலாம்—என்று எழுதியிருக்கிறார்.

**2.** என்னுடைய வஞ்சனையை எல்லாரும் எளிதாக அறியலா மென்கிற இவரை நான் கேட்கிறேன்? இங்கு எவ்விதமான வஞ்சனையுள்ளது? பாஷ்யகாரர் எழுதாததை எழுதினதாகக் காட்டியிருக்கிறேனா? அல்லது பங்க்திக்கு அர்த்தமல்லாததை அர்த்தமாக எழுதிக்காட்டியிருக்கிறேனா? எந்த பங்க்திகளை நானெடுத்துக் காட்டி யிருக்கிறேனோ அவற்றை அப்படியே இவரும் தலைவிதியே யென்று எடுத்துக்காட்டுகிறார். அவ்வளவோடும் நில்லாமல் ‘ச்லோகத்தின் உட்கருத்தைக் காட்டுகிற பங்க்திகளிவை’ என்றும் எழுதிவைக்கிறார். (அஹமேவ தம் வ்ருணே) என்கிற பாஷ்ய ஸூக்திக்கு “ஸ ஏவ மாம் வ்ருணீதே” என்றுதான் அர்த்தம்—

என்கிறாரா இவர். உண்மையில் இவர் யாரை வஞ்சக ரென்னவேணும் தெரியுமா? மூலத்தி லுள்ள பதங்களினால் கிடைக்காததை தாத்பர்யமாக எழுதியுள்ள பாஷ்யகாரரை யன்றோ வஞ்சக ரென்னவேணும். மூலத்தில் (தஸ்யாஹம் ஸுலப:) என்றிருப்பதற்கு சங்கரபாஷ்யம் என்ன தெரியுமா? (ஸுலப:—ஸுகேந லப்ய:) என்றிவ்வளவே. "தத்வியோகம் அஸஹமாந:" என்றும் "அஹமேவ தம் வ்ருணே" என்றும் பாஷ்யகாரரை யார் எழுதச் சொன்னது? மூலத்தில் எந்த பதம் அவரை இப்படி யெழுதத் தூண்டிற்று? பாஷ்யகாரரை வஞ்சக ரென்ன மாட்டாமல் இவர் என்னை வஞ்சக ரென்கிறார். என்பதை உலகமறியாதா?

3. இங்கு முக்கியமாக நோக்க வேண்டியது ஒன்றே (அதாவது) யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:¤ என்கிற [*பரகதஸ்வீகாரஸ்தாபகமான*] ச்ருதியை பாஷ்யகாரர்இங்கு எதற்காக எடுத்துக் காட்டுகிறார். *ச்ருதியை* நினைவூட்டும்படியான பதம் மூலத்தில் ஏதேனு முளதோ? இந்த சுருதியை பாஷ்யகாரர் எத்தனை யிடங்களில் உதாஹரித் தருளியுள்ளா ரென் பதையும் உதாஹரித்து என்ன நாட்டுகிறாரென்பதையும் இவர்கண்டதுண்டோ? ஸ்ரீபாஷ்யத் தில் (3–2–34) *உபபத்தேச்ச¤ என்கிற ஸூத்ரபாஷ்யத்தில் "ப்ராப்யஸ்ய பரமபுருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வோபபத்தே¤ நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:......தநூம் ஸ்வாம்¤ இதி அநந்யோபாயத்வ ச்ரவணாத்" என்று இந்த ஓரிடம் காட்டுவது போதாதா? ஸ்ரீபாஷ்ய மிருக்கட்டும், ப்ரக்ருத கீதாஸ்தலத்தில்—இந்த ச்ருதியைக் காட்ட என்னப்ரஸக்தி? இங்கு தேசிகனுடைய தாத்பர்ய சந்த்ரிகை எப்படி அமைந்திருக்கிறது என்பதையாவது நோக்க வேண்டாமா? நோக்கினரா இவர் என்ன நோக்கினர்?

4. "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ—*யமேவேதி*" என்பது சந்த்ரிகாஸூக்தி. (உக்தஸ்ய) என்கிறாரே, உக்தமானது எது? என்று கேட்டால் இவர் என்ன ஸாதிப்பர். 'இது கேவலம் அதிவாதமாத்ரம்' என்று சிலர் மருள்வர்க ளென்று (தேசிகன்) [காட்டி, இது அதிவாதமன்று என்பதை*நாயமாத்மாச்ருதியால் பாஷ்யகாரர் ஸ்தாபிக்கிறார் என்று அவதாரிகை யிட்டிருக்கிறாரே, இதை சிஷ்யர்களின் மனதில் படும் படியாக உபபாதிக்க வேண்டாமா? எல்லோருமேயா தலையாட்டி பொம்மைகளாகவே இருப்பார்கள்? தேசிக ஸூக்திகளுக்கு அபார்த்தம் கொள்பவர் இவரா? நானா? தேசிகனுடைய ஆழ்ந்த திருவுள்ளத்தை உள்ளபடி யறிந்து உகக்க வேண்டாமா? விவேக சக்திக்குப் பயன் வேண்டாமா?

5. பரகத ஸ்வீகார மென்பது நான் கொண்ட அபார்த்த மென்றும் தப்பான ஸம்ப்ரதாய மென்றும் எழுதிவிட்டார். இதை தானும் தமரும் நூறுதடவை யெழுதி என்னைக் கண்டித்து ஒழித்துவிட்டதாகவும் எழுதியிருக்கிறார். ஸ்வகதஸ்வீகாரந்தான் மோக்ஷப்ரதாயகமாகு மென்பது ஒன்றே தேசிகன் ஆதரித்த ஸித்தாந்த மென்றும், அந்த தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி களிலிருந்து பரகதஸ்வீகார ஸாதுத்வத்தைக் காட்டுவதானது ஸ்ரீபாஷ்யத்திலிருந்து அத்வைத மதஸித்தியைக் காட்டுவது போலாகுமென்றும் குமுறிவிட்டார். தேசிக திவ்யஸூக்திகளில் பரிசய லேசமாவ திருந்தால் இப்படி யெல்லா மெழுதக் கைவராது—என்பதே இங்குத் தகுந்த விடையாகும், இதை நன்கு விளக்குவோம்.

6. ஸ்வகத ஸ்வீகாரமான வார்த்தைகள் (அதாவது) ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, புகலொன்றில்லா வடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே—இத்யாதிகள் நம்முடைய வாக்கில் வராமலா இருக்கிறது. பரச்சதமும் பரஸ் ஸஹஸ்ரமும் வருகிறது. இவை எப்படி வருகிற தென்பதை யன்றோ தேசிகன் கண்டறிந்து ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரத்தில் "நீதாநாம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண." என்றார். அதே க்ரந்தத்தில்

ப்ரதாந ப்ரதி தந்த்ராதிகார மென்று ஒன்று வைத்து, சரீராத்ம பாவமாகிற அதனை நன்கறிந்து உபபாதிக்க வல்லவனுன ஒரு பண்டிதன் முன்னே ஸகல பஹிர்மத கோலாஹலங்களும் அரை நொடியில் தொலையுமென்று சபதம் செய்கிறார் நம் தேசிகன். அதே ரீதியில் (நிதாநம் தக்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:) என்கிற இந்த ஒருபாதத்தின் முன்னே—ஒரு தேசிக ஸூக்தியின் முன்னே ஸாநுபந்தியான இவருடைய ஸகலவாதங்களும் தொலையுமென்று—தொலைந் தொழிந்ததாகவே உண்மையான தேசிகபக்தர்கள் சபதம் செய்ய முடியுமே. ஹேது; காரணம் இத்யாதிபதங்களைவிட்டு (*நிதாநம்*) என்கிற பதத்தை எதற்காகவையா! தேசிக னிட்டார்? இங்கே (அகிலநிர்மாண நிபுண:) என்கிற விசேஷணந்தான் ஏதுக்கையா! என்று கேட்டால் இடித்த புளிபோல்தானேயிருக்க வேண்டடும். யார்? இவர்தான்.

7. ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் சரம ச்லோகாதி காரத்தில் (மா மேகம் சரணம் வ்ரஜ) என்ற விடத்து ஏகபதார்த்த விவரணம் செய் தருளுகிற தேசிகன் ஸாதித் திருப்பவைகளை ஸேவித்தால் கல்லும் கரையுமே: ஸ்ரீமத் பரமபரி. இஞ்சிமேட்டழகிய சிங்கர் பதிப்பான ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தைக் கையி லெடுத்துக் கொள்ளுமையா. அதில் பக்கம் 467 வாசியுமையா! அழகிய சிங்கருடைய வியாக்கியானத்தையும் ஸேவியுமையா! தேசிக பங்க்தி களைக் கேளும்;—"ஈ கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத் என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமா யிருக்கும், ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றுப் ஈவரத! தவ கலு ப்ரஸாதாத் ருதே சரணமிதி வசோபி மே நோதியாத் என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம்போல அண்ணாந் திருக்கிற இவனை ஸ்வாதீந ஸர்வவிஷய அப்ரதிஹத கர்த்ருத்வ முடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று—என்று ஏக சப்தத்தாலே சொல்லிற்றாயிற்று." (மறுபடியும் பத்துவரி கடந்து மேலும் வாசியுமையா!.)—"என்னுணர்வினுள்ளேயிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்து மம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத் ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசித மன்றென்று ஏக சப்தத்துக்கு தாத்பர்யம்" என்கிறார் தேசிகன்.

8. ரகுவம்சமும் ராமோதந்தமுமே போது போக்கா யிருப்பார்க்கு இந்த ஸ்ரீஸூக்திகளின் சுவையை யறிய விரகில்லையே. ஸ்ரீதேசிக ஸித்தாந்தம் இன்னதென் றறியப்பெறாத ஜாட்யதிமிரம் கதிராயிர மிரவி கலந் தெரித்தாலும் கழியமாட்டாதே. ஸ்வாமி சரணாகதி தீபிகை யென்றே பெயரிட்டு ஸாதித்த சாஸ்த்ரார்த்தஸார ஸர்வஸ்வமான ஸ்தோத்ரத்தில் (28) "கர்மஸ்வநாதி விஷமேஷு ஸமோ தயாலு: ஸ்வேனைவ க்ல்ப்தமபதேச மவேக்ஷ மாண:, ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த! ஸ்வாபாவிகம் தவஸூஹ்ருத்த்வமிதம் க்ருணந்து" என்பது நிதி புதைத்துவைத்த சுலோகம். இதில் (ஸ்வேனைவ க்ல்ப்தம் அபதேசம் அவேக்ஷமாண:) என்றது ஸகல துர்வாதங்களையும் ஸவாஸநமாகப் போக்குமது, தானாகவே கல்பித்துக்கொண்ட வ்யாஜ விசேஷத்தைக் கடாக்ஷித் தென்றது அதிவாதமா? இதற்குமேல் (ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வரஸே முகுந்த!) என்றதுமஹாநிதி; இதில் (*த்வரஸே*) என்கிற க்ரியாபதம் பேறுயாருடைய தென்பதை வெட்ட வெளிச்சமாகக் காட்டித் தருமே.... ... ... ...

## —ரகுவம்சம்—

9. காளிதாஸ மஹா கவியின் ரகுவம்ச காவ்யத்தை நாம் பல்பஜமாக நினைத்து அதில் திரஸ்காரபுத்தியோடிருப்பதாகக் காட்டுகிறாரிவர் இது ஸர்வாத்மநா அபத்தம். அந்த மஹாகாவ்யத்தை ஒன்பது வயதுக்குள் பரிபூர்த்தியாக வாசித்தோம் நாம். மூலம் மட்டுமன்று; மல்லிநாத வியாக்யானத்தோடுங்கூட. அந்த காவ்யத்தில் நமக்குள்ள ப்ரதிபத்தி அநந்யஸாமாந்யம். அது நிற்க. ஒரு ஸமயம் இவர் ஓர் ஊருக்குச் சென்று ராமாயணம் சொல்லுகிறேனென்று ஒரு மாளிகைத் திண்ணையில் உட்கார்ந்து ஆரம்பித்தார். பண்டிதராச்சேயென்று பலர் கூடினர்; ரகு வம்சச்லோகங்கள் தவிர ஸ்ரீ ராமாயணச்லோகம் ஒரு துணுக்கை கூட இவர் வாயில் வரவில்லை ஒவ்வொருவராக எழுந்து செல்லத் தொடங்கினர். இருவர் மூவர் இருந்தாலும் போதுமென்று இவர் அங்கவீர்ருத்த ஸாரராய் ஏதோ சொல்லிக்கொண்டிருக்கிறார். இது என்ன தலைவேதனை என்று சொல்லிக்கொண்டே அவர்களுமெழுந்து சென்றார்கள். "காவ்யரஸமறியாத கபோதிகளென்று தெரிந்திருந்தால் நான் இங்கு உபந்யாஸம் தொடங்கியிருக்கவேமாட்டேன்." என்று சொல்லி ரகுவம்ச ப்ரபாவத்தைப் பேசத் தொடங்கினார். அதிலிருந்து ரகுவம்ச பண்டிதரென்று இவர்க்கு ப்ரஸித்தி விளைந்தது. ரகுவம்ச ரஸமறியாதவர்களென்று எல்லோரையுமே பழித்து வருகிறார். இந்த பழிப்பு நமக்கும் கிடைப்பதில் வியப்புண்டோ?... ... ... ...

## —நஞ்சீயர்க்குப் பிறகு—

10. இவர் தமது சுவடிகளில் அடிக்கடி எழுதிவருகிறார்—"நஞ்சீயர்க்குப்பிறகு வந்துள்ள ஆசாரியர்களுக்கு சாஸ்த்ரஜ்ஞானமும் ஸ்ரீ பாஷ்யஜ்ஞானமும கிடையாது.. என்று" இதற்கு நாம் பலகால் எழுதியிருப்பதாவது—ஸ்ரீ பாஷ்யஜ்ஞானம் பெற்றோமென்று செருக்கி ஸ்ரீ பாஷ்யத்தை தூஷிப்பதையே கைங்கர்யமாகக் கொண்டவர்களிற்காட்டில் ஸ்ரீ பாஷ்யஜ்ஞான தரித்திரர்களாகவேயிருந்துவிடுவது மேன்மையென்று. இதை நாம் அவலீலையாக எழுதுமவர்களல்லோம்; ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீஸூக்தி தூஷணப்ரகாரங்களை வெட்ட வெளிச்சமாக எடுத்துக் காட்டியேயுள்ளோம்.

## —நம்பிள்ளையின் ஸர்வஜ்ஞத்வம்—

11. பெரிய திருமொழியில் (5—8—7. ) "ஓது வாய்மையு முவனியப்பிறப்பு மென்ற தொடங்கும் பாசுரத்தின் வியாக்யானத்தில் ஒருவன் என்னுமிடத்துப்) பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்கிறார்—

"முற்பட த்வயத்தைக்கேட்டு இதிஹாஸ புராணங்களையும் வரியடைவே கற்று பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக் குடலாக ந்யாய மீமாம்ஸைகளையும் அதிகரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலேயாயிருக்கும் நம்பிள்ளையைப் போலே"

என்று. உண்மையில் மணவாள மாமுனிகளளவான ஸகலாசார்யர்களும் இங்ஙனே விசேஷிக்கத்தக்கவர்கள். "கவிதார்க்கிகர்களை வெல்லவேணும், ஸ்வச்சந்த வாதாஹவபத்த சூரனாக வேணும்" அங்பதங்பத்சர்த்தும் க்ஷமனாக வேணும்" என்று ஒரு ஆசாரியரும் மலையேறி மாவிளக்குப் போட்டதில்லை.

## ஸ்ரீபாஷ்ய விருத்தார்த்த ஸாதித்வப்ரமம்

12. "ஜகத்வ்யாபாரவர்ஜ மென்கிற ப்ரஹ்மஸூத்ர நிஷ்கர்ஷத்திற்கு விருத்தமாக ஆச்சான் பிள்ளை முக்தனுக்கும் ஜகத்வ்யாபார அதிகாரமுண்டென்று எழுதியிருக்கிறாராம். ஆகவே அவர் ஸ்ரீ பாஷ்யவைதேசிகராம். இது ஒன்றுமே பாஷ்யகாரரை தூஷிக்கிறபடியேயொழிய வேறில்லை. ஸ்ரீவைகுண்டகத்யத்திலே,

"ஸ்வஸங்கல்ப மாத்ராவக்ல்ப்த ஜகஜ்ஜந்ம
ஸ்திதித்வம்ஸாதிகே ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே"

என்று ஸாதித்திருப்பவர் ஸ்ரீ பாஷ்யகாரர். ஜகஜ்ஜந்மஸ்திதித்வம்ஸாதிகளை விஷ்வக்ஸேநன் ஸ்வஸங்கல்பமாத்ரத்தாலே நிறைவேற்றுவதாக அருளிச்செய்கிறார் பாஷ்யக்காரர். ஜகத்வ்யாபாரவர்ஜமென்றது விஷ்வக்ஸேநவர்ஜமா? என்று கேட்டால் திசைதொறும் விழிப்பரிவர்.

# "வம்பவிழ்கோதை பொருட்டா"

13 திருவாய்மொழி மூன்றும் பத்து நான்காவது பதிகத்தில் நப்பின்னைப்பிராட்டிக்காகக் கண்ணபிரான் ஏழ்விடையடர்த்த வரலாற்றை யநுஸந்திக்கிற நம்மாழ்வார் "வம்பவிழ்கோதை பொருட்டா மால்விடை ஏழுமடர்த்த" என்றருளிச்செய்தார். இங்கு (கோதை) என்கிற சொல் ஆபாதப்ரதீதியில் விட்டுசித்தன் கோதையாகிய ஆண்டாளைக் குறிப்பதாகத் தோன்றிவிடும். இங்கு உண்மை அதுவன்று. ஆண்டாளுக்காக எருதேழடர்த்ததில்லை. நப்பின்னைக்காகவே அதுசெய்தது. இத்தமிழ்வாக்கியத்தை வடமொழியில் கூறவேணுமானால் "ஸுரபிகுந்தல நீளாதேவீ நிமித்தம் ஸப்தவ்ருஷப மர்த்தனகர்த்து:" என்றுதான் சொல்லியாக வேண்டும். இப்படிச் சொல்லாமல் "கோதா நிமித்தம்..." என்று மொழிபெயர்த்தால் அது அபஹாஸ்யமே யாகும். த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளியில் விபர்யயம் காண்கிறது. அதைப்பற்றி நாம் பிரபலமான ஆராய்ச்சி செய்திருந்தோம், அது இவர்க்கு நிலமல்லாதது. அறிஞர்களுக்கு இங்குத் தத்துவமுணர்த்துகிறோம்.

14. தென்மொழியில் பொதுப்பெயர், சிறப்புப்பெயர் என வழங்குமவற்றை ஸாமாந்ய நாமதேயம் விசேஷ நாமதேயம் என வடமொழியாளர் வழங்குவர். மாதர், மங்கை, மடந்தை, மின்னேரிடையாள், காவியங்கண்ணி என்றிப்படிப்பட்ட சொற்கள் தென்மொழியில் பொதுப் பெயர்கள். சீதை, நப்பின்னை, தேவகி என்றிப்படிப்பட்ட சொற்கள் சிறப்புப்பெயர்கள். லலநா, வநிதா, ஸுததீ, ஸுப்ரு: என்றிப்படிப்பட்ட சொற்கள் வடமொழியில் ஸாமாந்ய நாமதேயங்கள். ஸீதா, அஹல்யா, ருக்மிணீ என்றிப்படிப்பட்ட சொற்கள் விசேஷ நாமங்கள். இத்தகைய விசேஷ நாமதேயங்களையிட்டு வரலாறுகள் சொல்ல வேண்டுமிடத்து, தமிழர்கள் மட்டும் ஸாமாந்ய நாமதேயங்களை [அதாவது பொதுப்பெயர்களை] யிட்டும் சொல்லுவதுண்டு.

15 இராமன் சீதையுடன் புறப்பட்டானென்று சொல்லவேண்டுமிடத்து 'இராமன் மின்னேரிடையாளுடன் புறப்பட்டான்' 'மன்னவன் கருங்குழலியுடன் புறப்பட்டான்' என்றிப்படிச்சொல்லுவதுண்டு. இங்கு 'மின்னேரிடையாள்' 'கருங்குழலி' என்ற சொற்களானவை பொதுவாக ஸ்த்ரீகளுக்கு வாசகங்களேயொழிய. சீதைக்குச் சிறப்புப் பெயர்களல்ல. வைதேகி, மைதிலி, சானகி என்றிப்படிப்பட்ட சொற்களே சீதைக்குச் சிறப்புப் பெயர்களாகும், வடநூலார் இத்தகைய சிறப்புப் பெயர்ச்சொற்களையிட்டே கவியியற்றுவர்கள். கதைகள் தொடர்ந்து சொல்லிக்கொண்டு போமிடங்களில் இந்த விசாரமில்லை.

16 ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களில் சிறப்புப் பெயர்களையிட்டுக் கூறுவது சிறுபான்மையாகவும், பொதுப் பெயர்களையிட்டுக் கூறுவதே பெரும்பான்மையாகவும், காணப்படும். இவ்விஷயத்திற்கு உதாரணங்காட்டவேணுமேயானால் ஆயிரக்கணக்கான பாசுரங்கள் கிடைக்கும். விஷயம் நெஞ்சில் பதிவதற்காகச் சில உதாரணங்கள் எடுத்துக் காட்டுவோம்.

17 "மானேய் நோக்கின் மடவாளை மார்வில் கொண்டாய் மாதவா" (திருவாய்மொழி) "செய்வாய வேல்நெடுங்கண் சேரிழையு மிளங்கோவும் பின்பு போக, எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ!" (பெருமாள் திருமொழி) "வில்லேர்நுதல் வேல் நெடுங்கண்ணியும் நீயும் கல்லார் கடுங்கானந்திரிந்த", (பெரிய திருமொழி) இப்பாசுரங்களைக் காணலாம். (1) மானேய் நோக்கின் மடவாளென்பது ஸ்த்ரீ ஸாமான்யத்துக்குப் பொது வாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று; ஆயினும் நம்மாழ்வார் ஸ்ரீமஹாலக்ஷ்மியாகிற வ்யக்திவிசேஷத்தை விவக்ஷித்து 'மானேய் நோக்கி மடவாள்' என்றார். (2) 'செய்வாயவேல் நெடுங்கண்ணேரிழை, என்பதும் ஸ்த்ரீகளுக்குப் பொது வாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் குலசேகராழ்வார் ஸீதாபிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தை விவக்ஷித்து, "செய்வாய

வேல்நெடுங்கண்ணேரிழை" யென்றார். (3) "வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணி யென்பது ஸ்த்ரீகளுக்குப் பொதுவாசகமேயல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினு திருமங்கையாழ்வார் ஸீதாபிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தையே விவக்ஷித்து "வில்லே நுதல்வேல் நெடுங்கண்ணி யென்றார். கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பூதனையி பெயரையிட்டே சொல்வதுமுண்டு. அது சில விடங்களில்; பலவிடங்களில் பொதுப்பெய காணப்படும். பெரிய திருமொழியில் "கண்சோர வெங்குருதி வந்திழிய வெந்தழல்போ கூந்தலாளை மண்சேர முலையுண்டமாமதலாய்" (7—4—1) என்கிறார் திருமங்கையாழ்வா இங்கு 'வெந்தழல்போல் கூந்தலாள்' என்றது பூதனையை நோக்கியேயாம்; 'முலையுண்ட' என் அடுத்துவரும் சொல்தொடரினால் இப்பொருள் தெரிந்துகொள்ளக்கூடுமேயல்லது இபற்கையா இச்சொல் பூதனையை யுணர்த்தமாட்டாது.

18 திருவல்லிக்கேணிப் பதிகத்திலுள்ள "அந்தகன் சிறுவன் என்கிற ஆரம்பாட்டி முதலடியிலும் மூன்றாமடியிலும் த்ரௌபதியைப்பற்றிக் கூறுகின்றாராழ்வார். முதலடியி 'அணியிழை' என்கிற சொல்லேயுள்ளது. மூன்றாமடியில் 'சந்தமல் குழலாள்' என் சொல்லேயுள்ளது. இவை ஸ்த்ரீகளுக்குப் பொதுப்பெயர்களே யல்லது ஒரு வ்யக் விசேஷத்திற்குச் சிறப்புப்பெயரன்று. ஆயினும் ஆழ்வார் இப்பொதுப் பெயர்களையிட்டே இங்கு த்ரௌபதியைக் குறிப்பிடுகிறார். கண்ணபிரான் ஸத்யபாமைப் பிராட்டிக்காக பாரிஜாதாபஹரணம் செய்தருளினவாற்றைத் திருமங்கையாழ்வாரருளிச் செய்யுமிடங்களி பாரீர்: "மட்டவிழுங் குழலிக்கா வானோர் காவின் மரங்கொணர்ந்தான்" என்றும் "மட்டே கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்" என்றுமருளிச்செய்கிறார் இவ்விடங்களி 'மட்டவிழுங்குழலி' என்பதும் 'மாதர்' என்பதும் பொதுப்பெயர்களேயன்றிச் சிறப்புப் பெய களல்ல.

19. இராமபிரான் குஹப்பெருமாளோடு சேரணிந்த தோழமை கொண்டபோ பிராட்டியைக் காட்டி இவள் உன்தோழி யென்று கூறியதைக் கூறுகின்ற திருமங்கையாழ்வா "மாழைமான் மடநோக்கி உன்தோழி" என்கிறார். இங்கு 'மாழைமான் மடநோக்கி யென்றது பொதுப்பெயரேயன்றி ஸீதைக்குச் சிறப்புப்பெயரன்று. திருவாய்மொழியி "ஆயர்கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் மாயப்பிரானை" என்ற பாசுரத்தில் கண்ணபிரா விஷயத்தில் பிரயோகிக்கப்பட்ட 'ஆயர் கொழுந்து' என்னுஞ்சொல்லை அவ்வாழ்வார் தாமே "கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன்றன்னை" என்ற பாசுரத்தில் நப்பின்னைப் பிராட்டிக்கு வாசகமாகப் பிரயோகித்தருளினர். இங்ஙன மெடுத்துக் காட்டப்புகின் விரிவு பெரிதுடைத்தாம். இப்படிப்பட்ட பிரயோகம் அருளி செயல்களில் மட்டுமேயல்ல; கம்பராமாயணம், அஷ்டப்பிரபந்தம் முதலிய தமிழ் நூற் னெல்லாவற்றிலும் யதேஷ்டமாகக் கிடைக்கும். இந்த ஸரணியானது தமிழ் நூல்களுக்கே அஸாதாரண மென்னலாம். "அர்த்தாத் ப்ரகரணால்லிங்காத்—அர்த்த நிர்ணய:" என் வடநூலார் காட்டிய வழியைக்கொண்டு பொருள் காண்கிறோம்.

20 இனி ப்ரக்ருத விஷயத்தைக் கொள்வோம். கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளுங்காலத்து ஏழெருதுகளை வலியடக்கி கும்பர் மகளான நப்பின்னையை மணம் புணர்ந்ததாக ஒருசரித்திரமுண்டு. இதை ஆழ்வார்கள் அடிக்கடி பேசியநுபவிப்பர்கள். அந்த நப்பின்னையையே பின்னையென்றும் வழங்குவர். [பின்னைமணாளனே, பின்னைதோள்மணந்த பேராயா!] அவளுக்கு வடமொழித் திருநாமம் நீளா என்பதாம். அது கூரத்தாழ்வானாலும் பட்டராலும் வெளியிடப்பட்டுள்ளது. ஸுந்தர பாஹுஸ்தவத்தில் "நீளா குலேந ஸத்ருசீ" என்றது கூரத்தாழ்வான் திருவாக்கு; "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்" இத்யாதியான திருப்பாவைத் தனியன் பட்டர் திருவாக்கு. அப்பயதீக்ஷிதரால் குவலயாநந்தத்தில் உதாஹரி

கப்பட்டுள்ள "பத்மே த்வந்யபலே ஸ்மராமி" என்றவொரு ச்லோகத்திலும் நீளா என்கிற இத்திருநாமம் காட்டப்பட்டுள்ளது. ஆகவே, எருதேழடர்த்து மணந்துகொள்ளப்பட்ட மனைவிக்கு நப்பின்னையென்பது தென்மொழித் திருநாமமென்றும், நீளா என்பது வடமொழித் திருநாமமென்றும் தேறி நின்றது. ஆழ்வார்கள் எருதேழடர்த்த கதையைக் கூறுமிடங்களில் பெரும்பாலும் நப்பின்னையை வெளிப்படையாகக் கூறாது பொதுப்பெயர்களாலேயே கூறியுள்ளார்கள். "காம்பணைதோள் பின்னைக்கா ஏறுடனேழ் செற்றதுவும்", "பின்னைபொருட்டு ஆன்வென்றானூர்" என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகச்சிலவே. மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா, மன்னுசினத்த மழவிடைகள் ஏழன்றடர்த்த மாலதிடம்" "கோடி யேரிடையாள் பொருட்டாக, வன்தாள் விடையேழன்றடர்த்த" "பஞ்சணைங்க மெல்விரலாள் பாவை தன் காரணத்தால் வெஞ்சிறலேறேழும் வென்ற வேந்தன்" என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகப்பல. மேலேயெடுத்துக் காட்டியுள்ள பாசுரங்களில் நப்பின்னையென்கிற சிறப்புப்பெயர் இல்லை, பொதுப்பெயரேயுள்ளது. இருந்தாலும் எருதேழடர்த்தவாற்றைச் சொல்லியிருக்கையாகிற ஸமபிவ்யாஹார பலத்தினால் நப்பின்னையென்கிற சிறப்புப்பொருள் கிடைத்தே தீருகின்றது. திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையில் "அறுபதமுரலுங் கூந்தல் காரணம், ஏழ்விடையடங்கச் செற்றனை" என்றருளியுள்ளார். இங்கு 'ஏழ்விடையடங்கச்செற்றனை' என்பதற்கு—ஏழெருதுகளைக் கொன்றாயென்று பொருள். அதற்கு முன்னேயுள்ள 'அறுபதமுரலுங்கூந்தல் காரணம்' என்பதற்கு என்ன பொருளென்று விமர்சிக்கவேணும். அறுபதமென்று வண்டுக்குப் பெயர். வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற கூந்தல் என்றதாயிற்று. இச்சொல்தொடர் அன்மொழித்தொகை [பஹுவ்ரீஹி ஸமாஸம்] பெற்றது; ஆகலால் வண்டுகள் முரலப்பெற்ற கூந்தலையுடையவள் என்று பொருள் பட்டு நிற்கும். எனவே, இது மாதர்க்குப் பொதுப்பெயராக நின்றது. பிரகரணம் நோக்கி 'நப்பின்னைப் பிராட்டிக்காக' என்று பொருள் கொள்ளக் குறையில்லை.

21 இதை வடசொல்லால் மொழிபெயர்க்கவேண்டுமானால் வசநவ்யக்தி எப்படியிருக்கவேணுமென்பதை வித்வான்கள் அறிவார்கள். நீளா நிமித்தம் என்றோ, ஷட்பதஜங்க்ருத சிகுரசாலிநீநிமித்தம் என்றோ மொழிபெயர்க்கவேணுமேயல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கலாகாதென்பது கல்வெட்டு. இப்படி திருமங்கையாழ்வாருடைய திருவாக்கில் 'அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்று அவதரித்திருப்பதுபோல நம்மாழ்வாருடைய திருவாக்கிலும் "வம்பவிழ்கோதை பொருட்டா மால்விடையேழுமடர்த்த" என்கிற பாசுரம் அவதரித்துள்ளது. சொல்வடிவத்தில் வாசியுள்ளதேயன்றிக் கருத்தில் சிறிதும் வாசியில்லை. நப்பின்னைக்காக எருதேழடர்த்த வாற்றையே இவ்வாழ்வாருமருளிச் செய்கிறார். நப்பின்னையை 'அறுபத முரலும் கூந்தல்' என்ற சொல்தொடரால் திருமங்கையாழ்வார் குறித்தனர். அப்பிராட்டியையே நம்மாழ்வார் 'வம்பவிழ் கோதை' என்றசொல்தொடரால் குறிக்கின்றனர். அங்கு எப்படி அன்மொழித்தொகையோ இங்கும் அப்படியே அன்மொழித் தொகைதான் [பஹுவ்ரீஹி ஸமாஸமே.] இதை ஒருபோதும் மறக்கலாகாது. நறுமணம் புறப்படுகின்ற பூமாலையையுடையவள் என்பது சப்தார்த்தம். கோதையென்கிற தமிழ்ச்சொல்லுக்குப் பூமாலையென்பதும், கூந்தலென்பதும் பொருள். பூமாலையென்கிற பொருளிலேயே பெரும்பான்மையான பிரயோகம் காண்கிறது. "வம்பவிழ் கோதைபொருட்டா" என்பதற்கு பரிமளப்ரசுரமான பூமாலையை யணிந்துள்ளவளுக்காக மால்விடையேழுமடர்த்தவனென்றதாயிற்று. அவள் யாவளென்னில் நப்பின்னைப் பிராட்டியென்பது அர்த்தாத்ஸித்தம். திருவாய்ப்பாடியில் விடையேழடர்த்தது நப்பின்னைக்காகவேயன்றோ. இனி 'வம்பவிழ்கோதை பொருட்டா' என்கிறவிதனை வடமொழியில் மொழிபெயர்க்க வேணுமானால் எங்ஙனேயாகவேணுமென்பதை விவேகிகள் விமர்சிப்பது. கருத்துவகையில் நீளார்த்தம் என்றும், சொல்வடிவத்தின்மேல் 'ஸுரபிமால்யாலங்க்ருதலலநார்த்தம்' என்றும் மொழிபெயர்க்கலாமேயல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கத் தகுதியில்லை. இது எங்கும் மாற முடியாத சீமைத் தீர்ப்பு.

தேசிகன் கோதார்த்தமென்று மொழிபெயர்த்திருப்பதாக ரத்நாவளியில் பாடம் காண்கிறது. மூலத்தில் 'கோதை பொருட்டா' என்றிருப்பதால் அதற்குநேராக இங்ஙனே மொழிபெயர்த்ததில் என்ன பிசகு? என்று சிலர் கேட்கக்கூடும். அவர்கள் என்ன ஆலோசிக்க வேண்டுமென்றால், மூலத்தில் 'நங்கை பொருட்டா' 'மங்கை பொருட்டா' என்றிருந்தால் அதை நங்கார்த்தம் மங்கார்த்தம் என்று மொழிபெயர்த்து விடலாமாவென்று ஆலோசிக்க வேண்டும். இங்கு மூலத்திலுள்ள கோதை என்கிற தமிழ்ச்சொல்லுக்கு என்ன அர்த்தம்; கோதா என்கிற வடசொல்லுக்கு என்ன அர்த்தம்? என்று நன்கு விமர்சித்தால் கோதை பொருட்டாவென்கிற மூலத்திற்கும் கோதார்த்தமென் பதற்கும் ஸமந்வயலேசமுமில்லையென்று எளிதிலுணர்வர்.

23. கோதா என்கிற வடசொல்லுக்கு மூலமான கோதையென்கிற தமிழ்ச்சொல் ருன்று உண்டு; திருப்பாவையின் முப்பதாவது பாட்டிலும் நாச்சியார் திருமொழியின் ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாசுரங்களிலும் ஆண்டாளுக்குத் திருநாமமாகக் கோதையென்கிற சொல் காணப்படுவதுண்டே, அதற்கு இங்குப்ரஸக்தியே கிடையாது. அந்தோ! மருள் வெள்ளமிட்டபடி. ...

24. இந்த விசாரத்தில் பசுசப்த கோசப்தங்களை யெடுத்துக்காட்டுவது அபஹாஸ்யம். சாஸ்த்ரஜ்ஞர்கள் ந்யாயஸஞ்சாரத்திற்காக [ச்சாகபசுந்யாயம், கோபலீவர்த்தந்யாயம் என்பதற்காக] அந்த சப்தங்களைக்கொண்டிருப்பதுண்டு. "பசோ:! தோக்தி பய:" என்றோ "நீலாத் கோ: க்ஷீரம்; தோக்தி" என்றோ பிரயோகித்தால் அபஹஸிப்பர்களந்தோ!.

## பண்ணுளென்பதன் பொருத்தமின்மை

25. *ஸ்ரீமந்நிகமாந்தமஹாகுரு அருளிய*—தேஹளீசஸ்துதியில் "பண்ணுதட" என்றுகாணப் படுகிறபாடம் தவறு. (புன்யாதட) என்றிருந்த சுத்தபாடம் பிறழ்ந்துவிட்டது வடமொழியில் ஆகாரந்தமான பதங்கள் தமிழில் ஐகாராந்தமாக ஆவகற்கு இலக்கணமுண்டு. 'ஆவீறுஐயும்'. என்பது நன்னூல். ஸீதா—சீதை; வநிதா—வநிதை, சகுந்தலா—சகுந்தலை. இப்படிப் பல்லாயிரம் காணலாம். தமிழில் ஐகாரவீற்றதான சொல்லை வடமொழியில் ஆகாரந்தமாகக் கொண்டு ப்ரயோகிப்பது திருவாழ்த்தான் ஸம்ஸ்கிருத மெனப்படும். இதுவும் இவர்க்கு நிலமன்று' அறிஞர்கட்குத் தத்துவமுணர்த்தினபடி. ... ... ...

*பிநாகிநீ* என்பது அந்த புண்ய நதியின் நிஜநாமதேயம். அது தமிழில் *பெண்ணை* யென மருவிற்று. பெண்ணையேயொழிய பண்ணையன்று. பண்ணையென்று பனைமரத்திற்குப் பெயர். "வண்டறை பூம்பண்ணைமடல் காண்க. காவார் மடல் பண்ணையென்பது பெரிய திருமொழி 9—4—1 பிநாகிநியை வடமொழியில் சொல்ல வேணுமானால் பிநாகிநி யென்றுதான் சொல்லவேண்டும். க்ருஷ்ண: என்ற வடசொல் தமிழில் கண்ணனென்று ஆனாலும் வடமொழியில் கண்ணனென்ன மாட்டார்கள் வீணான ஆக்ரஹத்திற்கு மருந்தே கிடையாது. கோதார்த்தமென்பதிலும் பண்ணுதடமென்பதிலும் எத்தனைகாலம் போராடினாலும் பேதைமையே பலிக்கும். தற்காலம் இவ்வளவோடு நிற்போற்போம்.

குறிப்பு:—முந்தின எண்பத்திரண்டிலும் இந்த 82லும் இவர் இவர் என்பதெல்லாம் என்னிடம் நேரில்வந்து விவாத நூலைக்கொடுத்த தி. இராமாநுஜாசாரியைக் குறிப்பது.

# ஸ்ரீ ராமாநுஜன் 284



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும்
வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 24 | பரீதாவிஷு வைகாசிமீ 5—6—72ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 8


## உத்தமூர் ஸ்வாமியின் ஓர் அநுக்ரஹம்

நிகழும் வைகாசித்திங்களில் 5ட புஷ்ய நக்ஷத்திர சுபதினத்தில் (18—5—72)ல் அடியேனுடைய பௌத்திரன் சிரஞ்சீவி ராஜஹம்ஸனுக்கு உபநயன சுபமுஹூர்த்தம் நடைபெற்ற விஷயம் நண்பர்களனைவரும் அறிந்ததே. அதற்காக தேஹபந்துக்களோடு ஆத்மபந்துக்களுக்கும் ஆஹ்வானபத்ரிகை அனுப்பப்பட்டிருந்தது. ஆப்தர்களான வித்வான்களுக்கும் விசேஷித்துப் பத்ரிகை அனுப்பப்பட்டது. பரமக்ருபையுடன் எழுந்தருளியிருந்து அநுக்ரஹித்த வித்வான்களைக் கீழே குறிப்பிடுகிறேன். ஸ்ரீமதுபயவே. சித்ரகூடம் வேங்கடாசார்ய ஸ்வாமி, கோயில் சதாபிஷேகம்ஸ்வாமி, கோமல் சேஷாத்ரியாசார்ய ஸ்வாமி, திருக்குடந்தை அக்நிஹோத்ரம் ஸ்ரீராமாநுஜ தாதாசார்ய ஸ்வாமி, உத்தரமேரூர் வாஸுதேவாசார்ய ஸ்வாமி, முக்கூர் ஸ்ரீநிவாஸ வரதாசார்ய ஸ்வாமி, பிள்ளைலோகம் ஸ்வாமிகள் முதலானோர். இப் பெரியார்கள் சொற்பொழிவுகளுமாற்றி ஸதஸ்யர்களை உகப்பித்தனர். சிலர் எழுந்தருள்வதற்கு நேர்ந்த அஸௌகர்யத்தைத் தெரிவித்து அநுக்ரஹ ஸ்ரீமுகங்களை யனுப்பினார்கள். அன்னவர்களில் ஸ்ரீமதுபயவே. வித்வன்மணி. உத்தமூர் வீரராக்வாசார்ய ஸ்வாமி சென்னையிலிருந்து அநுக்ரஹித்த ஸ்ரீமுகத்தில் விசேஷித்துச் சில வாக்கியங்கள் காணப்பட்டன.

அடியேன், சில மாதங்களாக நேத்ரபாடவக் குறைவினால் தபால்களை நேரில் வாசிக்ககில்லாமல் பிறர்வாசித்துக் காட்டியே தெரிந்துகொள்ள வேண்டியவனாயிருக்கிறேனென்பதைப் பலகால் ஸ்ரீராமாநுஜன் மூலமாக அறிவித்திருக்கிறேன். ஸ்ரீமத் உத்தமூர் ஸ்வாமியின் ஸ்ரீமுகம் கிடைத்தபோது ஸ்ரீமதுபயவே உத்தரமேரூர்

வாஸுதேவாசார்ய ஸ்வாமி ஸந்நிஹிதராயிருந்தபடியால் அவர் வாசித்துக் காட்டலாயிற்று. அதில், சிரந்தந ஸௌஹார்த்த பரீவாஹ ரூபமான வார்த்தைகளை அநுக்ரஹித்ததோடுகூட;

"ஆயுஷ்மாந் ராஜஹம்ஸன் குலகூடஸ்தரான ஆத்ய ப்ரதிவாதிபயங்கராசார்யர் ஆதரித்திருந்த பாரமார்த்திகஸம்ப்ரதாயத்திலே ஊற்றமுடையனும் விளங்க வேணுமென்று பெருந்தேவி மணவாளனை பேரருளாளனைப் பிரார்த்திக்கிறேன்"

என்கிற வார்த்தைகளை விசேஷித்தெழுதி யிருந்தார். அதன் பிறகு அந்த ஸ்வாமிக்கு அடியேன் இரண்டு விண்ணப்பங்கள் எழுதினேன். அவற்றுள் முதல் விண்ணப்பம் "தந்யோஸ்மி, அநுக்ருஹீதோஸ்மி, க்ருதார்த்தோஸ்மி" என்கிற முறையிலாயது. இரண்டாவது விண்ணப்பத்தில் அஸ்மத் குலகூடஸ்த ப்ரதிவாதிபயங்கராசார்யர் ஆதரித்திருந்த பாரமார்த்திக ஸம்ப்ரதாயம் எதுவென்று தெரிந்து கொள்ள விரும்பி விபுலமாக விஜ்ஞாபித்திருந்தேன். நாலைந்துநாள் நிரீக்ஷித்தும் பதில் ஸ்ரீமுகமொன்றும் கிடைக்கப்பெற்றிலேன். அந்த ஸ்வாமிக்கு அடியேன் விடுத்த இரண்டாவது விண்ணப்பத்தில் ஸாரமாக எழுதியிருந்த விஷயங்களாவன-

"அஸ்மத் குலகூடஸ்தர் பட்டரருளிச்செய்த அஷ்டச்லோகிக்கு ஸம்ஸ்க்ருத வியாக்கியானமருளிச் செய்துள்ளார்; அது பல பதிப்புகளேறியுள்ளது. ஸம்ப்ரதாயார்த்த தத்துவங்களைத் தெரிந்து கொள்ள அஷ்டச்லோகி ஸாரமானநிதி. அதன் வியாக்கியானத்தினுல் அஸ்மத் குலகூடஸ்தருடைய பாரமார்த்திக ஸம்பிரதாயம் இன்னதென்பது நன்கு விளங்கும். ஸ்ரீதேசிகன் தமது ரஹஸ்யத்ரயஸாரத்தில் அஷ்டச்லோகியை அஸக்ருத் ஆதரித்தருளியுள்ளார். அப்படியிருந்தும், சில வருஷங்களுக்கு முன்பு தேவரீர் அடியேனேடு நிகழ்த்திய (க்ரந்த ரூப) வாதவிவாதத்தில் அஷ்டச்லோகி பட்டரருளிச் செய்ததன்றென்று துணிந்து எழுதிப் பிரசுரம் செய்திருப்பது மறந்திராது. மூலத்தின் கதியே அதுவான பின்பு வியாக்கியானத்தின் கதி எதுவாகுமோ?......இத்யாதி.

ஆரியர்காள்! இந்த வியாஜத்தினுல் உலகுக்கு அனேக தத்துவங்களைத் தெரிவிக்க வேணுமென்று தோன்றிற்று. ஏதோ வொருவிதமான வியாமோஹம் இந்த ஸ்வாமிக்குமட்டுமன்றிக்கே மற்றுஞ் சிலர்க்கும் இருந்து வருவதால் தகுந்த ஔஷதத்தினுல் இதைத் தவிர்க்கவேணுமென்று தோன்றி வ்யாமோஹப்ரசமௌஷதமென்கிற வொருநூல் ப்ரதிவாதி பயங்கர வம்சஸ்தர் இருவர் ஸம்பாஷிக்கும் முறையில் அமைக்கப்பட்டு இதன் முதல் ஆன்னிகம் இவ்விதழில் வெளியிடப்படுகிறது.

ஆத்யப்ரதிவாதி பயங்கராசார்யர் ஆதரித்த ஸம்ப்ரதாயப்படியேதான் அவருடைய மரபில் வருவோர் யாவரும் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் ஒழுகி வருவது. ப்ரதிவாதிபயங்கரவம்சஸ்தர்கள் கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயணபுரம் திருநாங்கூர் திருவிந்தளூர் கபிஸ்தலம் முதலான பல திவ்ய தேசங்களில் அந்நாள் தொடங்கியே ப்ரதிஷ்டிதர்களாய் விளங்கிவருகிறுர்கள். மணவாளமாமுனிகள் ஸ்தாபித்தருளின அஷ்டதிக்கஜாசாரியர்களில் ஒருவராகப் பரிகணிதரான அஸ்மத் குலகூடஸ்தர் பணித்தருளினவற்றுள் ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதப்ரபத்தி மங்களாசாஸநங்கள் ஜகத்ப்ரஸித்தமானவை. அதில் "ஸௌம்யோ

பயந்த்ருமுநிநா மம தர்சிதௌ தே" என்றும் "ஸ்ரீமத் ஸுந்தரஜாமாத்ருமுநிமாநஸவாஸிநே" என்றும் தம்முடைய ஆசார்ய ப்ரதிபத்தி விசேஷத்தை நாடுநகரமும் நன்கறியப் பொறித்துவைத்திருப்பது திருவேங்கடமுடையான் ஸன்னிதியில்மட்டுமன்றிக்கே கடல்சூழ்ந்த மண்ணுலகிலுள்ள நகரந்தோறும் ராஜதானிதோறும் அக்ரஹாரந்தோறும் க்ராமந்தோறும் மடங்கள்தோறும் மாளிகைதோறும் மனைகள் தோறும் முழங்கிக்கொண்டேயிருக்கின்றது. எந்த நாட்டில் வஸிப்பார்க்கும் கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தவாறே செவிப்படுவது இதுவேயன்றோ.

மணவாளமாமுனிகள் உபதேச ரத்தினமாலை அருளிச்செய்யத் தொடங்கின போது, எம்பெருமானார் நியமித்தருளின ஸிம்ஹாஸநாதிபதிகளின் கணக்கிலே எழுபத்துநான்கு பாசுரங்களையிட்டுத் தலைக்கட்டத் திருவுள்ளம்பற்றி யிருந்ததைத் தெரிந்துகொண்ட ப்ரதிவாதி பயங்கராசாரியர் "ஆழ்வாராசாரியர்களின் பெருமைகளெல்லாம் விளங்க அவதரிக்கு மிந்தப் பிரபந்தத்தில் மாமுனிகளின் பெருமை காட்டும் பாசுரம் ஒன்றாவது இடம்பெற்றதில்லையாகில் சந்திரனில்லாத நக்ஷத்ர மண்டலம் போன்றதாகுமே; அங்ஙனுகாமைக்கு ஓர் உபாயம் செய்யவேணும்" என்று சிந்தித்து எழுபத்துமூன்று பாசுரங்கள்மட்டுமே மாமுனிகள் அருளிச்செய்யும்படி அழகிய மணவாளன் கட்டளையிடுமாறு செய்து "மன்னுயிர்காளிங்கே மணவாளமாமுனிவன், பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை, உன்னிச், சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக், கரத்தாலே தீண்டல்கடன்" என்கிற பாசுரத்தைத் தாம் பணித்து அதை ரத்தினமாலையோடு சேர்த்து எழுபத்துநான்காம் பாசுரமாக அநுஸந்திக்கும்படி செய்வித்து அந்நாள் தொடங்கி உலகமெல்லாம் ஸமரீதியாக அநுஸந்தித்து வருவது கட்கூடு. "செய்ய தாமரைத்தாளிணை வாழியே" என்னும் வாழித்திருநாமம் ப்ரதிவாதிபயங்கராசார்ய ப்ரணீதமென்பதுநிர்விவாதம். இவர் தாம் இயற்றி யருளின ஸ்ரீவரவரமுநி சதகத்திலே "ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணுபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்யராவணுநுஸாரிணும்"யென்றாற்போன்ற கர்ணகடோரச்லோக மொன்றுகூடத் தலைகாட்டாது. தேசிகன் தம்முடைய விபவகாலத்தில் "வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே" என்கிற ஆழ்வாருடைய மங்களாசாஸனம் பலிக்கும்படி உலகம் புகழ எழுந்தருளி யிருக்க, அப்போதே அவர் அனைவராலும் அவமதிக்கப்பட்டும் பழிக்கப்பட்டும் வந்தார் என்று காட்டி "ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண......" இத்யாதி சுலோகத்தை நவீனர் இயற்றி இது ப்ரதிவாதிபயங்கராசார்ய ப்ரணீதமென்று கூறிக் கதறிக்கோஷிப்பவர்கள் தாராளமாகக் கோஷிக்கட்டும். அவ்வாசிரியர் தம்முடைய ஆசார்ய பக்தியை அற்புதமாகக் காட்டித் தேனும் பாலுமமுதுமான ச்லோகரத்னங்கள் கொண்ட சதகத்திலே

"அவாக்பூஷாஜுஷ்டை: அபுவநகுருப்ரேமபரிகை:
அமூலர் க்ஷாத்பூதை: அவரதகுரூபாஸிதபதை:,
க்ருதம் தைஸ் தைஸ் ஸர்வைர் குருபி, அமஹாயோகிபிரிதி
வ்யவஸ்யந்தஸ் ஸந்தோ மம ஹ்ருதி லஸந்து ப்ரதிகலம்"

என்றிந்த ஒருச்லோகமே போதும் பக்தர்கள் நித்யாநுஸந்தானம், செய்து உஜ்ஜீவிக்க.

கிம் பஹுநா? அஸ்மத்குல கூடஸ்தாசார்யர் ஆதரித்தருளின பாரமார்த்திக ஸம்ப்ரதாய ஜயத்வஜ ஸத்க்ரந்தங்களிலே "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்த தெல்லாம் ஸாதிக்கவல்லோம்" என்றாற்போன்ற வார்த்தைகள் லவலேசமும் தலை காட்டமாட்டா; மந்தப்ரலபிதம் மூர்க்கவிஜல்பிதம் என்றாற்போன்ற பூர்வாசார்ய நிந்தைகளும் காணக்கிடையா; முன்னுக்குப் பின்னும் பின்னுக்கு முன்னும் உதைக்கும் பேச்சுக்களும் இறையும் இடம் பெறமாட்டா.

திருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச் செயலையுங்கூடத் திரஸ்கரித்து *மத்யோபஹத பாத்ரஸ்த தீர்த்தத்ருஷ்டாந்த வர்ணநமித்யாதி காரிகைகளும் காணப்படமாட்டா. ஸதாசார்ய ஸ்ரீஸூக்திகளை தாத்பர்யமறியாமல் முதலில் கண்டிப்பது, பிறகு பெரியாரை யடிபணிந்து தாத்பர்ய மறிந்து 'அப்படி சொன்ன வர்களுக்கு இப்படி தாத்பர்யம்' என்பது, பிறகு அதையே ஸகலஸம் மத சாஸ்த் ரார்த்தமாகத் தழுவியெழுதுவது.... ஆக இப்படிப்பட்ட விலக்ஷணவாக்விந்யாஸங் களும் காணப்படமாட்ட. இதற்கெல்லாம் ஸ்தல விசேஷங்கள் காட்டவேணுமோ? காட்டாத தொன்றுண்டோ?

இங்கு ஒன்றே காட்டுவோம். ஸ்தோத்திரரத்னத்தில்*மம நாத யதஸ்தி யோஸ் ம்யஹ மித்யாதிச்லோகம் பூர்வோக்த அநுசயபரமன்றென்று அவ்விடத்து வியாக்கி யானத்திலே மறுப்பதும், ரஹஸ்யத்ரயஸாரத்திலே இதற்கு முரணாக "...அநுசயித் ததும்" என்று அநுசய பக்ஷத்தைத் தழுவுவதுமான ஸம்ப்ரமங்கள் எல்லை கடந்தன வன்றோ.

இவற்றுக்கெல்லாம் ஸமாதானம் சொல்லவல்லாருமுளர்; எவ்விதமான ஸமா தானம் தெரியுமோ? அதிகரணஸூராவளியில் "வ்ருத்திக்ரந்தே து" என்கிற சுலோ கத்தில் வ்ருத்திக்ரந்த உக்திக்கும் தத்வரத்நாகர உக்திக்கும் பரஸ்பர விரோதத்தை உத்பாவனம் பண்ணி *அத்ர ப்ரூம:* என்று கம்பீரமாக ஸமாதானமிடத் தொடங்கி *நிர்வாஹஸ்துர்பசாராத்* என்றாப்போலே "அப்போதிருந்த திருவுள்ளத்தை யநு ஸரித்து அங்ஙனேயருளிச் செய்தபடி; இப்போதிருந்த திருவுள்ளத்தை யநுஸரித்து இங்ஙனே யருளிச் செய்கிறபடி" என்று பொருந்த வைப்பதாம்.

இன்னும் பலபல விஷயங்களை விரிவாக வுணர்த்தவே இந்த வ்யாமோஹ ப்ரசமௌஷதம் அவதரிக்கின்றது. இப்போது முதல் ஆன்னிகம் மட்டுமே வெளி வருகின்றது. அடைவே வெளிவந்து அபரிமித பரமார்த்தங்களை ஆவிஷ்கரிக்கும் இன்று நாளையில் வெளிவரவிருக்கும் வைதிக மநோஹராவும் ரஸிகமநோஹரை யாகும். அது கிடைக்கப் பெறுதவர்கள் 25 காசு ஸ்டாம்பு அனுப்பிப்பெறலாம்.

சிறு குறிப்பு;— முப்பதாண்டுகட்கு முன்பு (வைகுண்டவாஸியான) திருச்சி ஏ. வி. கோபாலாசார்ய ஸ்வாமிக்காக ஒரு வ்யாமோஹ ப்ரசமௌ ஷதம் வெளியிட்டோம்; அது அவர்க்கு மிக்க நன்மை பயந்தது; இதுவுமங்ஙனேயாம்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

# வ்யாமோஹ ப்ரசமௌஷதம்

— முன்னுரை —

*அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த நிறை ஞானத் தொருமூர்த்தியான கண்ணபிரானுடைய கீதையானது, அவன்தனக்கும் அர்ஜுன னுக்கும் ஸம்வாதமாக அமைந்திருப்பதனுல் விஷயங்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாகிறது. அந்த ரீதியில் அடியேன் இந்நூலை ஸம்பாஷணையாக அமைக்க விரும்பினேன். ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம். நியாய வேதாந்த சிரோமணி. அனந்தாசாரியர் என்னருகில் வாழ்பவர். உபயவேதாந்த நிஷ்ணுதர். நல்ல ரஸிகர். க்ரஹண தாரண போஷணபடுவானவர். அவர்க்கும் எனக்கும் நடந்த ஸம்பா ஷணையே இந்நூலாக வடிவெடுத்து வெளிவருகின்றது. இந்த ஸம்பாஷணையை ஊன்றி வாசித்துத் தரித்துக்கொள்ள வல்லவர்கள் நமது பூருவாசாரியர்களின் திருவுள்ளக் கருத்துக்களையெல்லாம் செவ்வனே தெரிந்து கொள்ளக்கூடுமென்பது எமது திடநம்பிக்கை.

பிள்ளைலோகாசார்யரருளிச் செய்த முமுக்ஷுப்படியின் முடிவில் "உய்யக் கொண்டார் விஷயமாக உடையவ ரருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது" என் ெறாரு சூர்ணையுள்ளது. நாதமுனிகளின் திருவடியான உய்யக்கொண்டாரல்லர் இவர். உடையவர் காலத்திலிருந்தவர் இவர். இவர்க்கு உடையவர் ஒரு உபதேசம் செய்தருள, அது கேட்ட அவர் "அர்த்தம் அழகிதாயிருந்தது, எனக்கு ருசி பிறக்க வில்லை" என்ருராம். அதற்கு உடையவர் ஸாதித்தாராம்—"வித்வானுகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய்; பகவத் ப்ரஸாதமில்லாமையாலே ருசி பிறந்ததில்லை" என்று. இந்த வார்த்தையில் "வித்வானுகையாலே அர்த்தத்துக்கு இசைந்தாய்" என்பது ஸாரமானது. அடுத்தவார்த்தை மிகவும் ஸாரமானது. அது நிற்க. உண்மையான வித்வான்களாயிருந்தால் அர்த்தத்தில் விஸம்வாதம் கொள்ளாமல் இசைந்து போருவர் என்பது இதனுல் தெளிவாகிறது.

இக்காலத்து வித்வான்கள் அர்த்ததத்துவத்தை நமது பல நூல்களால் நன் கறிந்து வைத்தும் மருந்தில்லாத சில வியாதிகளால் தூஷிதமநஸ்கர்களாயிருப்பத ஞல் இசைவுகாட்ட இயலாதே தடுமாறுகின்றனர். அந்த வியாதிகள் தீரவே இந்த ஔஷதம் அவதரிக்கின்றது. இது திவ்யௌஷதம்; ஸித்தௌஷதம். நன்கு பயன் படுமென்று நம்புகிருேம்.

— முன்னுரை முற்றிற்று —

⊰ வ்யாமோஹ ப்ரசமௌஷதப்ராரம்பம் ⊱

(அனந்தரும் அண்ணவும் ஸம்பாஷிப்பது)

அனந்தர்— ஸ்வாமிந்! தேவரீர் நியமித்தபடி தேசிக ரஹஸ்யங்களையும் ஸ்தோத்ரபாஷ்ய சதுச்ச்லோகீ பாஷ்யாதிகளையும் யதாமதி பரிசீலித்தேன். முதல் ரஹஸ்யமான ஸம்ப்ரதாயபரிசுத்தியில்—"ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில் ஒன்றிலும் அர்த்தவிரோதமில்லை; வாக்ய யோஜநா பேதமேயுள்ளது; தேசகாலாவஸ்தா விசேஷங்களாலேவரும் அநுஷ்டானவைஷம்யம் சாஸ்த்ராநுமதம்." என்கிற பங்க்தி காண்கிறது. ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களென்பவை எவை? விளக்கியருளவேணும்.

அண்ண— இது என்ன அஜ்ஞாதப்ரச்நமா? ஸ்ரீபாஷ்யகாரரிடமிருந்து சிஷ்ய பரம்பரைகள் பலவிதமாகப் பிரித்திருக்கின்றன. மேலே குருபரம்பராஸாரமென்கிற ரஹஸ்யத்திலே தேசிகன் தாமே ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி சிஷ்ய பரம்பரையை ஸாதித்துவருகையில் எம்பெருமானுர் வரையிலருளிச்செய்து அதற்குப் பிறகு "இவர் ஸ்ரீபாதத்தில் ஆச்ரயித்த முதலிகளைத் தந்தாம் ஸம்ப்ரதாயங்களிலே அறிந்துகொள்வது" என்று தலைக்கட்டியிருக்கிறுர். அதனுலே ஸ்ரீபாஷ்யகார சிஷ்ய பரம்பரை பஹுமுகமாகப் பிரியலுற்றதென்பதை உணரலாம், முக்கியமாக எம்பார் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை......என்றெரு பரம்பரையும், திருக்குருகைப் பிரான் பிள்ளான் எங்களாழ்வான் நடாதூரம்மாள்......என்றெரு பரம்பரையும் ஆக இருபரம்பரைகள் ப்ரஸித்தமானவை. இவற்றை தேசிகன் தமது காலத்தில் கண்டவராதலால் இவற்றைத் திருவுள்ளம் பற்றியே "ஸ்ரீபாஷ்யகாரருடைய சிஷ்ய ஸம்ப்ரதாயங்களில்......" இத்யாதியான ஸம்ப்ரதாயபரிசுத்திவாக்கியத்தை அவதரிப்பித்தருளினுரென்றுகொள்.

அனந்தர்— இவ்விருவகை ஸம்ப்ரதாயங்களிலும் ஒன்றிலும் அர்த்த விரோதமில்லையென்றும், வாக்ய யோஜநாபேதமேயுள்ளதென்றும் தேசிகன் கல்வெட்டாக ஸாதித்திருக்கும்போது, 'அவ்வர்த்தம் பிசகு, இவ்வர்த்தம் தவறு" என்றுப்போலே சில தூஷணங்களைச் சிலர் பரப்பிவருகின்றுர்களே, இது எங்ஙனே பொருந்தும்? சில விஷயங்களை எடுத்தே விஜ்ஞாபிக்கிறேன்; எம்பெருமானுடைய க்ருபை ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா? என்றெரு விவாதத்தைக் கிளப்பி நிர்ஹேதுகமென்றுல் ஸர்வமுக்தி ப்ரஸங்கம்வரும், ஆகையாலே நிர்ஹேதுகத்வ வாதம் ஹேயம்—என்றும், 'ப்ரபத்தி உபாயந்தான், உபாயமன்றென்கை அஸம்பத்தம்' என்றும், 'பிராட்டிச்கு உபாயத்வமில்லை யென்பது தவறு; அவளும் மோக்ஷப்ரதைதான்' என்றும்...... இங்ஙனே ஒருசாரார் போராடிவருகிறுர்களே; இந்த போராட்டம் இரண்டு மூன்று விஷயங்களில் மட்டுமன்றே; ஏறக்குறைய இருபது விஷயங்களில் காண்கின்றதே; அஷ்டாதச பேத மென்றும் சொல்லிவருகிறுர்கள்; "ஒன்றிலும் அர்த்த விரோதமில்லை; வாக்ய யோஜநாபேதமாத்ரமேயுள்ளது" என்றருளிய தேசிகன் திருவுள்ளத்திற்கு இது பொருந்துமா?

அண்ண— நீர் இப்படி கேட்பது தகுதியன்று. யாருடைய போராட்டத்தை யார் தடுப்பது? தேசிகனே ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஓரிடத்தில் "இத்தம் அர்த்தா

விரோ தேபி யோஜநா மாத்ர பேதத:, ப்ராசாம் விவாதஸ் ஸம்வ்ருத்த: பாஷ்ய காரை: அவாரித:,'' என்றொரு காரிகை இட்டிருக்கிறார். எம்பெருமானார் காலத்தி லேயே சிலர் போராடினதாகவும் அதை ஸ்வாமி தடுக்கவில்லை யென்றும் ஸாதித்த படி. ஆகவே போராடுகிறவர்கள் தாராளமாகப் போராடட்டும். தேசிகனுட்பட ஸகல பூர்வாசாரியர்களுக்கும் ஸம்மதமான அர்த்தங்கள் எவை? என்று என்னைக் கேட்பதாயிருந்தால் நான் ப்ராமாணிகமாக விடைகூற ஸஜ்ஜனயிருக்கிறேன்.

அனந்நர் — தேவரீருடைய ஸ்ரீகோசங்களை யெல்லாம் ஒன்றுவிடாமல் அடி யேன் ஸேவித்திருப்பவனுகையாலே தேவரீருடைய நிரூபணங்கள் நிபுணங்களாகவே யிருக்குமென்பதில் அடியேனுக்கு ஈஷத்தும் ஐயமில்லை. புத்தகங்களில் வாசிப்பதை விட நேரில் ஸாதிக்கக் கேட்பது பசுமரத்தாணிபோல் நெஞ்சில் நன்கு பதியுமாகை யாலே நேரில் ஸாதிக்கக் கேட்டுணர விரும்பியே இன்று விடைகொண்டிருக்கிறேன். ஒவ்வொன்ருக வினவுகின்றேன். அடியேனுக்கு வினவத்தெரியாத விஷயங்களையும் ஸ்வாமியே உத்தாபனம்பண்ணியு முரைத்தருளவேணும்.

அன்னு—அதற்கென்ன தடை? பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி விமர்ச விசேஷங்க ளாலே ஒரு போதுபோக்கு ஏற்பட்டால் இதனில் மிக்கதோர் இன்பமுண்டோ? வாதிப்ரதிவாதிகள் கூடிப் பேசினுல் கோபதாபங்களில் பர்யவஸிக்கும். நமக்கோ ப்ரதித்வந்த்விபாவமில்லை. ஸஹ்ருதயமாகப் பேசுவோம். இந்த நமது ஸல்லாபம் எத்தனை நாள் தொடர்ந்து சென்ருலும் ஸந்தோஷமே.

அனந்நர்—பகவத்க்ருபை ஸஹேதுகமா? நிர்ஹேதுகமா என்கிற விஷயத்தைப் பற்றியே முன்னம் சர்ச்சிக்க விரும்புகிறேன். இந்த வொருவிஷயம் நிஷ்கல்மஷமாகத் தேறிவிட்டால் ஸம்ப்ரதாயத்தில் விசாராஸ்பதங்களான அனேக விஷயங்கள் முடி வடைந்தனவாம் என்று அடியேன் கருதுகின்றேன். இதில் பிரபலமான ஆக்ஷேபம் இன்னதென்பதை முன்னம் விஜ்ஞாபிக்கிறேன். சாரீரக மீமாம்ஸையில் *வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்* என்கிற ஸூத்ரமுள்ளது. இதை யடியொற் றியே பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தர சதகத்தில் ''நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந், வைஷம்யநிர்க்ருண தயோர் ந கலு ப்ரஸக்தி: தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவா: ச்ருதயோ க்ருணந்தி.'' என்கிற ச்லோகமருளிச்செய்துள்ளார். எம்பெருமான் நிர்ஹேதுகமாகவே க்ருபை பண்ணு கிறுனென்று கொண்டால் அவன் ஸாவபூத ஸுஹ்ருத்தாகையாலே எல்லார்க்கு மொக்கப் பண்ணவேண்டி வரும். சிலர்க்குப் பண்ணிச் சிலர்க்குப் பண்ணுதொழிந் தால் வைஷம்யாதி தோஷங்கள் ப்ரஸங்கிக்கும். ஆகவே, நிர்ஹேதுகமன்று க்ருபை; தத்தத் கர்மாநுகுணமாகவே க்ருபை பண்ணுகிறுனென்ன வேண்டுகையாலே ஸஹே துகந்தான் என்பது பூர்வபக்ஷவாதம். இதற்கு ஸமாதானம் அடியேன் நினைத்திருப்ப தென்னவென்ருல், ''நாஸௌ புருஷகாரேண நசாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந.'' என்று அப்பரமபுருஷன்தானே சொல்லியிருக்கையாலும், ''ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:'' என்கிற ப்ரமாண பலத்தாலும் எம்பெருமானுக்கு ஸ்வாதந்த்ர்யத்தை இசைந்தே தீரவேண்டும்.

ஜாயமாந கடாக்ஷமென்பது கருக்குழியிலிருக்கும்போது செய்தருளும் கடாக்ஷம்; அப்போது அதற்கு எவ்விதமான ஹேதுவையும் சொல்லவோ கல்பிக்கவோ முடியாதல்லவா? இதற்குமேல் தேவரீர் ஸாதிப்பதைக் கேட்க விரும்புகிறேன்.

அண்ணு — இந்த உம்முடைய உபபாதனம் ஸமஞ்ஜஸமே; அப்ரத்ருஷ்யமானதே; ஆனாலும் எந்த விஷயத்திலும் தேசிக திவ்யஸூக்தியை முன்னம் காட்டிவிட்டுப் பிறகே மற்ற ப்ரமாணங்களைக் காட்டவேணுமென்பது என்னுடைய கொள்கை. ஸ்வாமி தேசிகன் ஸாதித்துவிட்டாரென்றால் அது சீமைத் தீர்ப்பல்லவா! ஆகவே அவருடைய திருவாக்குக்களை யெடுத்துக்காட்டவேண்டும்.

அனந்தர்:—அது தேவரீருக்கே நிலமானது. தவிர, அவர் தாமும் ஓரிடத்திலே ஒருவிதமாகச் சொல்லி மற்றோரிடத்திலே மற்றொருவிதமாகச் சொல்லியிருந்தால் என்செய்வது? அப்படிப்பட்ட இடங்களையும் தேவரீருடைய நூல்களில் காட்டியிருப்பதனால் இது கேட்கவேண்டியதாகிறது.

அண்ணு:—அப்படிப்பட்ட இடங்கள் அதிகமில்லை. "ஆனைக்கும் அடிசருக்கும்" என்னுமாபோலே அப்படி நேர்ந்துள்ளவிடங்களில் கைகூப்பவேண்டியது தவிர வேறில்லை. ஸ்ரீராமாயணத்தில் "மஹதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதே நலே" என்றவிடத்தை (ஸச்சரித்ரரக்ஷையில்) கொண்டுமஹாதேவபதம் ஸமஸ்தமாயிருந்தால்தான் ருத்ரபோதகமாகும், வ்யஸ்தமாயிருந்தால் ஆகாது-என்றெழுதிவைத்து, தாமே பாதுகாஸஹஸ்ரத்தில் ருத்ரவிவக்ஷயா "நமதி மஹதி தேவே என்று வ்யஸ்தப்ரயோகம் பண்ணிவைத்தார்; இது ஸம்ப்ரதாய விஷயமன்று. இதுபோல் சிலவிடங்களில் ப்ரமாதம் காண்பதுண்டு. அத்தகைய இடங்கள் இருக்கட்டும்.

அனந்தர்:—ப்ரஸக்தி வந்தபடியாலே கேட்கிறேன். "மஹதே தைவதா யாஜ்யம்" என்றவிடத்தில் தைவதபதமுள்ளதேயொழிய தேவபதமில்லை; தேவபதமிருந்தால்தான் ருத்ரப்ரதீதி யுண்டாகும்; தைவதபதமுள்ள இவ்விடத்தில் சங்கைக்கு உதயமேயில்லை யென்று ஒரேவார்த்தையில் முடித்துப்போகலாமாயிருக்க, இங்கு சர்ச்சையை வளர்த்தினது அநவஸரந்தானே; இதற்கு வித்வான்கள் என்னசொல்லுகிறார்கள்? (சேஷம் கோபேந பூரயேத்) (நிந்தாபிச்சேஷபூரணம்) என்பதுதானே?

அண்ணு:—"சிரஸா ச்லாகதே பூர்வம் பரம் கண்டே நியச்சதி" என்றதை நினைவூட்டி நின்றார் ஒரு பண்டிதர். அந்தவிஷய மிப்போது வேண்டாம். பகவத்க்ருபாநிர்ஹேதுகத்வ விஷயம் இப்போர்து சர்ச்சிக்கப்படுவது. இதில் ஸாரமாகச் சொல்லுகிறேன் கேளும். "அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்" என்று புகழப்பட்ட ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில்—"த்ராணே ஸ்வாமித்வம் ஔசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ப்ரதாநஹேது: ஸ்வாந்த்ர்ய விசிஷ்டா கருணா விபோ:." என்று ஸ்வாமி ஸாதித்திருக்கிற காரிகை ஒன்று போதுமே.

அனந்தர்— இந்த காரிகையில் "ஸ்வாமித்வமுசிதம்" என்றிருக்கவேண்டாவா? "ஸ்வாமித்வம் ஔசித்யம்" எள்றிருப்பது பொருந்துமோ? என்று அடியேனுக்கு நெடுநாளாக ஸந்தேஹம்.

அண்ணு— (ஔசித்யம்) என்பதுதான் பொருத்தமானது. உசிதம் என்றால் அது தேசிகனுடைய விவக்ஷைக்குச் சேராது. இந்த காரிகையின்பொருள் உமக்குத்

தெரிந்திருக்கின்றதன்றோ? அஸ்மதாதிகளை ரக்ஷிப்பது ஸ்வாமியான அவனுக்குக் கடமை; தன்னுடைய கருணைதான் ரக்ஷிக்கைக்கு ப்ரதானமான ஹேது; அப்படியாகில் அந்த கருணை எல்லார் திறத்திலும் ப்ரஸரிக்கக்கூடாதோவென்று கேள்வி வரும். அதற்குப் பரிஹாரமாகவே (ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா) என்று கருணைக்கு விசேஷணமிடப் பட்டது ஸ்வாதந்த்ரியமாவது நியோகபர்யநுயோக அதர்ஹத்வம். அஃதுடையவனுன ஸர்வேச்வரன் "கேவலம் ஸ்வேச்சயைவா ஹம்ப்ரேக்ஷே கஞ்சித் சுதாசந" என்று தானே சொல்லிவைத்தபடி செய்யுமளவில் நிவாரகருண்டோ? க்ஷேபிப்பாருண்டோ? "பட்டத்துக்குரிய ஆணையும் அரசும் செய்யுமவை ஆராயாது" என்கிற ஆசார்யஹ்ருதயஸூக்தியை அடியொற்றியே தேசிகன் இந்த காரிகை அருளிச் செய்தது.

அனந்நர்— ஸ்வாமி தேசிகன் இவ்வளவு வ்யக்தமாக ஸாதித்திருக்க, ப்ரத்யர்த்திகள் இதில் போராடுவது ஆச்சரியமே. இவர்கள் ஆசார்ய பீடத்தில் அமர்ந்து விவேகிகளான சிஷ்யர்களுக்கு இதுபோன்றவிடங்களை ப்ரவசனம் செய்யும் போது என்னதான் சொல்லுகிறார்களோ? எல்லாருமேயே தலையாட்டி பொம்மைகளாக இருப்பர்கள்? சிரோமணிகள் என்று வந்து உட்காருகிறார்களே; அவர்கள்தான் ஒன்றுங்கேளாமலிருப்பர்களா?

அன்னு— ஸ்ரீமத் திருமங்கலம் ஸ்வாமி ஸாதித்திருப்பதை மறந்தீரோ? இத்தகைய ஸ்தலங்களிலே "வேங்கடராகவனுக்கு நிஷேகமுஹூர்த்தமாகி நாலைந்து ஸம்வத்ஸரமாயிற்றே, இன்னும் ஸீமந்த ப்ரஸக்தி ஏற்படவில்லையோ? வரத விஷ்ணுவுக்கு ஸீமந்தமாகி மூன்றுமாதமாகிறதே, இன்னும் ப்ரஸவமாகவில்லையோ?" இத்யாதிப்ரச்ந பரம்பரைகளாலே ஆந்யபர்யத்தை விளைப்பது அஸம்பாவிதமன்றே. ஸமர்த்த சிஷ்யர்கள் நிர்ப்பந்தித்துக் கேட்டால் "இது பரமதாநுவாதமப்பா" என்று சொல்லி மழுப்பிவிடுவதுமுண்டு, மிக வியப்பான வொரு விஷயங்கேளும். "பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம" என்கிற ச்ருதிவாக்யத்திற்கு "பூயிஷ்டாம் நம உக்திம் தே விதேம" என்று அந்வயங்கொண்டு 'பன்முறையாகும் நம உக்தியை உனக்குச் செலுத்துவோம்" என்று ஸாமாந்யமாகச் சிலர் சொல்லும் பொருளைத் தள்ளி "தே பூயிஷ்டாம் நமஉக்திம் விதேம" என்று அந்வயித்து [தே மநஸா பூயிஷ்டாம்] உன்றன் திருவுள்ளத்தாலே கனத்துத் தோற்றுகிற நமஉக்தியைச் செய்யக்கடவோமென்று நம்பிள்ளை யருளிச்செய்த பொருளின் சுவையை ஒருகால் விளக்கியிருந்தேன். சுவைப்பொருள்களை யெல்லாம் அவப்பொருளென்று மறுப்பதற்கு ஒரு திரள் தோன்றியிருக்கிறதல்லவா? அத்திரளுக்குத் தலைவரான வொருவர் மறுப்பெழுதத் தொடங்கிப் பிரபலமாக ஸம்ப்ரமித்தார். அப்போது, இந்தச் சுவைப்பொருளை ப்ரதித்வந்த்விகளின் கூடஸ்தரும் ஆதரித்திருப்பதைக் காட்ட வேண்டி, இவர்கள் கொண்டாடும் ஸாக்ஷாத்ஸ்வாமி யென்கிற வடகலைப் புலவர் தாமெழுதிய திருவாய்மொழியுரையில், நம்பிள்ளை காட்டியருளின சுவைப் பொருளையே ஆதரித்தெழுதியிருப்பதை நானெடுத்துக்காட்டினபோது, மறுவாய் திறக்க முடியாமல் திக்குமுக்கலாடி "அது பரமதாநுவாதமேயொழிய அவர்தமக்கு அபிமதமானதன்று" என்றெழுதிவிட்டார் பண்டிதராஜ பிருதவாஹகர்.

2

அனந்தர்— இது அடியேனுக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவர், "அத்ராஸ்தி பஹு அஸாமஞ்ஜஸ்யம்" என்று தத்வடீகாஸூக்தியை தூஷித்த பிரபல பண்டிதரென்பதை மறந்திலேன். இவரோ இவரைப் போன்றவர்களோ ரஸஜ்ஞர்களுமல்லர்; பிரமாணங்களுக்குக் கட்டுப்படுமவர்களுமல்லர்; ஆசார்ய ஸ்ரீஸூக்தியபிநிவேசமுடையவர்களுமல்லர். (முராரேஸ் த்ருதீய: பந்தா:) என்கிறபடியில் சேர்ந்தவர்களத்தனை பட்டர் அஷ்டச்லோகியில் "ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபேதம் ச்ரியம் ஸம்ச்ரித்ய" என்று புருஷகார ப்ரபத்தியைத் தனிப்படச் சொல்லி, பிறகு "ஆச்ரயஞேசிதாகில குணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே, இஷ்டோபாயதயா" என்று உபாயப்ரதனத்தைத் தனிப்படச் சொல்லி, அதன் பிறகு உத்தரகண்டார்த்தம் ஸாதிக்கையில் "ச்ரியா ச ஸஹிதாய" இத்யாதியருளிச் செய்திருப்பதை விஷமாகக் கண்ட அபரதேசிகர் "அஷ்டச்லோகி பட்டருடைய க்ருதியன்று" என்று துணிந்தெழுதிவிட்டார். அஷ்டச்லோகியை தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அஸக்ருத் கையாண்டிருக்கிறு ரென்பதையும் கணிசித்திலர். மோதிரத்திற்குத் தக்கபடி விரலைச் சீவுகின்ற இவர்களை மறந்திடுவோம். பகவத் க்ருபையின் நிர்ஹேதுகத்வ வாதத்தில் தேசிக திவ்யஸூக்திகளை இன்னமுமருளிச் செய்யக் கேட்க விரும்புகிறேன்.

அண்ணு— நமக்குப் பரமத நிரஸனம் உத்தேச்யமன்று; ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஓரிடத்தில் பட்டர் "ந தே நிரஸநீயா:, அபி து சோசநீயா:" என்றருளிச் செய்த கணக்கிலே அவர்களைப் பற்றிப் பெருமிடறு செய்து அழுது தொலைப்போம்' ஸ்ரீஸூக்திரஸங்களை நாம் அநுபவிப்போம். பகவத்கீதையில் "பஜதாம் ப்ரீதி பூர்வகம் ததாமி புத்தியோகம் தம்" என்றவிடத்தில் (ப்ரீதி பூர்வகம் பஜதாம்) என்று அந்வயித்து பாஷ்யமிட்டார் சங்கராசாரியர். எம்பெருமானர் அங்ஙனன்றிக்கே (ப்ரீதிபூர்வகம் ததாமி) என்று யோஜித்து பாஷ்யமிட்டருளினர். தாத்பர்ய சந்திரிகையில் இதன் வைலக்ஷண்யத்தை உபபாதிக்கின்ற தேசிகன் எம்பெருமானுடைய குணப்பெருமை விளங்கக்கூடிய யோஜனையே ஆதரணீயமென்று விவரித்தார். வணிகன்தான் பெறும் விலைக்குத் தக்கபடி சரக்கு கொடுக்குமாபோலே எம்பெருமான் ஸஹேதுகமாகத்தான் அருள் செய்வன் என்று போராடுகின்றவர்கள் எத்தனை காலமும் எத்தனை யூழியும் அப்படியே போராடட்டுமே.

அனந்தர்— தேசிகன் பரமபதஸோபனத் தொடக்கத்திலே "அசேஷ சிதசித் வஸ்து சேஷியான ச்ரிய: பதிக்கு அநந்யார்ஹ நிருபாதிக சேஷபூதராய் அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்து அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும்விடாதே அநுபவிக்க ப்ராப்தரான க்ஷேத்ரஜ்ஞர் அநாத்யவித்யாகர்மாதி ப்ரவாஹத்திலொழுகிக் கரையேறமாட்டாதே அலமருகின்றபடியைக் கண்டருளின பரமகாருணிகனன பரமசேஷிதானே ஞானக்கைகொடுத்து இவர்களையெடுக்க இடம் பார்த்து அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்ய புத்தி மூலஸுக்ருதவிசேஷங்களை வ்யாஜமாகக் கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி அத்வேஷ ஆபிமுக்ய ஸாத்விகஸம்பாஷணதிகளை யுண்டாக்கி......" இத்யாதி பரமபோக்ய ஸூக்திகளை யருளிச் செய்துள்ளார். இந்த வாக்யச்ரேணியை

அநவரதம் அநுஸந்திக்கப் பெறுமவர்கள் விவேகிகளாயிருந்தால் ஸஹேதுகமென்று வாய்திறக்க ஹேதுவுண்டா? என்று தேவரீர் ஒருநாள் உபந்யாஸத்திலே ஸாதித்ததை ஆங்காங்கு உபந்யாஸகர்கள் அநுவதித்துவருவதைக் கேட்டிருக்கிறேன்.

அண்ணா— இந்த பரமபத ஸோபாந வாக்ய ராசிகளுக்கு எது மூலம் தெரியுமோ? ஸ்ரீவசனபூஷணத்தில் நான்காவது ப்ரகரணத்தின் உபக்ரம சூர்ணிகையே. அதை வாயார அநுஸந்திக்கிறேன், செவியாரக் கேளும்.

"த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணாநுபவம் நடவாநிற்க, அது உண்டது உருக்காட்டாதே, தேசாந்தர கதனான புத்ரன்பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே, ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய் இவர்களைப் பிரிந்தால் ஆற்றமாட்டாதே, இவர்களோடே கலந்து பரிமாறுகைக்குக் கரணகளேபரங்களைக்கொடுத்து, அவற்றைக் கொண்டு வ்யாபரிக்கைக்கீடான சக்தி விசேஷங்களையும் கொடுத்து, கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி, உறங்குகிற ப்ரஜையைத் தாய் முதுகிலே யணைத்துக்கொண்டு கிடக்குமாபோல, தானறிந்தஸம்பந்தமே ஹேதுவாகவிடமாட்டாதே, அகவாயிலே அணைத்துக் கொண்டு, ஆட்சியில் தொடர்ச்சி நன்றென்று விடாதே ஸத்தையை நோக்கி யுடன்கேடனாய், இவர்கள் அஸத்கர்மங்களிலே ப்ரவர்த்திக்கும்போது மீட்கமாட்டாதே, அநுமதி தானத்தைப் பண்ணி உதாஸீநரைப்போலே யிருந்து மீட்கைக்கிடம் பார்த்து, நன்மையென்று பேரிடலாவதொரு நீமையும் காணாதே நெற்றியைக் கொத்திப்பார்த்தால் ஒரு வழியாலும் பசைகாணா தொழிந்தால் அப்ராப்யமென்று கண்ண நீரோடே மீளுவது; தனக்கேற இடம் பெற்ற வளவிலே, என்னூரைச் சொன்னாய் என் பேரைச்சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக் கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்றாப்போலே சிலவற்றை யேறிட்டு, மடிமாங்காயிட்டு, பொன்வாணியன் பொன்னை உரைகல்லிலே யுரைத்து மெழுகாலே யெடுத்துக் கால்கழஞ்சென்று திரட்டுமாபோலே ஜந்ம பரம்பரைகள்தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே யவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்." என்னுமிந்த சூர்ணையை தேசிகன்கண்ட பாடம் செய்து நித்யாநுஸந்தானம் பண்ணினவர்.

அனந்தர்— முநிவாஹனபோகரஹஸ்யத்தின் உபக்ரமத்திலும் தேசிகன்— "காரண விசேஷம் இன்னதென்று அறுதியிட அரிதாயிருப்பதொரு பகவத் கடாக்ஷத்தாலே அயத்நலப்தமான பரதத்வ பரமஹித பரமபுருஷார்த்த விவேகத்தை யுடையவராய்" என்றருளிச் செய்கிறார், ஆனால் இடையிடையே பாசி படருவதையும் பார்க்கிறோம். அது அநிவார்யமேபோலும்.

அண்ணா— பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளிலே "புழு குறித்தது எழுத்தாமாப்போலே" என்றொரு அருமையான ஸ்ரீஸூக்தியுள்ளது. புழு ஊர்ந்து செல்லும்போது ஒரு எழுந்து எழுதவேணுமென்று அதற்கு எண்ணமில்லை; ஆனாலும் நாம் அதை ஊன்றி நோக்கினால் ஏதேனுமொரு பாஷையில் ஒரு எழுத்தாகக்

கொள்ள முடிகிறது. இவ்வண்ணமாகவே எம்பெருமான் நம்து சரிதைகளிலே நன்மை கண்டுபிடித்து நம்மை ரக்ஷிக்கிறுனென்றபடி. இதைக்கண்ட தேசிகன் இதை அப்படியே ஒரு ச்லோகமாக்கி விட்டார்—''குண்க்ஷத லிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:'' என்று. கவர்க்கசதுர்த்தமான(கு) என்னுமெழுத்து சேர்ந்த குணமென்கிற சொல்லுக்குப் புழு என்று பொருள். குணாக்ஷரந்யாயமென்பர்களே. (குண்க்ஷதலிபிக்ரமாத்) உபநிபாதிந:—என்பது த்விதீயாபஹுவசனம். (ந:) என்பதற்கு விசேஷணம். சேதநனுடைய் தலையிலே நினைவின்றிக்கேயிருக்க, பரம புருஷன் தானே மடிமாங்காயிட்டுக் கைக் கொள்ளும்படியைப் பெரியவாச்சான் பிள்ளை பிள்ளைலோகாசாரியர்போல்வார் ஸ்ரீஸூக்திகளிலே ஸேவித்து ரஸித்து அவற்றைக் கையாள்வதுதான் பெரும்பான்மை.

அனந்தர்— தேசிக திவ்யஸூக்திகளிலே தேவரீர் மூன்று ப்ரணாளிகள் ஸாதிப்பதுண்டே, அவை எவை? அடியேனுக்கு மறதி அதிகம்; அதனால் மீண்டு மீண்டும் கேட்கவேண்டியதாகிறது.

அண்ண— ஸ்ரீலோகாசார்யாதி ஸ்ரீஸூக்திகள் சிலவற்றை ஆராய்ச்சியின்றிக்கே ஸஹஸா கண்டித்துவிடுவது முதல் ப்ரணாளி; அப்படிச் சொன்னவர்களுக்கு இப்படி யபிப்ராயம் என்று அபிப்ராயம் காட்டுவது இரண்டாம் ப்ரணாளி; முதலில் ஸஹஸா கண்டித்த அர்த்தங்களையே தமக்கு அபிமதமான அர்த்தமாகத் தழுவிப் போருகை மூன்றாவது ப்ரணாளி. இந்த ப்ரணாளீ விசேஷங்களை எனது நூல்களில் நன்கு நிரூபித்திருக்கக் காணாதவர்களில்லை. கண்டு என் செய்வர்கள் பாவம்! காணக் கண்ணிட்டிருப்பதென்று ஒன்றுண்டோ; அதுதான் அவர்களுக்குத் தஞ்சமாகிறது. முதலில் கண்டிப்பது ஸாஹஸமென்று முடிந்தது.

அனந்தர்— அப்படிப்பட்ட விஷயங்கள் பலபலவற்றை தேவரீருடைய நூல்களில் கண்டேயிருக்கிறேன். அடியேன் மறவாமல் நிச்சலும் தரித்துவைத்துக் கொள்ளும்படியாக இம்மூன்று ப்ரணாளிகளையும் ஒரு விஷயத்தில் (தேசிக ஸூக்திகளிலிருந்து, விளக்கிக் காட்டியருளினால் நல்லது.

அண்ண— சர்விதசர்வணமானாலும் சொல்லுகிறேன் கேளும்; ஸ்ரீலோகாசார்யபர்யந்த ஸகல பூர்வாசார்யர்களினுடையவும் திருவுள்ளத்தை ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்தில் மிக்க தெளிவுடன் ஸாதித்துள்ளார். அந்த ஸ்ரீஸூக்திகளாவன—

''*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்த்வாத்* என்கிறபடியே ஜீவனுக்கு கர்த்ருத்வம் ப்ராமாணிகமே யாகிலும் இது பராதீனமுமாய் அல்பவிஷயமுமாய் ப்ரதிஹதி யோக்யமுமாயிருக்கும். ஆகையால் இவன்தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும் *வரத! தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோபி மே நோதியாத்* என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையால் அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது நீட்ட முடக்கமாட்டாதே அவன் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு அவன் காட்டின வுபாயத்தை அவன் துணைசெய்ய அநுஷ்டித்து அவனால் கொடுக்கப்படுகிற பலத்துக்கு சாதகம் போலே அண்ணாந்திருக்கிற விவனை ஸ்வாதீந ஸர்வ விஷய அப்ரதிஹத

கர்த்ருத்வ முடையவனேடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக வெண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று...... *என்னுணர்வினுள்ளே யிருத்தினேன் அதுவுமவனதின்னருளே யென்றும் *இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே யென்றுஞ் சொல்லுகிறபடியே உபாய பூதனன அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜமாத்ரத்தை அவனேடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்றென்று ஏகசப்தத்துக்கு தாத்பர்யம்''—என்பவை.

இந்த ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்காட்டி ''இவ்வளவு தெளிந்த ஞானமுடைய வொரு மஹானுக்கு இடையிடையே மிகமிக வியக்கத்தக்க கலக்கங்களும் தத்பரீவாஹ திவ்ய ஸ்ரீஸூக்திகளும் எங்ஙனே அவதரித்தனவோ! என்று வியக்கவேண்டியிருக்கிறது. ''அதுவுமவனதின்னருளே—இசைவித்தென்னை யுன் தாளிணைக் கீழிருத்துமம்மானே'' என்றவை ஏதோ வார்த்தைப்பாடாகச் சொன்னவையேயொழிய சாஸ்த்ரார்த்த மன்று என்று எழுதிவைக்கக் கைவரவில்லை. கீழே உதாஹரித்த ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகார ஸூக்திராசியில் இந்த ப்ரமாணங்களைத் தாமே யுதாஹரித்து தாமே நிஷ்கர்ஷித்த சாஸ்த்ரார்த்தமென்பது அடிக்கடி விஸ்ம்ருதமாகிறது பாசி படருகிறது. கீழே விவரித்த நிஷ்கர்ஷத்திற்கு நேர்முரணுக ''ப்ரபத்தியுங்கூட உபாயமன்றென்ருர்கள்'' ''அவர்களின் கலக்கத்தை சமிப்பிக்கிறேம்'' இத்யாதிகளை யும் எழுதிவைத்தார். விரோதபரிஹார ரஹஸ்யத்திலோ வென்னில்;—

''பக்திபோல ப்ரபத்தியும் சோதிதமான உபாயமாய் நின்றது. இது பகவத் ப்ரஸாத வ்யவஹிதமாகையாலே ஸாக்ஷாத் பலஹேதுவன்றென்னுமிடம் பக்த்யாதிகளுக்கும் துல்யமாயிருந்தது. இப்படியிருக்க ப்ரபத்தியை உபாய மன்றென்று விசேஷித்துச் சொல்லுமவர்களுக்கு தாத்பர்யமென்னென்னில். சாஸ்த்ரங்கள் பக்தியைப்போலே ப்ரபத்தியையும் உபாயமாக விதிக்கச் செய்தேயும் இவ்வுபாயத்தினுடைய அநுஷ்டான சரீரத்தைப் பார்த்தால் பரந்யாஸ ப்ரதாநமாய் நீயே உபாயமாக வேண்டுமென்று அபேக்ஷிக்கிறபடியே பரஸ்வீ காரம் பண்ணிக்கொண்டு உபாயாந்தரஸ்தானத்திலே நிற்கிற ஈச்வரனுடைய நிரபேக்ஷோபாயத்வம் இவ்வித்யைக்கு வேத்யாகாரமாய் நிற்கையாலே வித்யாந்தரங்களிற் காட்டில் இவ்வாசியைப்பற்ற ப்ரபத்தியை உபாயமன் றென்ருர்கள்'' என்றெழுதிவைத்தார்.

இது பரகீய தாத்பர்யமா? ஸ்வகீய தாத்பர்யமா? ஸகல சாஸ்த்ர தாத்பர்யமா? என்பதைச் சற்று விசாரிக்கவேணும். மேலே காட்டின தமிழ் வாக்யத்தை அப்ப டியே ச்லோகமாக்கினர் ந்யாஸதிலகத்திலே ''ஹேதுர் வைதே விமர்சே பஜநவத் இதரத் கிந்த்வநுஷ்டாநகாலே வேத்யஸ் த்வத்ரூபபேதோ விவித இஹ ஸதுபாயதா அந்யாநபேக்ஷா'' என்று விரோத பரிஹாரவாக்யராசியில் ப்ரபத்தியை உபாயமன் றென்று விசேஷித்துச் சொல்லுகிறவர்களுக்கு, என்றதை உற்றுநோக்கினல் கர்மஜ்ஞாநதிகளுங்கூட பகவானையிட்டு அந்யதாஸித்தமாய் அநுபாயமாகையாலே ப்ரபத்தியைமட்டும் விசேஷித்தெடுத்து உபாயமன்றென்று கழிக்க வேண்டியதில்லை; ஆனலும் ஆசாரியர்கள் கழித்திருப்பது எதனலென்னில், இந்த ப்ரபத்தி வித்யை யானது தர்மிக்ராஹக ப்ரமாணந்தாலே அநுபாயமாய்க்கொண்டே ஸ்வரூப ஸித்தி

பெறுகையாலே என்று ஸ்வாமீ தேசிகன் அறுதியிட்டு வைத்தாராகிறுர். நான் கண்ட மூன்று ப்ரணுளிகளையும் கண்டீரா?

அனந்தர்— ''விசேஷவித்பாரிஷதேஷு நாத! விதக்தகோஷ்டீஸமராங்கணேஷு, ஜிகீஷதோ மே கவிதார்க்கிகேந்த்ராந் ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநம் அப்யுபேயா:.'' என்று தம்முடைய ஸமீஹிதத்தை வ்யக்தமாகக் காட்டினவர் அந்த ஸமீஹிதஸித்தியோடு த்ருப்திபெற்று நின்றிருக்கலாம். ''ரங்காஸ்தாநே ரஸிக மஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத்ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந'' என்றும், ''விசுத்ததேசிகவதா ரங்கதாம்நி'' என்றும் ''விரிதிரைநீர்வையத்துள்ளே வேதாந்தவாரியனென்றியம்ப நின்ருேம், நாண்பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே'' என்றும் ஸாதித்தபடி தெள்ளியார் பலரைக் கோயிலில் திருவடிதொழுது பெற்ற ரஸ்யரஹஸ்யார்த்தங்களோடுகூட விபரீதார்த்தங்களையும் கலசிக்கலசி யெழுதிவைத்திருக்கையாலே உபதேச ரத்தின மாலையில் *முன்னோர் மொழிந்த பாசுரம் அவதரிக்க வேண்டியதாயிற்றென்று நிர்ணயிப்பது நிரவத்யமே யாகும். ''யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ.''

அண்ணு— வைகுண்டவாஸியான மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி தேசிகனுக்கு இந்த அவத்யம் கூடாதென்றே விபரீதார்த்தகங்களான வாக்யங்களை ப்ரக்ஷிப்தங்களென்றே ஸாதித்துவந்தார்.

அனந்தர்— அத்ருஷ்டார்த்த மென்றும் உபாயாநுஷ்டான மென்றும் ஏதோ நடத்திவருகிறுர்களே, இதுபற்றி தேவரீருடைய திருவுள்ளமென்ன? தேவரீர் வெளியிட்டிருக்கிற அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வம் முதலான க்ரந்தங்களைப் பலகால் பரிசீலனம் செய்திருக்கிறேன். ஒருமுறை ப்ரவசனமும் செய்திருக்கிறேன். ஆனுலும் ஸாரமாயும் ஸம்க்ஷேபமாயும் ஸாதிக்கக் கேட்க விரும்புகிறேன்.

அண்ணு— அப்படியே சொல்லுகிறேன். இந்த அனுஷ்டானம் இவர்களுக்கு ஆவச்யகமானதே, அவர்ஜநீயமானதே யென்பதுதான் என்னுடைய அபிப்ராயம். இதைப்பற்றி ஸம்க்ஷேபமென்ன? விரிவாகவே சொல்லுகிறேன் கேளும். ச்ருதப்ரகாசிகா பட்டரும் நம் நிகமாந்தமஹா குருவும் அருளிச் செய்திருப்பவை கேளும்.

அனந்தர்— ச்ருதப்ரகாசிகையிலும் தத்வடீகையிலும் ஸாதித்திருப்பவற்றை இப்போது தேவரீர் ஸாதிக்கப்போவதாக நினைக்கிறேன். அவ்விரண்டு ஸ்ரீகோசங்களையும் அடியேன் எடுத்துவந்து கையில் வைத்துக்கொள்ளுகிறேன். பிறகு ஸாதிக்க வேணும். க்ஷணமாத்ரம் தாமதம் பொறுத்தருளவேணும்.

அண்ணு— அந்த ஸ்ரீகோசங்களோடுகூட தேசிக ரஹஸ்ய ஜாலங்களையும் எடுத்துக்கொண்டு வருவது நல்லது.

(அப்படியே ஸ்ரீகோசங்களைக் கொண்டு வந்து விட்டார் அனந்தர்.)

அண்ணு—ஸ்ரீபாஷ்ய மங்களச்லோகமான *அகில புவநஜந்மேத்யாதி ச்லோகத்தில் இரண்டாவது பாதம் ''விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே'' என்பது. முதற் பாதத்திலேயே ரக்ஷணுர்த்தகமான ஸ்தேம சப்தத்தினுல் எம்பெருமான் ஸர்வ ரக்ஷகனென்னுமிடம் சொல்லப்பட்டிருக்க, மீண்டும் அந்த ரக்ஷகத்வத்தையே தெரிவிக்கு

மதான இரண்டாவது பாதமிட்டிருப்பது விசேஷ ரக்ஷணமான மோக்ஷப்ரதாநத்தைப்பற்ற என்னுமிடம் ஸம்ப்ரதாயதத்வஜ்ஞர்களுக்கு விவரண நிரபேக்ஷம்.

அனந்தர்— நம்மாழ்வார் திருவாய்மொழியில் *வீடாந் தெளிதரு நிலைமையதொழிவிலன்* என்று மோக்ஷப்ரதத்வத்தைத் தனிப்படச் சொல்லியிருக்கையாலேயென்று தேவரீர் அருளிச் செய்யக் கேட்டிருக்கிறேன்.

அண்ணா—அது நிற்க. விநத-வணங்கின, விவித-பலவகைப்பட்ட, பூதவ்ராத-பிராணிஸமூஹங்களை, ரக்ஷா—ரக்ஷிப்பதையே, ஏகதீக்ஷ—முக்கியமான விரதமாகக் கொண்டவனெம்பெருமான் என்பது சப்தார்த்தம். இங்கு பூதவ்ராத என்ற விடத்தில் ச்ருதப்ரகாசிகையில் பட்டரும், தத்வடீகையில் நிகமாந்தமஹாகுருவும் நிரூபித்தருளியுள்ள விசேஷார்த்தம் விசேஷித்து நோக்கத்தக்கது. பூதவ்ராதமென்பதற்கு ப்ராணிஸமூஹமென்று பொருளானாலும் இதில் சிறிது உட்புகுந்து ஆராய்ந்தருளுகிறார் ச்ருதப்ரகாசிகாபட்டர். ப்ராஹ்மண ஸமாஜ:, ராஜபரிஷத் என்னுமிரண்டு வ்யவஹாரங்களை யெடுத்துக்காட்டி. இவற்றிலுள்ள வாசியையுங் காட்டி விசேஷார்த்த நிஷ்கர்ஷம் செய்தருளுகிறார், ப்ராஹ்மண ஸமாஜமென்று சொன்னால் அந்த ஸமாஜத்தில் பிராமணர்கள் மட்டுமே கூடியிருப்பதாகவும் இதர ஜாதியர்களின் சேர்க்கை அங்கு இல்லையாகவும் உலகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. ராஜபரிஷத்தென்று சொன்னால் இப்படி காணப்படுவதில்லை. கேவலம் ராஜாக்கள் மட்டுமே கூடுகிற கூட்டத்தையா ராஜபரிஷத்தென்கிறோம். இல்லை; மந்த்ரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனோடு கூடியிருக்குமிருப்பையே 'ராஜபரிஷத்' தென்கிறோம், 'ப்ராஹ்மண ஸமாஜ:' என்ற விடத்திலும் ராஜபரிஷத் என்ற விடத்திலும் அவிசேஷேண ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமே கொள்ளுகிறோம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது. ச்ருதப்ரகாசிகா பட்டர் இவற்றையெடுத்துக்காட்டி விரிவாக அருளிச்செய்துள்ளார். விநதப்ராணிகளுக்குமட்டும் மோக்ஷமளிக்கையன்றிக்கே அந்தப்ராணிகளோடு ஸம்பந்தஸப்பந்தம் பெற்றவர்களுக்குங்கூட அந்த விநதப்ராணிகளின் விநதியே காரணமாக மோக்ஷமளிக்கிறானெம்பெருமானென்றருளிச்செய்துள்ளார். இங்கு ''தத ஏவ காரணாத்'' என்கிற ஸ்ரீஸூக்தி ஜீவநாடியகவுள்ளது.

அனந்தர்— இதோச்ருதப்ரகாசிகா பங்க்திகளை ஸேவிக்கிறேனென்று அவற்றை ஸேவித்துத் தலைகட்டினார்.

அண்ணா— இவ்வர்த்தத்தை வேதாந்த வாசிரியர் தத்வடீகையில் வெகு அழகாக உபபாதித்துப் பொருந்தவைக்கிறார். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் நன்கு காணத்தக்கன. மூலத்தில் ரக்ஷாபதத்தாலே விவக்ஷிதமான ரக்ஷணம் அஸாதாரணஸ்ய பரமப்ரயோஜநஸ்ய மோக்ஷஸ்யைவ ப்ரதாநம்' என்று நிர்ணீதமாயிருக்கையாலே இந்த மோக்ஷப்ரதாநம் விநதபூதங்களுக்கு மட்டுமன்று, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் அப்ரதிஹதம் என்கிற அர்த்தமே தத்வடீகாஸூக்திகளாலும் விசதீக்ருதமாயிற்று.

அனந்தர்— ஸ்வாமின்! சரணாகதிகத்யத்தில் *பகவந்நாராயணாபிமதேத்யாதி சூர்ணையினால் புருஷகாரப்ரபத்தி செய்தருளின எம்பெருமானார்க்கு ப்ரதிவசநமிட்டருளின ஸ்ரீரங்கநாச்சியார் ''அஸ்து தே'' என்றவளவோடு நில்லாமல் ''தயைவ ஸர்

வம் ஸம்பத்ஸ்யதே'' என்றுமருளிச்செய்தவிடத்தில் (அவ்விடத்து) ச்ருதப்ரகாசிகையில் ''ஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தர்ணமபி, ஸர்விசப்தாபிப்ரேதம்'' என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதும் இங்கு அநுஸந்தேயமன்றோ?

அண்ணு— மேலும்கேளும்; ஸ்வாமி சரணாகதிகத்ய மருளிச்செய்த பிறகு ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானுர்க்கு ஒரு வரம் தந்தருளினதாக ப்ரஸித்தியுள்ளது. இதனை வேதாந்த தேசிகன் ந்யாஸதிலகத்தில் ஒரு ச்லோகத்திஞல் வ்யக்தமாகப் பணித்துள்ளார்.

அந்த ச்லோகமாவது,

''உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம்.
ச்ருத்வா வரம் தத்நுபந்த மதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத''.

என்பதாம். சரணாகதி கத்யத்தின் முடிவில் திருத்தேர்த்தட்டிலே அர்ஜுநனையுத் தேசித்துச் சொன்ன ஸர்வதர்மா நித்யாதியையும், கடற்கரையிலே விபீஷணனுத் தேசித்துச் சொன்ன *ஸக்ருதேவப்ரபந்நாயேத்யாதியையும் எடுத் வானையுத்தேசித்துச் சொன்ன எம் துரைத்து ''இதி மயைவ ஹி உக்தம்'' என்று மருளிச்செய்து இவ்வகையாலே எம்பெருமானுர்க்கு ஒரு ப்ரத்யயத்தைப் பண்ணுவித்தபடியை ''உக்த்யா தநஞ்ஜயவிபீஷணலக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநே:'' என்னுமளவால் அருளிச் செய்தாராயிற்று. அதற்கு மேல் ''பவதா விதீர்ணம் வரம்ச்ருத்வா'' என்று ஸாதித்திருப்பது நிதியான வார்த்தை. ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீராமாநுஜர்க்கு ஒரு வரமளித்ததாகவும், அதை தேசிகன் தாம் பரம்பரையில் கேட்டறிந்ததாகவும் சொல்லப்பட்டுள்ளது. அந்த வரத்தின் ப்ரகாரம் எப்படிப்பட்ட தென்பதை (ந்யாஸதிலக) வ்யாக்யாதாக்கள் வெளியிட்டுள்ளார்கள். எங்ஙனே யென்னில்; திருக்குடந்தை தேசிக ஸம்ப்ரதாய விவர்த்திநீஸபாத்யக்ஷர்களான மஹநீய மஹாவித்வான்கள் பலர் பரிஷ்கரித்து வெளியிட்ட வியாக்கியானத்தில் ''எம்பெருமானுரே! உம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் மோக்ஷம் தந்தோம் என்பதுதான வரம்'' என்று விளக்கப்பட்டுள்ளது.

அனந்தர்— வரம் இப்படிப்பட்டதேயொழிய வேறு விதமன்று என்பது மூலத்திலேயே ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டு மிருக்கிறதே. (அதாவது) ''ச்ருத்வா வரம்'' என்றவுடனே ''ததநுபந்த மதாவலிப்தே மயி'' என்று ஸாதித்திருப்பதானது வரத்தின் ப்ரகாரத்தை ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றதன்றோ. தேசிகன் தாம் எம்பெருமானுருடைய ஸம்பந்தம் பெற்று அதனல் செருக்குற்றிருப்பதாகவன்றோ இங்குச் சொல்லுகிறது. தேசிகனுக்கு எம்பெருமானுரோடு ஸாக்ஷாத் ஸம்பந்தமில்லையென்பதும் பரம்பராஸம்பந்தமேயுள்ளதென்பதும் நிர்விவாதம். பரம்பரா ஸம்பந்தமுடைய தமக்குச் செருக்கு உண்டாயிருப்பதாகச் சொல்லும்போது ஸ்ரீராமாநுஜரோடு பரம்பராஸம்பந்தமுடையார்க்கும் மோக்ஷம் தந்தோமென்று ஸ்ரீரங்கநாதன் வரமளித்திருப்பது நிஸ்ஸந்தேஹமாக விளங்குமதன்றோ. இல்லையேல் ''ததநுபந்தமதாவலிப்தே'' என்று தமக்கிட்டுக்கொண்ட விசேஷணம் கேவலம் பாத பூரணர்த்தமாகு மத்தனையன்றோ.

அண்ணு— பரம்பராஸம்பந்திகளுக்கும் பேறு கைபுகுமோ! என்கிற ஸந்தேஹம் ''விநத விவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே'' என்ற விடத்து ச்ருதப்ரகாசிகை

யாலும் தத்வடீகையினுலும் நிரஸ்தமான வளவே யன்றிக்கே இந்த *உக்த்யா தநஞ்ஜயச்லோகத்திற்கு அடுத்து முந்தினதானச்லோகத்திலுலும் நிரஸ்தமாயிற்று; எங்ஙனே யென்னில்;

"அந்தோநந்த க்ரஹண வசகோ யாதி ரங்கேச! யத்வந்
பங்குர் நௌகா குஹர நிஹிதோ நீயதே நாவிகேந,
புங்க்தே போகாந் அவிதிந ந்ருபஸ் ஸேவகஸ்யார்ப்பகாதி:
த்வத்ஸம்ப்ராப்தௌ ப்ரபவதி ததா தேசிகோ மே தயாளு:"

என்கிற ச்லோகத்தில் மூன்று த்ருஷ்டாந்தங்கள் காட்டப்பட்டுள்ளன. கண் தெரியாதவன் கண் தெரிந்தவனது கையைப்பற்றிக்கொண்டு நடந்து செல்லுகிருனென்றும், காலில்லாத முடவன் தோணிக்காரனுல் தோணியில் உட்காரவைக்கப்பட்டு அக்கரை சேர்க்கப்படுகிருனென்றும் காட்டின இவ்விரண்டு த்ருஷ்டாந்தங்களும் ஸாக்ஷாத் ஸம்பந்தமுள்ள இடத்தில் பேறு தப்பாதென்கைக்குச் சார்பானவை. இனி "புங்க்தே போகாந் அவிதிதந்ருபஸ் ஸேவகஸ்ய அர்ப்பகாதி:" என்று காட்டின மூன்ருவது த்ருஷ்டாந்தம் அத்யந்தவ்யவஹிதஸம்பந்த முள்ளார்க்கும் பேறு தப்பாதென்கைக்குச்சார்பானது. என்றைக்கோ இருந்த ஒரு அரசனிடம் என்றைக்கோ இருந்த வொரு அமாத்யன் ஸேவைபண்ணி நிதிபெற்று அந்நிதியைத் தன் பரம்பரையில் வருமவர்கள் உபஜீவிக்கும்படி வைத்திட்டால் அந்த நிதியைக் காலதத்வமுள்ளதனையும் அவனது பரம்பரையைச் சேர்ந்தவாகள் தாங்கள் ஒரு ராஜ ஸேவையும் செய்யவேண்டாமே, ஸேவைபண்ணினவருடைய ஸம்பந்தஸம்பந்த ஸம்பந்தமே ஹேதுவாக நெடுங்காலம் இடையருதே புஜித்து வருகிருர்களென்பதை நிர்விவாதமாகக் கண்டு வருகிரேம். இந்த த்ருஷ்டாந்தத்தை தேசிகன் காட்டியிருப்பதானது வ்யவஹிதஸம்பந்த முடையார்க்கும் பேறுதப்பாதென்பதை மூதலிக்கவேயன்றே. இதில் "அவிதிதந்ருப:, அர்ப்பகாதி:" என்னுமிரண்டு பதங்களின் ஸ்வாரஸ்யாதிசயங்களையும் அர்த்த புஷ்டியையும் அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வத்திலே பரக்கவுபபாதித்திருக்கிறேனென்பது நினைவிருக்குமே.

அனந்தர்— எம்பெருமானுருடைய குடல்துடக்கு உடையோமான நாம் அவருடைய அநர்க்கமான அந்த ஸம்பந்தத்தை அநுதினமும் நினைந்துநைந்துள்கரைந்துருகி "நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" என்றிருக்க ப்ராப்தம் என்பது ஸாரமானவார்த்தை.

அண்ணு—மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் அருளிச்செய்துள்ள (18).

"காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதிபாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ,
ஸா ச த்வயைவ கமலாரமணேர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவஹி யதீந்த்ர! பவச்ச்ரிதாநாம்."

என்கிற சுலோகமானது கீழே விவரித்த அர்த்த விசேஷங்களையெல்லாம் உட்கொண்டு அவதரித்ததாகும். இந்த சுலோகத்திற்கு என்னுடைய வியாக்கியானம் கண்டிருப்பீர். ஆனுல் அஃதிருக்கட்டும். தேசிக திவ்யஸூக்தியே நமக்கு முக்கியம்; ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் நிதியாக வொருவிஷயம் காட்டப்போகிறேன்; அதற்கு முன்பு ஸாரமாகச் சில சொல்லுகிறேன் கேளும்; பரம புருஷார்த்தமான அரும்பெரும்பேறு பெறுதற்கு உறுப்பாக நாம் ஒரு ஸதாசார்யரை ஆச்ரயிக்கிரேம்;

4

என்றைக்கு ஆச்ரயிக்கிறோமோ அன்றைக்கு நமக்கு ஸமாச்ரயணமானதாகத் தொன்றுதொட்டு வ்யவஹாரம் நிகழ்ந்து வருகிறது. திருவாழி திருச்சங்குகளினால் இலச்சினை பெறுகையாகிற சக்கராங்கனத்தையே ஸமாச்ரயணமென்று உலகம் க்ரஹித்திருக்கின்றது. உண்மையில் ஸமாச்ரயணமென்பது அவ்வளவேயன்று. "ஆசார்யனை ஆச்ரயித்து அவன் மூலமாக எம்பெருமானை யடிபணிதல்" என்னும் பொருளதான ஸமாச்ரயணமென்கிற சொல்லானது ஆசர்யனால் பெறுவிக்கப் படுகிற பேறுகளுக்கெல்லாம் ஸூசகமாக நிற்கின்றது; ஆசார்யனால் க்ருதக்ருத்ய னாகச் செய்விக்கப்பெறுகையே ஸமாச்ரயணமெனப்படுகிறது. பகவதாச்ரயணத்தில் பர்யவஸிதம். இந்த ஸமாச்ரயணத்தையே பஞ்ச ஸம்ஸ்காரமென்கிற சொல்லாலும் வழங்கிவருகிறார்கள். "தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம:. அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:" என்று யாவருமறிந்த ச்லோக மானது பஞ்ச ஸம்ஸ்காரங்கள் இன்னின்னவை யென்பதை விவரித்துக் காட்டு கின்றது; தாப: என்பது முதல் ஸம்ஸ்காரம். அதுதான் தப்த சக்ராங்கனமென்பது; திருவிலச்சினையென்பது ஸம்பரதாய வழக்கு. இரண்டாவதான புண்ட்ரஸம்ஸ்கார மாவது த்வாதசோர்த்வ புண்ட்ரதாரணம் செய்வித்தல். மூன்றாவதான நாம ஸம்ஸ்காரமாவது "இந்த சிஷ்யன் ஸ்ரீ வைஷ்ணவனாயினன்" என்பதை விளங்கக் காட்டுகின்ற தாஸ்யநாமகரணம்; அவரவர்களின் ஸம்ப்ரதாயப்படி ராமாநுஜ தாஸனென்றும் மதுரகவி தாஸனென்றும் ஸ்ரீ வைஷ்ணவதாஸனென்றும் இப்புடை களிலே வழங்கி வருவன காண்க. இனி நான்காவதான மந்த்ர ஸம்ஸ்காரமாவது— திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கப் பெறுகை. ஐந்தாவதான யாகமாவது "யஜ—தேவபூஜாயாம்" என்கிற தாது விலிருந்து தேறுகிற யாகசப்தம் திருவாராதனத்தைச் சொல்லுகிறதாகையாலே பகவதாராதனத்திற்கு அதிகாரம் பெறுகை. இதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர். பகவதாராதனமென்றே பெரியார் பணிப்பது.

இவற்றுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ர ரத்நமே மிகச் சிறந்தது ஸமாச்ரிதனான சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்ய னாக்குகின்றதாக நம் ஆசார்யர்களனைவருடையவும் ஸமகண்டமான ஸித்தாந்தம். இதனாலேயே ஸமாச்ரயண நிஷ்பத்தி யென்றுணர்க. இதுதன்னை ரஹஸ்ய க்ரந்தத் திலே ஸுவ்யக்தமாக எழுதிவைத்து சிலாலிகிதமாக்கிவைத்தவர் வேதாந்ததேசிகன். எங்ஙனேயென்னில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார க்ருதக்ருத்யாதிகாரத்தில்—

"அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரிந்துப்போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாக வுண்டான ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணா நூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங் களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களை யெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்தவடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வசேஷி யான ச்ரிய:பதி தன் பேறாகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிரு க்கை; இது *மாசுச:* என்கிற சரண்ய வாக்யத்திலும் தீர்ந்தபொருள்."

ளன்றுள்ள வாக்கியங்கள் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக உண்மைப் பொருளையுணர்த்து கின்றன. மேலே உதாஹரித்த வாக்கியராசியில் "த்வயோச்சாரண அநூச்சார ணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் ஸாரமானவை; மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வயமென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின்சொல்லுவதுண்டே இது தான் ப்ரபத்த்யனுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்குமேல் வேறொன்று கிடையாதென்றும் வ்யக்த மாக அருளிச் செய்தாராயிற்று. யார்? தேசிகன். இங்ஙனே தமிழில் அருளிச்செய் ததை சரணாகதிகத்யபாஷ்யத்தின் முடிவில் ஸம்ஸ்க்ருதத்திலுமருளிச்செய்துள் ளனர்; "ஏதேந அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமூல பகவத் அப்ரஸாதேந ஸம் ஸாரதோ மே பகனத்க்ருபாமூலக ஸதாசார்ய அங்கீகாரேண த்வயோச்சாரண அநூச்சாரண பூர்வகஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே ப்ரஸாதநேஷு அஸ்மரத் அப்யதிகஸ்ய அபாவாத்..." இத்யாதி ஸ்ரீஸூக்திகள்

அனந்தர்— இப்படியிருக்க, சிலர் அத்ருஷ்டார்த்தமென்று ஒன்று நடத்திப் போருவதானது சாஸ்த்ரங்களிலும் ஸதாசார்யாநுஷ்டான பரம்பரையிலும் எங்கும் அத்ருஷ்டமான அர்த்தமாதலால் அத்ருஷ்டார்த்தமென்று இதற்குப் பெயரிட்டது மிகவும் பொருத்தமானதே. எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரையிலே ஜனித்த வர்களுக்கு ப்ரபந்நத்வமோ சரணாகதத்வமோ ஜன்மஸித்தமேயாகும். அன்னவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொள்வதானது வைஷ்ணவ தீக்ஷார்த்தமாக வத்தனையல்ல து மோக்ஷஸாதனமாகவன்று. நம்முடைய குலகூடஸ்தரான எம்பெருமானார்க்கு ஸ்ரீரங்கநாதனிடமிருந்து விசேஷித்து வரமும் கிடைத்திருக்கிறது. அதையும் ஸ்வாமிதாமே ந்யாஸதிலகத்தில் "க்ருத்வா வரம் தத்நுபந்த மதாவலிப்தே" என் பதனால் நன்கருளிச் செய்துவிட்டார். அந்த திவ்ய க்ரந்தத்திலே * அந்தோநந்த க்ரஹண * என்றும் *உக்த்யா தநஞ்ஜய* என்றுமுள்ள இரண்டு ச்லோகரத்னங்கள் நிதியானவை, அந்தோநந்த ச்லோகத்தில் ஜ்ஞாநஹீநனான ஒருவன் குருடனுடைய ஸ்தானத்திலும் ஆசாரஹீநனான வொருவன் நொண்டியினுடைய ஸ்தானத்திலும் கொள்ளப்பட்டு இப்படிப்பட்ட அதிகாரிகள் ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையனான குருவையடைந்தே புருஷார்த்தஸித்தி பெறவேண்டுமென்றாராயிற்று. இதை நன்கறிந்து கொண்டேன். இந்த அத்ருஷ்டார்த்தாநுஷ்டானம் நவீனர்கள் அவசியம் செய்ய வேண்டியதே யென்று முதலில் ஸாதித்ததே, அது எதனாலென் பதை அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

அன்ன— "க்ருத்வா வரம் தத்நுப்ந்தமதாவலிப்தே" என்ற சுலோகத்தின்படி அவலேபம் கொள்ளுவதற்கு உறுப்பாக பகவத்ராமாநுஜ ஸம்பந்தம் இவர்களுக்குப் பரம்பரையாக இன்றியே இடையிலே வந்து புகுந்ததனால்—என்பது என்னுடைய கருத்து. இவர்கள் ஒன்று செய்திருக்கவேணும்; "உக்த்யா தநஞ்ஜயேத்யாதி சுலோகம் ந்யாஸ திலகத்தில் ப்ரக்ஷிப்தம் என்று சொல்லி அதை விலக்கித் தொலைத் திருக்கவேண்டும். அது செய்யாதே போனார்கள். அதில் "விதீர்ணம் வரம்" என்று ஸாதித்திருப்பதன் சுவடு இவர்களால் குறிக்கொள்ளப்படவில்லை யந்தோ!

வரப்ரஸாதத்திற்குத் தனிப்பட்ட பெருமையுன்றோ வுள்ளது. "ச்ருத்வா கிரம்' என்றோ "ச்ருத்வா வச:" என்றோ ஸாதித்திருக்கலாமே. வேதத்தில் (வரம் வ்ருணே) என்றும் (வரம் வ்ருணுவஹை) என்றும் (வரம் வ்ருணுமஹை) என்றும் அடிக்கடி வரும். அவரவர்கள் தந்தமக்கு விருப்பமான வரத்தை வேண்டிப் பெறுவதுண்டு. எம்பெருமானார் பெற்ற வரம் அப்படிப்பட்டதன்று; எம்பெருமான்தானே அளிக்கப் பெற்ற வரம். இதைக் கண்ணழிக்கப் பார்ப்பது அடாதது.

அனந்தர்—இந்த சுலோகத்தில் (ப்ரஸீத பகவந் ! மயி ரங்கநாத !) என்றது எதற்காக ஸாதிக்கவேணும்.

அண்ணு—"அரங்கா ! உன் கையை நான் எதிர்பார்க்கவேண்டாதபடி எனக்கு அக்ஷய்யமான நிதி கிடைத்திருக்கிறது போ" என்று சொல்லுவதுதானே இந்த சுலோகத்தின் பரம தாத்பர்யம்; இதனுல் அரங்கன் திருவுள்ளம் கன்றுமோ? என்றஞ்சி "ப்ரஸீத" என்றுராயிற்று. (க்ஷமஸ்வ) என்றதற்குப் பர்யாயமிது.

அனந்தர்—ஸ்வாமிந்! "அலம் திஷ்டஹதமுத்கராபிகாதேந" என்று தேசிகன் ஓரிடத்தில் ஸாதித்திருப்பதாக தேவரீர் எழுதியிருப்பது நினைவுக்கு வருகின்றது. ஆகவே இந்த ச்ர்ச்சை போதும். குருபரம்பராஸாராதிகளில்-பாஷ்யகாரர் இன்னாரிடத்திலே ஸ்ரீராமாயணம் கேட்டார், இன்னாரிடத்திலே திருவாய்மொழிக்குப் பொருள் கேட்டார், இன்னாரிடத்திலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தார், இன்னாரிடத்திலே அருளிச்செயலோதி நல்வார்த்தைகள் கேட்டார்...என்றிப்படி யெழுதி வைத்த தேசிகன் "இன்னாரிடத்திலே அத்ருஷ்டார்த்தம் அநுஷ்டித்தார்" என்றெழுதி வைத்திலர், திருவிலச்சினை பெறுவித்த ஆசார்யரைத் தள்ளி பரஸமர்ப்பணாசார்யரென்று ஒருவரைக் குலாவுகின்ற இவர்களுடைய அனுஷ்டானம் எங்கும் த்ருஷ்டமாக இல்லாமை பற்றியே இதற்கு அத்ருஷ்டார்த்த மென்று பெயரிட்டார்களென்பது ஸத்யமே. காரியம் நல்லதேயொழியக் கெட்டதன்றே. "நாஸ்ய ஸ்வவ்யாபாரே உபாய்தா புத்திரபி ஸ்யாத்" என்று (கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷையிலே) அருளிச்செய்திருப்பது கண்டு வைத்தும் "உபாயாநுஷ்டானமாச்சுதோ?"என்று கேட்பாரும் "ஆகா, ஆச்சுது" என்பாருமாய் இதுவொரு தாண்டவம் விசித்திரமே. இது கிடக்கட்டும், பிராட்டியின் உபாயத்வ விஷயத்தில் சிறிது சர்ச்சை செய்வோம்.

அண்ணு— எந்த சர்ச்சையும் திஷ்டஹதமுத்கராபிகாதமேயாகும். ஆனுல் இப்போது நாம் ப்ரதிபக்ஷநிரஸனத்தில் ப்ரவர்த்தித்திருக்கவில்லை. நாம் பேசிக் கொள்ளுகிறோம். தாராளமாகப் பேசுவோம். தேசிகவைபவ மெழுதின ஒரு அட்வகேட் எழுதியிருக்கிறார்—"நம்முடைய தர்சனத்தில் பிராட்டியின் உபாயத்வமும் ப்ரபத்தியின் உபாயத்வமுமாகிற இரண்டும் உயிரானது; இவ்விரண்டையும் ரஸாபாஸமாக்குவதற்குத் தோன்றின சுவடிகளைக் கண்டிப்பதற்காகவே நம் தேசிகன் திருவவதரித்தது" என்று. அவர் எந்த ஆசாரியருடைய நூலையும் கண்டவருமல்லர், கேட்டவருமல்லர் என்று நான் விரிவாக விளக்கி யெழுதியிருக்கிறேன்.

அனந்தர்— தேவரீர் ஸாதித்த நூல்களையெல்லாம் அடியேன் பாராமலில்லை; வெகுநாளாகிவிட்டது; நேரில் ஸாதிக்கக் கேட்டுணர விரும்பியேயன்றோ விடை கொண்டிருக்கிறேன். ஒவ்வொன்றும் உள்ளத்தில் பதியுமாறு ஸாதித்தருள

வேணும். பிராட்டி விஷயமாக தேசிகனருளிச் செய்திருப்பவற்றை யெல்லாம் ஒன்று விடாமல் ஸாதிக்கவேணும். அதைக் கேட்கவே அடியேனுக்கு அவா.

அண்ணு— அப்படியேயாகிறது. கோயிலில் குடியிருந்து வாழ்கின்ற மதுர வித்வான் தானெழுதியவொரு (ஸுதா) நூலில் "லக்ஷ்மீ உபாயத்வஸம்ரக்ஷணம்" என்று மகுடமிட்டு அதில் ச்ருதப்ரகாசிகாசார்யரருளிய சரணுகதிகத்யபாஷ்யத்திலிருந்து ஒரு பங்க்தியை யுதாஹரித்து அர்த்த மெழுதுகிறுர் கேளுமிதை;

"ச்ரியம் ப்ரபத்ய தத்ஸந்நிதௌ மூலமந்த்ரேண ஸ்வரூபாநுரூப
புருஷார்த்த ப்ரார்த்தநம் ததுபாயப்ரார்த்தநாபர்யந்தம் க்ருத்வா"

என்பது இவருதாஹரித்த ஸ்ரீஸூக்தி. இதன் பொருளென்னவென்றுல், பெரிய பிராட்டியாரைப் பணிந்து அவள் பக்கலிலே பகவத்கைங்கர்யமாகிற ஸ்வரூபாநுரூப புருஷார்த்தத்தையும், அதற்கு உபாயமான தச்சரணுகதியின் நிஷ்பத்தியையும் ப்ரார்த்தித்து—என்பது தவிர வேறு எந்த பொருளுங் கிடையாது. *பகவந் நாராயணுபிமதேத்யாதியாலே பிராட்டியைப் பணிந்தவுடனே *பாரமார்த்திகேத்யாதி சூர்ணையில் "நித்ய கைங்கர்ய ப்ராப்த்யபேக்ஷயா* என்றும் *பகவச்சரணுரவிந்த சரணுகதி: அஸ்து மே* என்றுமுள்ள ஸ்ரீஸூக்தியினுல் ஸ்வரூபாநுரூப புருஷார்த்தமும் அதற்குறுப்பான (சரணுகதியாகிற) உபாயத்தின் நிஷ்பத்தியுந் தானே ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்க்ருத ஜ்ஞானமுள்ள யாரும் இதைத்தான் பொருளாகக் கூறுவர். வ்யுத்பந்நர்களுக்கு வேறு பொருள் தோன்றுது. ப்ரஸ்தாவித்த வித்வான் என்ன பொருளுரைக்கிறுரென்றுல் "பிராட்டியின் பக்கல் புருஷார்த்த ப்ரார்த்தனமும் உபாயத்வ ப்ரார்த்தனமும் செய்து" என்று எழுதியுள்ளார். தலைமேல் லக்ஷ்மி உபாயத்வ ஸம்ரக்ஷணம் என்று மகுடமிட்டிருக்கிறுர். லக்ஷ்ம்யுபாயத்வத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் ஸாதித்துவிட்டதாக மருண்டுவிட்டார். உண்மையில் அவர் நல்ல விவேகி; ஏதோ மருண்டுவிட்டார் பாவம்!

அனந்தர்— இவரெடுத்த ஸ்ரீஸூக்தியில் 'உபாயப்ரார்த்தநா' என்றிருக்கிறதேயொழிய 'உபாயத்வப்ரார்த்தநா' என்றில்லையே. உண்மையில் ஸ்ரீஸூக்தியும் அங்ஙனே கிடையாதே, இவரும் அங்ஙனே யுதாஹரிக்கவில்லையே. 'உபாயப்ரார்த்தனு' என்பதற்கு உபாயபூதவஸ்துவின் ப்ரார்த்தநையென்று அர்த்தமாகுமேயல்லது உபாயத்வப்ரார்த்தநையென்று ஒருநாளும் அர்த்தமாகாதே; தர்மதர்மிஜ்ஞானமில்லாத நையாயிகர்கள் பலருளர்; அன்னவர்கள் "பூதலே கடத்வஸ்ய வர்த்தமாநாத்" என்று சொல்லிக்கொண்டு அட்டஹாஸம் செய்வர்கள். அதையெல்லாம் நினைவூட்டுகிறுரே இவர். இவ்வளவு அவ்யுத்பந்நரா மதுரஸ்வாமி?

அண்ணு— அந்த ஸ்வாமியை அவ்யுத்பந்நராக ஸஹஸா சொல்லிவிடக்கூடாது; ஆளவந்தார் ஸாதித்த சுலோகம் நினைவிருக்கிறதல்லவா? "அபிநிவேச வசீக்ருதசேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரம:" என்பது. கூரத்தாழ்வானும் "விவேகதியமேகதோ ஹி அபிநிவேசலேசோ ஹரேத் மஹத்த்வபிநிவேசநம் கிமுத?" என்றருளிச்செய்தார். ஒன்றில் ஆக்ரஹ முண்டானுல் அது விவேகசக்தியை விலக்கியே தீருமன்றே. உண்மைப் பொருள் தமக்குத் தெரிந்திருந்தும் பாமரப்ரதாரண

ப்ராவண்யத்தினுலும் தத்ப்ராவீண்யத்தினுலும் அப்படி யெழுதியிருக்கலாம். எதையும் ஆழ்ந்து பார்க்க ஒருவருளரென்பதை மறந்துவிடுகிறுர்கள் ஒவ்வொருவரும்.

அனந்தர்— பிராட்டி விஷயத்தில் தேசிகனுடைய திருவுள்ளம் ஸம்சய விபர்யயமற ஸ்பஷ்டமாகவும் ஸுஸ்பஷ்டமாகவும் இவர்களுக்குத் தெரிந்திருக்கச் செய்தேயும் ஏதுக்கு இந்த நவீனர்கள் வீணுகப் போராடிக் கொண்டிருக்கிறுர்கள். ரஹஸ்யரத்னுவளியில் "ஸ்ரீமானுன நாராயணனெருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறுள்" என்று ஸாதித்து; அதற்குத் தாமே செய்தருளின விவரணமான ரஹஸ்ய ரத்னுவலீ ஹ்ருதயத்தில் (தஞ்சமாகிறுள்) என்கிற தம்முடைய மூல ஸூக்திக்கு "ரக்ஷணஹேதுவாகிறுள்" என்று விளக்கம் செய்தருளினுர். இதனுல், ரக்ஷணக்ருத்யம் எம்பெருமானுடையதே யென்றும், அதற்குப் பிராட்டி புருஷகாரமுகத்தாலே ஸஹகாரிணியாகிறுளென்றும் விளங்கவைத்தாராயிற்று. இத்தோடு இந்த வ்யவஹாரம் சீமைத் தீர்ப்பு என்னும்படியாக முடிவு பெற்றதாயிற்று. இதெல்லாம் கண்ணுரக்கண்டு வைத்தும் பண்டித பாமரவிபாகமின்றிக்கே போராடி வருகிறுர்களென்றுல் இதற்கு ஏதேனும் அர்த்த முண்டோ? வியப்பினும்வியப்பே.

அண்ணு— தேசிக ரஹஸ்யக்ரந்தங்கள் தமிழாயிருப்பதனுல் நவீனர்களின் கோஷ்டியில் தமிழென்றுல் பலர்க்குத் தலைவேதனையும் வெறுப்புமாகையாலே அவற்றை அவர்கள் பார்ப்பதில்லையென்றே வைத்துக்கொள்வோம். தேசிகன் தமிழ் நூல்களில் மட்டுமன்றிக்கே ஸம்ஸ்க்ருதக்ரந்தங்களிலும் பிராட்டி விஷயமாகப் பல ஏடுகள் எழுதிவைத்திருக்கிறுரே. சதுச்ச்லோகீ பாஷ்யத்திலிருந்து நானெடுத்துக் காட்டியிருப்பவை ஒன்ரு இரண்டா? ஆளவந்தார் "ச்ரேயோ ந ஹ்யரவிந்தலோசன மந: காந்தாப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு நருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்" என்றருளிச் செய்துவைத்தார். ஐஹிக ஆமுஷ்மிகச்ரேயஸ்ஸுக்கள் எதுவும் பிராட்டியின் அநுக்ரஹமில்லாமல் ஸம்பவிக்க மாட்டாது—என்று இதனுல் தெரிவித்தபடி; இவ்விடத்திற்கு வியாக்கியானம் செய்கிற தேசிகன், விரல் நுழைக்கக் கிடைக்குமிடத்திலே தலையை நுழைக்கப்பார்க்குங் கணக்கிலே பிராட்டி ஸ்வதந்திரமாக மோக்ஷமளிக்க சக்தையென்று நிரூபித்து விடலாம். அங்கு என்ன செய்திருக்கிறுர் தெரியுமோ? வெகு விரிவான சர்ச்சைகளைச் செய்து, "எம்பெருமான்தான் மோக்ஷப்ரதன், பிராட்டிக்கு உள்ளது புருஷகாரத்வமே" என்று வெட்டொன்று துண்டிரண்டாக அறுதியிட்டு வைத்தார். "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றுர். ஒரு காரிகையும் எழுதிவைத்தார்—"அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரியம்:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே." என்று.

அனந்தர்— இவ்விஷயங்களெல்லாம் அடியேனுக்கு நன்ருக நினைவுக்கு வருகின்றன. அங்கு ச்ருதப்ரகாசிகாபட்டர், எங்களாழ்வான் முதலான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளையும் தேசிகன் எடுத்துக் காட்டியிருப்பதையும் தேவரீருடைய நூல்களில் ஸேவித்திருக்கிறேன். முமுக்ஷுப்படியில் "நீரிலே நெருப்புக்கிளருமா

போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக'' என்கிற பிள்ளைலோகாசார்ய ஸ்ரீஸூக்தியின் பொருளே அங்கு வட மொழியில் அமைந்திருக்கின்ற தென்பதை ஒருவரும் மறுக்கமுடியாது, மறைக்க முடியாது. அந்த இடங்களை ஆசார்ய பீடஸ்தர்கள் ப்ரவசனம் செய்யப்புக்கால் நிஷேக முஹூர்த்த ஸீமந்தமுஹூர்த்தாதி ப்ரஸ்தாவங்களைப் பண்ணி இஜ்யைக்கு எழுந்தருளியாகவேண்டு மத்தனையல்லது வேறொருகதியில்லை யென்பதை ஸ்ரீமத் திருமங்கலம் ஸ்வாமி ஸாதித்திருப்பது யதார்த்தமேயாகும். ஆனால் ''உள்ளத்தைச்சொன்னால் நொள்ளைக்கண்ணிக்கு நோப்பாளம்'' என்னும்படிதானாகும்.

அண்ணா—இந்த ரஹஸ்ய ரத்நாவலீ விஷயம் சதுச்ச்லோகீபாஷ்ய விஷயம் மட்டுமேயன்று; விவாதாஸ்பதமான விஷயங்களில் எதை யெடுத்துக்கொண்டாலும் மேலே சொன்ன ப்ரஸ்தாவங்களாலே அந்யபரதையில் மூட்டிக் காலக்ஷேபத்தைத் தலைக்கட்டுவது தவிர, ஸங்கேதத்திற்குக் கட்டுப்படாத ஸமர்த்த சிஷ்யனொருவன் நின்று சொல்லுமென்று மடிபிடித்துக் கேட்டுவிட்டால் *திசிதிசி விலோலநயநம் என்னும் நிலைமை தவிர வேறொன்றும் காணலாகாது. ஒரு கோமுட்டிகதை கேளும். ஒரு கோமுட்டியின் வீட்டு முற்றத்தில் பூஞ்செடிகளும் ஸுகந்தக் கொடிகளும் வளர்த்திருந்தான். ஒருநாள் மாலைப்பொழுதில் ஒரு கள்ளன் எப்படியோ உட்புகுந்து அந்தப் பூஞ்செடிப் பந்தல் நிழலில் ஒளிந்துகொண்டு உட்கார்ந்திருந்தான். எல்லாருமுண்டு உறங்கினபின்பு களவாடிக்கொண்டு போகலாமென்றிருந்தான். கோமுட்டி இரவு போஜனம் செய்துவிட்டு அந்த பூஞ்செடிப்பந்தலில் வாய் கொப்பளிக்கிற வழக்கப்படி கொப்பளிக்க வந்தான். அப்போது கள்ளன் அங்கே பதுங்கியிருப்பதைக் கண்டுகொண்டான். அவனைப் பரிபவப்படுத்த ஒரு உபாயம் செய்தான்; தண்ணீர் அவன் உடலிலும் தலையிலும் விழும்படி ஓயாது வாய் கொப்பளிக்கிறான்' 'இன்னும் தண்ணீர் கொண்டுவா, இன்னும் தண்ணீர் கொண்டுவா' என்று மனைவியை அதட்டுகிறான். அவள் நாலைந்து தவலைத் தண்ணீர் கொணர்ந்துகொடுத்தும் அவ்வளவையும் கள்ளன்மேல் கொப்பளித்து இன்னமும் தண்ணீர்கொண்டுவா என்கிறான்; 'பைத்தியம் பிடித்துவிட்டதா உனக்கு? என்கிறாள் மனைவி. ஆமாம் என்று அவள் மீதும் கொப்பளிக்கத் தொடங்கினான். அவள் தெருவில் ஓடிச் சென்று கதறிப்புலம்ப, தெருவிலுள்ளாரெல்லாரும் உள்ளே வந்து சேர்ந்து கோமுட்டியைப் பார்த்து ''என்னடா இது? இவள்மேல் எதற்குக் கொப்பளித்தாய்? உன்னைக் கேட்பாரில்லையா?'' என்ன, கோமுட்டி சொல்லுகிறான்—இதோ பாருங்கள்! இங்கே உட்கார்ந்திருப்பவன் மேல் ஐந்து தவலைத் தண்ணீர் கொப்பளித்தேன், வாயைக் கையைத் திறந்தானா இவன்! இவள்மேல் ஒரு விசை கொப்பளித்ததற்காக இவ்வளவு ஆரவாரமா? என்றான்; உடனே கள்ளன் பிடியுண்டு பரிபவப்பட்டானென்பது கிடக்கட்டும். ஓயாமல் அவன்மீது தண்ணீரைக் கொப்பளித்தும் அவன் வாயைக் கையைத் திறவாமலிருந்தது போல, இந்த நவீனபண்டிதர்களும்...மேலே என்ன சொல்வது! ஒன்றும் தோன்றவில்லையே.

அனந்த்தர்— ''வ்ருச்சிக தஷ்ட மலிம்லுசந்யாயேந'' என்று தேவரீர் பலகால் எழுதியிருப்பதைப் பார்த்திருக்கிறேன். இந்த கோமுட்டிக் கதை அச்ருத பூர்வம்;

இது விநோதமாயிருக்கிறது. இது கிடக்கட்டும். அவர்கள் மறுவாய் திறக்க முடியாமல் திக்குமுக்கலாடி நிற்கும் விஷயங்களையெல்லாம் ஒன்று விடாமல் ஸாதித்தருளவேணும். அடியேன் தரித்து வைத்துக் கொள்ளும்படி ஸாதிக்கவேணும்.

அண்ணு—ரஹஸ்யத்ரயஸார ஸித்தோபாய சோதநாதிகாரத்தில் ''ஸ்ரீ ஸூக்த பாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார்'' என்றெழுதியிருக்கிறது. இதன்மேல் நாமெழுதியிருப்பவற்றை ஸம்க்ஷேபமாகக் கேளும், தேசிகன் ஸ்ரீஸூக்த பாஷ்யத்திலே பெரிய ஜீயரும் அபேக்ஷிதார்த்தங்களெல்லாம் உபபாதித்தார் என்கிருரே; என்ன அர்த்தம் அபேக்ஷிதமோ? அதை எப்படி உபபாதித்தாரோ? இஞ்சிமேட்டழகியசிங்கர் பெரிய வித்வானுச்சே; வியாக்கியானம் பண்ண இழிந்த அவராவது விவரிக்க வேண்டாமா? நஞ்சியர் ஸாதித்த ஸ்ரீஸூக்தபாஷ்யமென்று ஒன்று அச்சில் வந்திருக்கிறதே. அதை அந்த ஸ்வாமி கடாக்ஷியாதவரல்லரே. அதில் உபபாதித்த அபேக்ஷிதார்த்தங்களில் ஒன்றிரண்டாவது எடுத்துக்காட்டக்கூடாதா? பெரிய ஜீயரும் என்பதற்கு ''நாராயணமுனி யென்கிற நஞ்சீயரும்'' என்று பொருளுரைத்தார். இதுதான் இங்கு அவச்யமான விவரணம் போலும். அந்த நஞ்சியர் என்ன உப்பாதித்தாரென் பதை அடியோடு காட்டாமல் தாம் வீணுக ஒரு அபூர்வமான ப்ரமாணம் காட்டுகிருர். அது என்னவென்னில்; ''இங்கு ஸ்வயம் வஸ்தூகுர்வன்...பத்மாயாஸ் தவச சரணௌ நச் சரணயந்'' என்று பட்டர் ஸ்ரீ லக்ஷ்மீ கல்யாணத்தில் நம்மாழ்வார் பாசுரத்திற்கு அர்த்தமாக அருளிச்செய்த ஸ்தோத்ரத்தின் ச்லோகாதிகளும் அநுஸந்தேயங்கள். இதில் பெருமாளுடையவும் பிராட்டியினுடையவும் திருவடிகளுக்கே உபாயத்வம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டதிறே.'' என்றெழுதியுள்ளார் இஞ்சிமேட்டழகிய சிங்கர்.

அனந்தர்— அந்த ஸ்வாமி பெரிய வித்வானுச்சே; அவரா இப்படி யெழுதுகிருர்? பிராட்டியை மட்டும் தனியே விளித்து உமது திருவடிகளை சரணமாகப் பற்றுகிறேன் என்று இட்ட சுலோகங்கள் பதினுயிரக்கணக்காக இல்லையா? *பகவந் நாராயணேந்யாதி சரணுகதிகத்ய சூர்ணையில் ''சரண மஹம் ப்ரபத்யே'' என்றிருப்பது ஒன்று போராதா வெற்றிக்கொடி நாட்டுவிக்க? ஸுப்ரஸித்தமானதைவிட்டு அத்யந்தம் அப்ரஸித்தமான தொன்றைத் தேடிப்பிடித்து ப்ரஸங்கிப்பது என்னே? ''சரணம் ப்ரபத்யே'' என்னப்பெறுகிற வ்யக்திகளுக்கெல்லாம் மோக்ஷ ப்ரதத்வம் வந்துவிட்டதாக இஞ்சிமேட்டு ஸ்வாமியுமா எண்ணுகிருர்? அவரவர்கள் தம்தம் ஆசாரியர்களுக்குச் செய்துகொள்ளும் தனியன்களில் 'சரணம் ப்ரபத்யே' இல்லாத தனியன் தேடிப்பிடிக்க வேண்டியதாகவன்றே விருக்கும். இவர்களெல்லோரும் 'மோக்ஷப்ரதர்களாகும்போது பிராட்டிதானு மோக்ஷப்ரதையாக ஆகக்கூடாது?

அண்ணு— மேலும் கேளும்; நியாஸதிலகத்தில் *தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ* என்கிருர் ஸ்வாமி. எம்பெருமான் தானும் ஆசாரியர்களின் கட்டளைபெற்றே முக்தியளிப்பதாகப் பணித்தாராயிற்று. இராமாநுச நூற்றந்தாதியில் *ஞானங்கனிந்த நலங்கொண்டு* என்கிற பாசுரத்தில் எம்பெருமானைப் போலவே எம்பெருமானரும் மோக்ஷப்ரதர் என்று சொன்னதோடு நில்லாமல்

எம்பெருமானுருடைய மோக்ஷப்ரதத்வத்தின் தன்னேற்றமும் உள்ளபடி யுரைக்கப் பட்டுள்ளது. இப்புடையிலே பிராட்டியும் மோக்ஷப்ரதையென்றால் தடுப்பாருண்டோ? உபாயத்வே (மோக்ஷப்ரதான விஷயத்தில்) பிராட்டியின் ப்ராமாணிகமான பரிஸ்திதியை ஸகலாசாரியர்களும் ஸமரூபமாகச் சொல்லியிருக்கிறார்களேயொழிய இதில் ஏற்றத்தாழ்வு கூறுதற்கு அவகாசலேசமும கிடையாது. இதற்கெல்லாம் ஸமாதானம் சொல்லவல்லவர்கள் ஜம்பூத்வீபே பாரத வர்ஷே பரத கண்டே மேரோர் தக்ஷிணே உத்தரே ச பார்ச்வே இலரென்று சபதமிட்டுச் சொல்லியுள்ளோம். இந்த சபதம் எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் ஜீவித்திருக்கும்.

அனந்தர்— நாற்பதாண்டுகட்குமுன் அச்சாகியிருக்கிற ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் ப்ரயுஞ்ஜத்பி: இத்யாதி அபசப்தங்கள் இருப்பது தவிர முக்கியமான விஷயம் ஒன்று; நஞ்சீயர் பட்டரை வெறும் ஆசார்யராகக் கொண்டவரல்லர். தாம் உத்தமாச்ரமியாயிருக்கச் செய்தேயும் க்ருஹஸ்தரான பட்டருக்கு ப்ரஹ்மரதமெழுந்தருளப்பண்ண கடிபத்தரானவர் என்பதை யறியாதாரில்லை. அப்படிப் பட்ட நஞ்சீயர் தம்முடைய க்ரந்தத்தில் பட்டர் ஸ்ரீஸூக்தியை உதாஹரிக்க நேர்ந்தால் "ஸ்ரீபராசரபட்டார்யை ருக்தம்" என்று எழுதுவர்; "ஆசார்யபாதைருக்தம்" "அஸ்மதாசார்யபாதை ரநுக்ருஹீதம்" என்று இவ்வண்ணமாகவன்றோ எழுதுவர். பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் ஆழ்வான் ஸ்ரீஸூக்தியை யெடுத்துக் காட்டுகிறபோதும், நயனாராசார்யர் வேதாந்த குரு ஸூக்திகளை யெடுத்துக் காட்டுகிறபோதும் இப்படியேயன்றோ எழுதியிருப்பது. நயனாராசார்யருடைய க்ரந்தத்தில் "வேதாந்தாசார்யை ருக்தம்" என்றோ "ஸ்ரீமதா வேங்கட நாதாசார்யேண ப்ரோக்தம்" என்றோ எழுதப்பட்டிருப்பதாகக் கண்டால் அதை நயனாராசார்யருடைய க்ருதியாக ப்ராமாணிகர்கள் ஒப்புக்கொள்வர்களா? வசன ரூபமாக எழுதும் க்ரந்தங்களில் "ஆசார்யபாதைரநுக்ருஹீத" மென்றெழுதுவது தவிர வேறு விதமாக எழுதுவது முறையேயன்று; பெருத்த அபசாரமேயாகும். இவ்வபசாரத்திற்கு நஞ்சீயரையா ஆளாக்குவது. ஓரிடமன்றிக்கே பல விடங்களில் முறை தவறின பேச்சு முத்ரித ஸ்ரீஸூக்த பாஷ்யத்தில் காண்பதால் இது நஞ்சீயருடைய க்ருதியன்றென்று நாற்பது வருஷங்களுக்கு முன்னமே தேவரீர் எழுதி வெளியிட்டிருப்பதை அடியேன் ஸேவித்திருக்கிறேன். அதற்கு ஏதேனும் ஸமாதானமுண்டோ?

அண்ணு— நானெழுதின விஷயங்களில் ஒன்றிலாவது வாய் திறக்க வழியுண்டோ? இதைக் கேளும்; சாரீரக மீமாம்ஸையில் கர்த்ரதிகரணமும் பராயத்தாதிகரணமும் சேர்ந்தாப்போலிருக்கிறது. முந்தின அதிகரணம் ஜீவாத்மாவைக் கர்த்தாவென்று நிலையிட்டது. பிந்தின அதிகரணம் அந்த கர்த்ருத்வம் பரமாத்மாயத்தமென்று அறுதியிட்டது. *ய ஆத்மநிதிஷ்டந் ஆத்மநோந்தர: ஆத்மாந மந்தரோ யமயதி* *அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* இத்யாதி ச்ருதிகளில் பரமாத்மாவானவன் ஜீவாத்மாவை அவ்வோகருமங்களில் ப்ரேரிப்பவனாகத் தெரியவருவதால் ஜீவாத்மாவுக்குச் சொன்ன கர்த்ருத்வம் பரமாத்மாவின் ப்ரேரணாதீனமென்று ஸித்தாந்திதமாயிற்று. இங்ஙனே கொண்டால் [அதாவது ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் பரமாத்மா தீனமென்று கொண்டால்] விதி

6

நிஷேத சாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாகவேண்டிவருமே; நிக்ரஹாநுக்ரஹங்கள் ஜீவாத்மாவுக்கு இல்லையாகுமே! என்கிற ஆசங்கை நிற்கிறது; இதைப் பரிஹரிக்க *க்ருத ப்ரயத்நாபேக்ஷஸ் து: விஹித ப்ரதிஷித்த அவையர்த்த்யாதிப்ய:* என்று அடுத்த ஸூத்ர மவதரித்தது. ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்யமும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் மட்டுமே பரமாத்ம பாரதந்த்ர்யமும் கொள்ளப்படுகையாலே விதிநிஷேத சாஸ்த்ரங்களுக்கு வையர்த்த்யமில்லை யென்று சங்காபரிஹாரம் செய்ததாயிற்று. ஆக சாரீரகமீமாம்ஸாநிஷ்கர்ஷம் எத்தகைத்தாக முடிந்ததென்னில்; பரமாத்மாவுக்கு ஸாக்ஷித்வம் அநுமந்த்ருத்வம் ப்ரேரகத்வம் என மூன்றுகாரங்களுண்டு. ஸாக்ஷித்வமென்பது உதாஸீநத்வம். ஜீவனுடைய ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஈச்வரனுக்கு ஔதாஸீந்யமே யுள்ளது. த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வம். (அஃதில்லையாகில் ஜீவனுக்கு ப்ரவ்ருத்தியே நிர்வஹிக்கமாட்டாதன்றோ.) இனி ப்ரேரகத்வம் எந்த ஸ்தலத்திலென்றால், இதை நம் ஸ்ரீபாஷ்யகாரர் *க்ருத ப்ரயத்நாபேக்ஷஸ்து* இத்யாதி ஸூத்ரபாஷ்யத்தில்—"நந்வேவம் *ஏஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி..." இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் ஒருங்கவிட்டு ஸர்வஸாதாரணமன்றிக்கே விசேஷ விஷயமென்று நிர்வஹித்தருளினர். இந்த நிர்வாஹம் அநகமும் அநர்க்கமுமானது. ஆக இவ்வளவு விஷயங்களையும் புரிந்துகொண்டீரா?

அனந்தர்— இதை அடியேன் அநுவதிக்கிறேன். (எதற்காக?) உள்ளபடி தெரிந்துகொண்டிருக்கிறேனு என்பதை தேவரீர் திருவுள்ளமறிய. ஜீவனுடைய ப்ரவ்ருத்திகளில் ப்ரதம ப்ரவ்ருத்தியில் (ஈச்வரனுக்கு ஔதாஸீந்யமென்றும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வ மென்றும் தேறிநின்றது. இதை நடாதூரம்மாள் தத்வஸாரத்தில் *ஆதாவீச்வர தத்தயைவ புருஷ: ஸ்வாதந்த்ர்ய சக்த்யா ஸ்வயம்......தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய......* இத்யாதி ச்லோகத்தாலே நன்கு விளங்க வைத்தார். இவ்வளவுதானே விஷயம்.

அண்ணு— விஷயதத்வ மிங்ஙனே யிருக்க *அந்யேந்த்ரகம் புவநமந்யத நிந்த்ரகம் வா கர்த்தும் க்ஷமே கவி ரபூத் அயமந்வவாயே* என்று பேசிக்கொண்ட குரு ஸார்வபௌமர் அதிகரண ஸாராவளியில் பராயத்தாதிகரணார்த்த நிர்வாஹத்தில் (ச்லோ. 242) *க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸமாநா மித்யாதியில் சேதநனுடைய ஸகல ப்ரவ்ருத்திகளிலும் ஈச்வரனுக்கு ப்ரேரகத்வம் தாராளமாக வுண்டென்று கூறி, இது ஸ்ரீபாஷ்ய் தீப-ஸார-தத்வஸாரங்களோடு விரோதிக்குமது என்பதைத் தாமே தெரிந்துகொண்டு *பாஷ்யாதி க்ரந்தலேசோபி அவஹித மநஸாம் ஜதமர்த்த்யம் பஜேத* என்று ஓங்கி யடித்துவிட்டார். ஸ்ரீபாஷ்யாதிகளை நுட்பமாக ஊன்றி நோக்கினல் அவற்றுக்கு இதுவே அர்த்தமென்று தேறலாம் போ-என்று முடித்திட்டார். ஸ்ரீபாஷ்யாதிகளுக்கு இது கண்டனமே யொழிய இவர் கூறுமர்த்தம் அவற்றில் காணமுடியாதென்பது கல்வெட்டு. "லவணம் என்பதற்கு எருமைச்சாணி யென்றுதான் பொருள்; இப்பொருளை மனத்திற்கொண்டு கோசங்களை ஆழ்ந்து நோக்கினல் இப்பொருள் கிடைத்தே தீரும்" என்பதோடொக்குமிது. அவஹித மநஸாம் ஜதமர்த்த்யம் பஜிக்கும்படியான பாஷ்ய க்ரந்த லேசம் எது? எடுத்துக் காட்டும் என்றால் திசை தொறும் விழிக்கவேணுமத்தனை. ஆதிசப்தத்தை விட்டிடு

வோம்; பாஷ்ய க்ரந்த லேசம் காட்டினால் போதும். வளவள வழவழ வென்று எதையேனும் பேசாதே எழுதாதே ச்ருங்க க்ராஹிகயா பாஷ்ய க்ரந்த லேசமே காட்டி நிற்கவேணும் என்று வித்வான்களைப் பிரார்த்தித்திருக்கிறேன். இதுகாறும் வாய் திறந்தவர்களில்லை. இனிமேலும் வாய்திறக்க வழியில்லை யென்பது சிலா லிகிதம். விடையிறுக்க விஷயமிருந்தால் அதை வெளியிடாமல் கண்ணுறங்குமா?

அனந்தர்—தத்வத்ரயத்தில் (35). "கர்த்ருத்வந்தானீச்வராதீநம்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்தில் விசதவாக்சிகாமணிகள் ஸ்ரீபாஷ்யாதி பஹு ஸ்ரீ ஸூக்திகளை வெகுவிரிவாக எடுத்துக்காட்டி ஸமந்வயம் செய்தருளியிருக்கும் பரிசைக் காணக் கண்ணில்லையே யிவர்களுக்கு. மாககாவியம் இரண்டாவது ஸர்க்கத்தில் ☼அங்காதி ரோபிதம்ருகச் சந்த்ரமா ம்ருகலாஞ்சந:, கேஸரீ நிஷ்டுர க்ஷிப்தம்ருகயூகோ ம்ருகாதிப:☼ என்றுள்ள ச்லோகத்தையே இவர்கள் நிச்சலும் சிந்தைசெய்யத்தகும். உபயவேதாந்தங்களிலும் தெளிவான பொருள்களை யுணர வேண்டில் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளல்லது வேறு தஞ்சமில்லை யன்றோ. அதற்கு ப்ரக்ருத ஸ்தலம் ப்ரபல ஸாக்ஷி. மேல்விஷயம் ஸாதிக்கவேணும்.

அண்ணு— கைவல்ய விஷயத்தில் சில அருமையான விஷயங்கள் கேளும். ஆத்மாநுபவம் (கைவல்யம்) மோக்ஷமன்றென்றும் புநராவ்ருத்தியுண்டென்றும் ஆகவே இது அநித்யபுருஷார்த்தமென்றும் ஒரு கொள்கை. இது அபுநராவ்ருத்தி லக்ஷண மோக்ஷமேயென்றும் நித்யபுருஷார்த்தமே யென்றும் ஒரு கொள்கை. கீதா பாஷ்யத்தில் ஒரு விதமாகவும் ஸ்ரீ பாஷ்யத்தில் மற்றொருவிதமாகவும் இருப்பதாக ஒரு தோற்றம். கீதா பாஷ்யத்தில்—பஞ்சாக்னி வித்யாநிஷ்டனை கேவலனுக்கு ப்ரஹ்மாத்மக ப்ரக்ருதி வியுக்த ஆத்ம ஸ்வரூபோபாஸநத்தையும் ப்ரக்ருதி வியுக்த ஆத்மஸ்வரூபாவாப்திரூப பலத்தையும் அர்ச்சிராதிகதியினால் பரமபதப்ராப்தியையும் அபுநராவ்ருத்தியையும் அருளிச் செய்திருப்பதாம். ஸ்ரீ பாஷ்யத்தில் "அப்ரதீ காலம்பநாந் நயதீதி பாதராயண:" என்ற ஸூத்ர விவரணத்தில் "பஞ்சாக்னி வித்யோபி அர்ச்சிராதிநா கதஸ்ய ப்ரஹ்மப்ராப்த்யபுநரா வ்ருத்தி ச்ரவணாச்ச; அத ஏவ தத்க்ரதுந்யாயாத் ப்ரக்ருதி விநிர்முக்த ப்ரஹ்மாத்மகாத்மாநுஸந்தானம் ஸித்தம்" என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்மப்ராப்திரூபபலன் ஸ்ரீபாஷ்ய ஸம்மதமாகத் தேறுகிறது; ஆகவே கீதா பாஷ்ய ஸ்ரீபாஷ்ய ஸூக்திகள் பாஸ்பரவிருத்தம் போல் தோற்றும். இந்த விரோதத்தை சமிப்பித்தாகவேண்டும். இதற்காக தேசிகன் மது வித்யா ந்யாயத்தைத் திருவுள்ளத்திலே கொண்டு ப்ரக்ருதி வியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலமாகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதாநபலனாகவும் வைத்து நிர்வஹித்தார்.

அனந்தர்— எப்படியோ ஸ்ரீ ஸூக்திகளுக்கு விரோதமற ஸமந்வயம் செய்வது நல்லதுதானே. இத்தகைய ஸமந்வயத்தில் ஏதேனும் பாதகமுண்டோ?

அண்ணு— நின்று கேளும்; கீதாபாஷ்ய ஸ்ரீபாஷ்யஸூக்திகளுக்கு பரஸ்பரம் ஒரு விரோதமும் வாராதபடி நிர்வஹிக்கக்கூடிய வழியுண்டு? ப்ரக்ருதி வியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதானபலன்; ப்ரஹ்மப்ராப்தியைச் சொல்லுகின்ற

ஸ்ரீபாஷ்ய ஸூக்தி விரோதிக்கிறதேயென்னில், ப்ரஹ்மப்ராப்த்யபுநராவ்ருத்தி ச்ரவணாத் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மாநுஸந்தானம் ஸித்தம்'' என்று அருளிச் செய்திருக்கையாலே தத்க்ரதுந்யாயத்தாலே ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மப்ராப்திதான் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸநத்திற்கு அநுரூபமான பலனாகத்தகும். ஆகவே விசேஷணதயா பரப்ரஹ்மத்துக்கு ப்ராப்யத்வம் தேறுகிறபடியால் ப்ரஹ்மப்ராப்தி சொன்னது பொருந்தும். ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாகவும் ஆத்மாநுபவமே ப்ரதானமாகவும் ஸித்திக்கிறபடியாலே கைவல்ய மோக்ஷத்திற்கு இழிவு சொல்லப்படுகிறது.

அனந்தர்—இப்படி நிர்வஹித்தால் எல்லா ஸ்ரீஸூக்திகளும் நன்றாகப் பொருந்தத் தட்டில்லை தான். ப்ரக்ருதிவியுக்தாத்மாநுபவத்தை அவாந்தரபலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதானபலனாகவும் கல்பிப்பது நிர்மூலமென்பது நன்றாகத் தெரிகிறது. பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு மூர்த்தந்ய நாடியினால் நிஷ்க்ரமணமும் இடையில் வ்யவதான மில்லாமல் பலனடைவதும் ச்ருதப்ரகாசிகையில் அருளிச் செய்யப்பட்டிருக்கிறதே. ஜாபகோபாக்கியானத்தில் வ்யவதாநேந பலப்ராப்தியானதை இங்கே நிதர்சனமாகக் காட்டக் கூடாது. ஜாபகனுக்கு நேர்ந்த ப்ரஹ்மகாய நிஷேவண ரூபமான வ்யவதாநம் ஜிஹ்வைவழியாக நிஷ்க்ரமணத்தினாலானது. தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் ''ஏக க்ரந்த சகலாஸ்வாரஸ்யம் பஹுக்ரந்த ஸ்வாரஸ்யாய க்ராஹ்யம்'' என்றிட்டு கீதா பாஷ்யஸூக்திகள் அஸ்வரஸ மென்று ஸஹித்துக் கொள்ள வேண்டியதாக முடித்திருக்கிறார். அஸ்வரஸமென்பதும் அநுபபன்னமென்பதும் பர்யாயமே என்று தேவரீர் எழுதியிருப்பவற்றுக்கு யாரேனும் விடையிறுத்தவருண்டோ? விடையிறுக்க ப்ரஸக்தி ஏது?

அண்ணா— இதைப்போன்ற மற்றொரு விஷயமுங்கேளும்; சமதமசப்தார்த்த விவரணத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் கீதாபாஷ்யத்தை ஸுஸ்பஷ்டமாகக் கண்டித்திருப்பதோ த்வீபாந்தரேஷ்வபி ப்ரஸித்தமாயற்றது. [இது ஸ்ரீராமாநுஜன் 228ல் மணவாள மாமுனிகள் வைபவ உபஸம்ஹாரத்தில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளதென்பதை நினைவூட்டுகிறேன்;] இந்தகைய விபர்யாஸங்கள் வெள்ளங்கோத்து இருகரையுமழியப் பெருகா நிற்க, சாரீரகமீமாம்ஸா மாம்ஸலாந்மாதோ வயமேவ வயமேவ வயமேவ வென்று மார்புதட்டி வாய்வீச வெள்காமலிருப்பதுதான் வியப்பினும் வியப்பு. இதை எத்தனை தடவை எடுத்துக் காட்டினாலும் வாய்திறப்பாரில்லையே.

அனந்தர்— தேசிக ஸூக்திகளில் பஹுவான அஸாமஞ்ஜஸ்யத்தை இவர்களே பிரசாரஞ்செய்யப் புகுந்தவர்களென்பதில் யார்க்கும் ஸம்சயமோ விவாதமோ இருக்க ப்ரஸக்தியில்லை. இவர்களுக்குச் சில விடங்கள் அஸமஞ்ஜஸமாகத் தோற்றி அதை இவர்கள் வெளியிட்டாப்போலே அங்ஙனே நமக்குத் தோன்றுமிடங்களை நாம் வெளியிட்டால் என்ன இழுக்கு? 'தேசிக ஸூக்தியை அஸமஞ்ஜஸமென்று நாங்கள் சொல்லலாமே தவிர நீங்கள் சொல்லலாகாது' என்பது இவர்கள் கருத்துப்போலும். ஸுதீவிலோசநகாரரான வைதிகஸார்வ பௌமரைத் தங்களைச் சேர்ந்தவராகச் சொல்லிவருகிறார்கள்; அவர் ஸச்சரித்ரரக்ஷா ஸூக்தியொன்றைப் பற்றி ''இது மந்த விஜல்பிதம், அஜ்ஞான விஜ்ரும்பிதம்'' என்றெழுதி வைத்திருப்பதைக் கண்டு வருகிறார்கள்; போக்யமாகவுங் கொண்டு வருகிறார்கள். ஒன்று இங்கு நினைவூட்டுகிறேன்.

ஸச்சரித்ராரக்ஷா விசாரம் இன்றுநேற்றல்ல; முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு தொடங்கியது; தேவரீருடைய ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களுள் ஒன்முன ரக்ஷாவிலோசநபாவ ப்ரகாசிகையை எடுத்துப்பார்த்தால் விஷயம் விளங்கும். அது ஸ்ரீமுக வருஷத்தில் அச்சிடப்பட்டது. அதற்கு முன்னமே பாதுகாஸஹஸ்ராவதாரதத்வ மென்கிற தேவரீரது ஸம்ஸ்க்ருத க்ரந்தத்தில் இது ஆரம்பமாகியிருக்கிறது. இதில் ப்ரதிவாதம் செய்யத் தொடங்கினவர் (வேதாந்த தீபிகாபத்ரிகையில்) வைகுண்டவாஸியான புத்தங்கோட்டம் ஸ்ரீநிவாஸாசாரியர் என்கிற அஹோபில மடாஸ்தாந வித்வான். அக்காலத்தில் டி. டி. தாதாசாரியர் தேவரீரிடத்தில் அன்போ அத்வேஷமோ கொண்டிருந்தவராதலால் அப்போது புத்தங்கோட்டம் ஸ்வாமி யெழுதிய விஷயத்தைக் கண்டித்து இவர் தாமே தமது கையினுலேயே ஸ்ரீமுகஞு மாசி மாதத்து உத்யாந ஸஞ்சிகையில் எழுதி வெளியிட்டுள்ளார். அது வியாகரண சாஸ்த்ரீய விஷயமாதலால் அப்போது திருவையாறு ஸம்ஸ்க்ருத வித்யாலயத்தில் வ்யாகரணுத்யாபகராயிருந்த வி. ஆர். ஸ்ரீநிவாஸ தாதாசாரியர் ஸ்வாமியைக் கொண்டு எழுதுவித்து அவர் பெயராலேயே வெளியிட்டு அந்த வியாஸத்தின் கீழ் தம் பெயராலும் ஒன்று வெளியிட்டுள்ளார்— "நமது மித்திரர் எழுதிய இந்த வியாஸத்தை எல்லா வித்வான்களும் கவனிக்க வேணுமென்று பிரார்த்திக்கிறோம்; இதனுல் உலகுக்கு உண்மை விளங்குமென்று நம்புகிறோம்; இவ்விஷயத்தில் நாமும் சில ஆதாரங்கள் காட்டுகிறோம்" என்று. இதை அப்போதே தேவரீர் ரக்ஷாவிலோசந பாவப்ரகாசிகையில் மிக விரிவாக எழுதியிருக்கிறது. புத்தங்கோட்டம் ஸ்வாமியின் துர்வாதங்களை நிர்தாக்ஷிண்யமாகக் கண்டித்து உத்யாநபத்ரிகையில் வெளியிட்டதற்கு தேவரீர் பரமஸந்தோஷத்தையும் (அதில் பக்கம் 22ல்) விளக்கி யிருக்கிறது; அவ்விடத்துப் பங்க்திகளிவை "......உத்யாநபத்ரிகாஸம்பாதக மஹாபாகா:......யதாயதமுபபாத்ய ஸம்ச்லாகநீயஸமர்த்தனஸரணிகாஸ் ஸமபூவந்நிதி ஹார்த்தமாநந்த மாவிஷ்குர்ம:" என்று. தேவரீர் இங்ஙனே யெழுதும்படியாக தேவரீருடைய வழியைப் பின்பற்றியுகந்திருந்தவர் டி. டி. தாதாசாரியர் என்பது உலகமறிந்த விஷயம். சிலர் மறந்திருக்கக்கூடும்.

அன்னு— ஸுதீவிலோசநகாரர் தேசிகனையுத்தேசித்துச் செய்திருக்கிற தூஷணத்தை நாம் யுக்தமென்று கொள்ளுவோமல்லோம். ஆச்சான் பிள்ளையின் திருவுள்ளத்தை உள்ளபடி யுணராமே நிரவத்யமான அவருடைய ஸூக்தியைக் குறித்து ரஹஸ்யத்ரய ஸாரத்தில் மந்தப்ரோக்த மென்று தூஷணமிட்டது போல, ஸுதீவிலோசநகாரரும் ஸச்சரித்ர ரக்ஷாஸூக்தியின் ஹ்ருதயத்தையுணராமல் ததுக்தியை மந்த ப்ரோக்தமென்று தூஷித்தார். ஆச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தியும் நிரவத்யம், ரக்ஷாஸூக்தியும் நிரவத்யம். மந்த ப்ரோகத மென்கிற இருவருடைய தூஷணமும் அஸ்தாநே—என்பது தான் முடிந்து நின்றது. ஆகவே *இதி மந்தைரிதம் ப்ரோக்தம்—க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்* இத்யாதி வ்யர்த்த தூஷணங்களை விலக்கியே விவேகிகள் ரஹஸ்யத்ரயஸார ப்ரவசநம் செய்யக் கடவர்கள். மஹர்ஷி வாஸுதேவாசாரியர் ஸ்வாமி அப்படித்தான் செய்துவந்தார்.

அனந்தர்— பெரிய வித்வானென்று புகழ்பெற்றவர் அஸ்தாநே அகாண்டே மருண்டு "இதிமந்தைரிதம் ப்ரோக்தம்" என்றும் "க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்"

7

என்றும் எழுதிவைத்தது ஆச்சரியமன்று; அந்த நூலை அத்யயனம் செய்பவர்களி லும் அத்யாபனம் செய்பவர்களிலும் வியாகரணப்ரிசயம் செய்தவர்கள் சிலராவது இருக்கமாட்டார்களா? "இப்படி அஸம்பத்தமாக எழுதிவைத்தாரே" என்று அவர்களுக்குங்கூடத் தோன்றாமலிருப்பதுதான் ஆச்சரியங்களில் மேலான ஆச்சரி யம். "ஸாமாத்யோ ராஜா வததி" என்று சொல்லவேணுமேயொழிய "வதத:" என்னக்கூடாது—என்கிறார் ரஹஸ்யத்ரய ஸாரவ்யாக்யாதா வொருவர். அதை யாரும் தூஷிப்பாரில்லை. "ஸாமாத்யோ ராஜா வதத:" என்று சொன்னால் சிரிக்க வேண்டியதுதான். ப்ர்க்ருதத்தில் அந்த ப்ரஸங்கத்திற்கு என்ன ப்ரஸக்தி? "நாராயணோ ரக்ஷதி, ஸ்ரீமான் நாராயணோ ரக்ஷத:" என்று ஒருவர் சொன்னால் அதை மந்தப்ரோக்தமென்ன வேண்டியதுதான், க்ரந்தஜ்ஞரபஹாஸ்யமென்ன வேண்டியதுதான். "தேவதத்தஸ்யசரண:" என்றோ, "தேவதத்தஸ்ய சரணௌ" என்றோ சொல்லுவதில் பிசகில்லை. அப்படியே "ஸபத்நீகஸ்ய தேவதத்தஸ்ய என்று சொல்லி மேலே சரண:, சரணௌ, சரணா: என்று மூன்று வசனங்களும் தாராளமாகச் சொல்லலாம். எந்த சப்த சாஸ்த்ரமும் இதைத் தடுக்காது. (பதிப்ராதர்நய்தோர்நவயாத்) என்றும் (ஸபத்நீகசப்த விரோதத:) என்றும் கார ணங்கூறி இதை தூஷித்தால் அப்படி தூஷிப்பவர்களை உலகமெல்லாம் பரிஹஸிக்கு மென்னத் தட்டில்லை. "த்வத்தாஸதாஸீகண:" என்றருளிச் செய்த ஆளவந்தார், முன்னே (ப்ரஹ்மே சாதி ஸூரவ்ரஜ:) என்றுமட்டும் அருளிச் செய்திருந்தால் அது தூஷணீயமாகவே யிருக்கும். (ஸதயித: ஸூரவ்ரஜ:) என்கையாலே நிரவத்ய மாயிற்று. என்றித்தகைய விஷயங்களை தேவரீர் பன்னிப்பன்னி யெழுதி யிருந்தும் புரிந்துகொள்ளமாட்டாத பண்டிதம்மந்யர்களைப் பற்றி என்ன சொல்லுவது!

அண்ணு— சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? "ந தே நிரஸநீயா:, அபி து சோசநீயா:" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்திதான் சொல்லவடுப்பது. அந்த ரஹஸ் யத்ரயஸார வ்யாக்யாதா (குரோஸ் ஸதாரஸ்ய நிபீட்ய பாதௌ) என்பதை யெடுத்துக் காட்டுகிறார். அங்கு மூன்று வசனங்களையும் தாராளமாக ப்ரயோகிக் கலாமென்பதை அந்தோ அறிந்திலர். யதிராஜஸப்ததியில் "அநுகல்பபூத முரபித் புதம் ஸதாம்" என்று தொடங்கும் சுலோகத்தில் "சரணம் யதீந்த்ர சரணம் வ்ருணீமஹே" என்றிருப்பதைப் பார்த்த வொருவர் *யோ நித்யமச்யுத பதாம்பு ஜேத்யாதி ச்லோகத்தில் "ராமாநுஜஸ்ய சரணௌ" என்றிருப்பது பிசகு என்று கண்டித்தாராம். இவ்வகுப்பினரை யெல்லாம் அவ்யுத்பந்ந குடும்பமென்று விட்டுத் தொலைக்கவேண்டியது தவிர வேறில்லை. ஒவ்வொருவர்க்கும் விருதுகளோ அபாரம்.

அனந்தர்— அடியேனுக்கு இந்த சுலோகம் நினைவுக்கு வருகிறது; "சித்ரம் சித்ரம் பதபத! மஹச்சித்ரமேதத் விசித்ரம் ஜாதோ தைவாத் உசிதகடநாஸம் விதாதா விதாதா, யந்நிம்பாநாம் பரிணதபலஸ்பாதி ராஸ்வாதநீயா யச்சைதஸ்யா: கபலநகலா கோவித: காகலோக:" என்பது. ரஹஸ்யக்ரந்தம் அவதரித்ததும் அதற்கு அநுபோக்தாக்கள் அமைந்ததும் *சித்ரம் சித்ரம் பதபத! மஹச் சித்ரமேதத் விசித் ரம்* என்னத்தகுமந்தனை. இது இருக்கட்டும் "இப்படி மத்யஸ்தத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடா தொழியில் * த்ருட—

பூர்வச்ருதோ மூர்க்க:......என்கிற தசையாம்'' என்றுரே, இதைப்பற்றி ப்ரபல சர்ச்சைகள் நடந்தனவே, முடிவு என்னுயிற்று?

அண்ணு— எனது நூல்களையெல்லாம் ஒன்றுவிடாமல் பார்த்திருப்பதாகச் சொல்லுகிறீர். 'அதன் முடிவு என்னுயிற்று? இதன் முடிவு என்னுயிற்று?' என்று கேட்கிறீர். கேட்ட கேள்விகளுக்கு நான் விடைகூறவேண்டி யிருப்பதால் கூறுகிறேன். இவ்விஷயம் மணவாளமாமுனிகளின் காலத்திலேயே முடிந்திட்டதல்லவா? உபதேச ரத்தினமாலையில் ஸ்ரீ வசனபூஷணத்தின் பெருமையை ஏழு பாசுரங்களினுலருளிச்செய்து, அதற்குமேல் அந்த பூஷணத்தின் ஜீவநாடியான அர்த்தவிசேஷங்களைப் பதினெரு பாசுரங்களினுல் அருளிச்செய்து, அதற்குமேல் ''முன்னேர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப், பின்னேர்ந்து தாம் அதனைப் பேசாதே, தன்னெஞ்சில் தோற்றினதே சொல்லி இது சுத்த வுபதேச வரவாற்றதென்பர் மூர்க்கராவார்'' என்னுமிந்தப்பாசுரத்தை யருளிச்செய்திருக்கிறுர்; இங்கே இந்தப் பாசுரமருளிச் செய்திருப்பது எதற்காக? என்பதை நீர் தெரிந்து கொள்ளவில்லையா?

அனந்தர்— ஏன் தெரிந்துகொள்ளவில்லை? நன்கு தெரிந்துகொண்டேயிருக்கிறேன். நான் மட்டுமா? வைணவவுலகமெல்லாம் தெரிந்துகொண்டிருக்கிறது. பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளைத் தழுவிப்பேசாமல் மனம்போனபடியெல்லாம் எழுதிவைத்து, அப்படி யெழுதிவைத்ததோடு நில்லாமல் ''இது உபதேச பரம்பரா ப்ராப்தமான அர்த்தம்'' என்றும் பொய்யாக எழுதிவைத்திருப்பவர் மூர்க்கரேயொழிய பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு ரேகாமாத்ரமும் முரண்படாமல் ப்ராமாணிகார்த்தங்களைக் கேட்டபடியே அருளிச்செய்து வைத்திருப்பவர்கள் மூர்க்கரல்லர் என்று மாமுனிகள் அருளியிருப்பதை அறியாதாரில்லை. அடியேன் இதை ஸ்ரீகுண்டலம் ஸ்வாமி ஸன்னிதியிலும் ஆஸுரி ஸ்வாமி ஸன்னிதியிலும் பலகால் கேட்டுமிருக்கிறேன். முன்னேர்மொழிந்த பாசுரத்திற்கு வேறு பொருள் ஏது?

அண்ணு— இப்போது நான் தெரிவிக்கிற ஒரு விசேஷம் கேளும். மணவாள மாமுனிகள் தத்வத்ரய வியாக்கியானத்திலே [இரண்டு சூர்ணிகைகளின் விவரணத்தில்] ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்து சில பல வாக்கியங்களை உதாஹரித்து ''இப்படி அபியுக்தரும் சொல்லிவைத்தார், அபியுக்தராலும் ப்ரதிபாதிக்கப்பட்டது'' என்றருளிச்செய்திருக்கிறுர்; அந்த வாக்கியங்களை அவசியம் உதாஹரித்தாக வேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை. அப்படியிருக்க ஏன் உதாஹரித்தருளினுர் தெரியுமோ?

அனந்தர்— இதைப்பற்றித் திருப்பதி புரிசைஸ்வாமி ஸன்னிதியில் கேட்டிருக்கிறேன்; மாமுனிகளின் திருவுள்ளமிது; ரஹஸ்யத்ரயஸாரமென்கிற உமது நூலை நான் பாராமலில்லை; பார்த்திருக்கிறேன்; அதிலுள்ள திட்டுகளையும் பார்த்திருக்கிறேன். விவேகிகளா யிருந்தால் அவற்றுக்கெல்லாம் விடையிறுக்க முன்வரமாட்டார்கள். ஸதாசார்ய ஸ்ரீஸூக்திகளையும் என்னுடைய [மாமுனிகளினுடைய] வியாக்கியானங்களையும் ஸேவிப்பவர்களுக்கு அநாயாஸமாகக் கலக்கங்கள் தீர்ந்துவிடும்'' என்று தெரிவித்தருள்வதே மாமுனிகளின் திருவுள்ளம். திருப்பதி மஹாஸ்வாமி மற்றெரு விசேஷமும் ஸாதிக்கக் கேட்டதுண்டு; மாமுனிகள் தமது வியாக்கியானங்களில் இருபது ஆசாரியர்களின் ஸம்ஸ்க்ருத த்ராவிட ஸ்ரீஸூக்திகளை உதாஹரித்தருளு

கிறார். எங்கும் "அருளிச்செய்தார், அருளிச்செய்தருளினார்" என்றே யுள்ளது. ரஹஸ்யத்ரயஸாரபங்க்திகளை உதாஹரித்தருளுமிடங்களில்மட்டும் அதுகிடையாது, "சொல்லப்பட்டது, ப்ரதிபாதிக்கப்பட்டது" என்றே யுள்ளது. எண்ணி அளந்து நிறுத்து ஸ்ரீஸூக்திகளை ஸாதிக்குமவரான மாமுனிகள் இப்படி யருளிச்செய்திருப்பதைக் குறிக்கொள்ளவேணும். ரஹஸ்யத்ரயஸாரத்தில் பெரியவாச்சான்பிள்ளையை அபியுக்தரென்று கூறினபடியாலே தாமும் இவரை அபியுக்தரென்று நிர்தேசித்தருளினபடி. இதெல்லாங் கிடக்கட்டும். "இப்படி மத்யஸ்தத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தேயும் பற்றினதுவிடாதொழியில்" என்றெழுதினவர்க்கு என்னதான் அபிப்ராயமிருக்கும்? வழவழ கொழகொழவென்று பிறர் சொல்லுவதிருக்கட்டும்; நாம் ஆலோசிப்போமே.

அண்ணா— நன்றாக ஆலோசிப்போம். "எப்பொழுதும் நாள்திங்களாண்டூழி யூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே" என்னத்தக்க ஆலோசனையன்றோ. த்வயத்தில் பூர்வகண்டத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா? விசேஷணத்வமா? என்று ஒரு விவாதத்தைக் கிளப்பிக்கொண்டு உபலக்ஷணத்வமென்று யாரோ சொல்லுவதாக வைத்து அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று ஸ்தாபிப்பதாகக் காடுபாய்ந்த ஒரு (மிக வெறுக்கத்தக்க) விசாரம் ரஹஸ்யத்ரயஸாரத்தில் பரந்திருக்கிறது; இங்கு பிராட்டிக்கு விசேஷணத்வமில்லை யென்று ஒரு ஆசார்யரும் எழுதிவைத்திருக்கவில்லை, நெஞ்சில் ஒரு மூலையிலும் அபிப்ராயம் கொண்டிருக்கவுமில்லை. முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணத்தில் "இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே மணவாளமாமுனிகள் "புருஷகாரமாகவென்கையாலே உபாயவஸ்துவில் விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கும் உபாயத்வத்தில் அத்வயம் சொல்லும்பக்ஷம் நிரஸ்தம்" என்றருளிச்செய்திருக்குமிடத்து விசேஷணத்வத்தைக் கண்டோக்தியாகவே கூறியிருப்பதைக் காணலாம். மாமுனிகளுக்கு முற்பட்ட ஆசாரியர்களுள் ஒருவரும் ஒரு நூலிலும் இந்த ப்ரஸங்கம் கொண்டதேயில்லை; இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லை. இங்கு ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர்..........

அனந்தர்— இவ்விஷயத்தில் தேவரீர் ஸாதித்திருப்பது நினைவுக்கு வருகிறது, விஜ்ஞாபிக்கிறேன். ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு சாஸ்த்ரஜ்ஞர்யாரும் வியாக்கியானமெழுதவில்லை; நவீன காலத்தில் சிறந்த சாஸ்த்ரஜ்ஞரான ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகியசிங்கர் திருப்பதி புரிசை ஸ்வாமியின் திருவடி பணிந்து தத்வார்த்தங்கள் கேட்டுணர்ந்தவராகையாலே நல்லதெளிவுடன் எழுதியிருக்கிறார்; அதாவது, விசேஷணத்வ உபலக்ஷணத்வங்களானவை ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் விவரித்திருப்பதாக எடுத்துக்காட்டிவிட்டு அதற்குமேல் இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்திலே ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை, சொல்லவும் முடியாது" என்றெழுதியிருக்கிறார். அந்த ஸ்வாமியின் ஸ்ரீஸாரபோதினி வியாக்கியானத்தின் இரண்டாம் ஸம்புடத்தில் 29-ஆம் பக்கத்தில் இப்படி யெழுதியிருப்பதை உலகம் பார்த்து வருகிறது, மடத்து ஸம்ப்ரதாயத்திற்காக அவர்

வியாக்கியானம் செய்தருளியதுபோல் முநித்ரய ஸம்பிரதாயத்திற்காக ஒரு சிறந்த வித்வான் ஸ்ரீஸாரதத்வபோதிநீ என்றொரு வியாக்கியானமிடலாமே.

அண்ணு— அதுகிடக்கட்டும்; ரஹஸ்யத்ரயஸாரத்தில் இந்த விசாரத்தில் தான் ''த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:'' ''க்ரந்தஜ்ஞைரபஹாஸ்யம் தத்... இதிமந்தை ரிதம் ப்ரோக்தம்'' இத்யாதி பரமஸாத்விக திவ்ய ஸ்ரீஸூக்திகள் இடம்பெற்றிருக் கின்றன. இந்த ப்ரகரணத்துப் பங்க்திகளெல்லாம் சித்தப்ரம ஜநிதங்களென்று கூசாமல் கூறலாம். ''இப்படி மத்யஸதத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடாதொழியில்'' என்றிருக்கிறதல்லவா? இது பிஷ்ட பேஷணமென்று விடவொண்ணுது. இதில் இரண்டு கேள்விகள் நாற்பதாண்டுக ளாகக் கேட்டுவருகிறேன். மத்யஸ்தத்ருஷ்டியாலே தோன்றினதாகச் சொல்லப் படுகிற ப்ராமாணிகார்த்தங்கள் எவை? பற்றினது விடாமல் (அதாவது துராக்ர ஹத்தாலே) பிடிவாதமாகச் சொல்லும் அர்த்தம் எது? என்று, அப்படி அபார்த்தம் சொல்லுகிற க்ருஹீதக்ராஹிகள் யார்? என்கிற மூன்ருவது கேள்வியை விட்டுவிடு வோம் முன்னிரண்டு கேள்விகளுக்கு நவீன வித்வான்கள் விடையிறுத்தே யாகவேண் டும். கவிதார்க்கிகஸிம்ஹ ஸூக்தியில் ஒன்றுமறியாதவொரு வழிப்போக்கன் கேள்வி கேட்டுவிட்டால் அதைப் பொருள்படுத்தி விடையிறுப்பதா? என்று சொல்லி உதறித்தள்ளிவிடலாமத்தனை. பிராட்டிக்குப் புருஷகாரத்வத்துக்கு மேற்பட்ட ஆகாரமில்லையென்று கல்வெட்டும் செப்பேடும் செய்துவிட்டு ''ஸ்ரீமத்பதத்தில் காண் கிற பத்நீஸம்பந்தத்தில் கலங்குவர்கள், கலக்கத்தை சமிப்பிக்கிறோம்'' என்ருல், கலக்கமென்பது யாருக்குண்டானது? யாரால் சமிப்பிக்கத்தக்கது? என்று மிதமதி களும் பரிசீலிக்கவேண்டிய விஷயமல்லவா இது. அந்தோ! அந்த கெட்டத்தில் ''இப்படி மத்யஸ்த த்ருஷ்டியாலே'' என்பதற்குமுன்னே எடுத்துக்காட்டப்பட்டுள்ள பத்தெட்டு வசனங்கள் கனவிலே வாய்வெருவும் வாக்யங்கள் போன்றவையேயொழிய வேறல்ல வென்கிருர்கள். விமர்சித்துப் பாாக்குமிடத்து அப்படித்தான் நிர்த்தாரணமாகிறது.

''வேரிமாருத பூமேலிருப்பாள்வினை தீர்க்குமே'' ''நின்
திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு''
''உன் திரு'' ''திருவுக்குந்திரு'' ''தாமரையாள் கேள்வ
ஞெருவனையே நோக்குமுணர்வு'' (இன்னும்பல பல)

இத்யாதி ஆழ்வார் பாசுரங்களைக் காட்டியிருப்பது என்ன திருவுள்ளங்கொண்டோ? வேரிமாருத பூமேலிருப்பவள் வினைதீர்க்கமாட்டாளென்று யாரேனும் சொல்லுவா ருண்டோ? நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் வேண்டாமென்று யாரேனும் சொல்லுவாருண்டோ? (உன் திருவன்று, என்திரு) என்பாருண்டோ? எம்பெருமான் திருவுக்குந்திருவாகிய செல்வனென்பதை மறுப்பாருண்டோ? உணர்வு தாமரையாள் கேள்வனெருவனையே நோக்குமென்பதை யாரேனும் அப லாபம் செய்வாருண்டோ? இவ்வருளிச் செயல்களோடுகூட ''வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு'' ''திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்'' ''திருவின் வடிவொக்கும் தேவகி'' ''மலர்மேல் மங்கை மணுளன்'' ''மணுளன் மலர் மங்கைக்கும் மண்மடந்

தைக்கும்'' இத்யாதி பாசுரங்களையும் அடுக்கிக்கொண்டே போகலாமே. மறந்த படியோ? அவற்றில் ரஸமில்லையென்று விட்டபடியோ? என்று பலகால் கேட்டிருக்கிறேன். விடை யிறுப்பாரில்லையே.

அனந்தர்—''(அலமேஷா பரித்ராதும் ராக்ஷஸ்யோ மஹதோ பயாத்) என்றும் (அலமேஷா பரித்ராதும் ராகவாத் ராக்ஷஸீகணம்) என்றும் ஸ்ரீ வால்மீகி பகவான் சரணாகதி ஸாரமான ஆதிகாவ்யத்திலே நிபந்தித்தான்'' என்கிறீரே; (கபோதீம் சரணம் கத:) என்றதை ஏன் இந்த மோர்க்குறிப்பொட்டில் சேர்க்கவில்லையோ? இதற்குமேல் (ஸம்ஸாரார்ணவதாரிணீம்) என்று காட்டியிருப்பது கொஞ்சம் தேவலையென்னலாம்.

அண்ணு—இதற்குமேலுள்ள வேடிக்கைகளைக் காணவேணும்; (ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்) என்று ஆளவந்தார் ஸாதித்திருக்கிறாராம். (அபாங்கா பூயாம்ஸோ யதுபரி பரம்ப்ரஹ்ம ததபூத்) என்று பட்டர் ஸாதித்திருப்பது நினைவுக்கு வரவில்லைபோலும்! பிராட்டியின் கடாக்ஷங்கள் அதிகமாக விழுமிடம் பரப்ரஹ்மம் என்கிறார், (ஜகத்ஸமஸ்தம்) என்றதைவிட இது விசேஷமல்லவா? இதற்குமேல் (ச்ரேயோ நஹ்யரவிந்தலோசநமந; காந்தாப்ரஸாதாத் ருதே) என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியைக் காட்டியிருக்கிறார். இந்தச்லோகம் சதுச்ச்லோகியிலுள்ளது. அதன் பாஷ்யத்திலே அரவிந்த லோசநமந: காந்தாப்ரஸாதம் எவ்வளவுக்கு உதவுகிறது என்பதை விமர்சிக்கப் புகுந்து எங்களாழ்வான் பட்டர் முதலான பூர்வாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொள்ளை கொள்ளையாகவெடுத்துக்காட்டி ''நீரிலே நெருப்புக் கிளருமாப்போலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவருக்காக'' என்கிற பிள்ளை லோகாசார்ய ஸ்ரீஸூக்தியிலே கட்டகுட்யாம் ப்ரபாதமாயிற்று. அந்த ஸ்ரீஸூக்திகளெல்லாம் தேசிகனுடையவையல்ல என்று கொண்டாலொழிய உய்யும் விரகில்லையந்தோ!

இன்னமும்; இதற்குமேல் ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே பிராட்டிதான் நித்யஸூரிகளை யெல்லாம் ஆஜ்ஞாபிக்கிறாளென்று பாஷ்யகாரர் ஸாதித்திருக்கிறாராம். இந்தப்ரஹ்மாஸ்த்ரம் ஒன்று போதுமே. அதற்குமேல் கூரத்தாழ்வான்(ஸ்வஸ்திஸ்ரீர் திசதாத்) என்று ஸங்க்ரஹித்த அர்த்தத்தை மேலே (தேவி! த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா நாபித்வயாஜ்ஞாயதே) என்று விஸ்தரித்தாரென்கிறார்; இது எப்படியிருக்கிறதென்றால் (மந்த: கவியச: ப்ரார்த்தீ) என்று சுருக்கின அர்த்தத்தை பவபூதி (நமோவாகம் ப்ரசாஸ்மஹே) என்று விஸ்தரித்தார்; (முரளா மாருதோத்தூதம் அகமத் கைதகம் ரஜ:) என்று சுருக்கினதை (ப்ரணிபாத ப்ரதீகாரஸ் ஸம்ரம்ப:) என்று தானே விவரித்தார்-என்னுமாபோலே யிராநின்றது என்னத்தட்டுண்டோ?

இன்னமும்; பட்டரும் (ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம்வா விதீர்ய) என்றார் என்கிற வொன்று எடுத்துக்கழிக்கவாவது யோக்யதையுள்ளது; ''தத்தேரங்கி நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ'' என்று நியாஸதிலகத்திலே தாமே வழிகாட்டிருப்பதை மறந்தாரே. ரஹஸ்யரத்னாவளியில் இந்தப்ரமாணங்களையெல்லாம் ஏன் மறந்தாரென்று கேட்கிற கேள்விக்கு வர்ஷசதமானாலும் விடை கிடைக்க வழியில்லையே.

அனந்தர்— கண்ணபிரான் அர்ஜுனனை யுத்தஞ்செய்ய வற்புறுத்திக்கொண்டிருக்கையில் *(11-33.)* "மயைவைதே நிஹதா: பூர்வமேவ" என்று—இவர்களை நான் முன்னமே கொன்றுவிட்டது என்கிறான்; அதுபோல இந்த விஷயங்களெல்லாம் தேவரீரால் நாற்பது வருடங்களுக்கு முன்னமே மறுவாய் திறக்கமுடியாதபடி நிரஸிக்கப்பட்டு முடிந்தனவென்பதை உலகமறியும். வ்யாப்தியில் பரிஸமாப்ய வர்த்தித்வத்தைப் பற்றின விசாரத்தில் ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் ஒருவிதமானமுடிவும், ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதற்கு நேர்விருத்தமான முடிவும் இருப்பதாக நிரூபணங்கள் தேவரீருடைய நூல்களில் கண்டிருக்கிறேன். ஆனால் வெகுநாளாய்விட்டபடியால் சிறிது மறந்திருக்கிறேன். சுருக்கமாக ஸாதித்தருளவேணும்.

அண்ணு— திருச்சந்த விருத்தத்திற்கு நான் திவ்யார்த்ததீபிகையுரை எழுதி வருகையில் *(பா-5.)* *நின்றியங்கு மொன்றலாவுருக்கடோறு மாவியாய், ஒன்றியுள் கலந்துநின்ற* என்ற பாசுரத்தின் தீபிகையில் இந்த பரிஸமாப்யவர்த்தித்வத்தைப் பற்றிச் சிறிது விளக்கி யெழுதியிருந்தேன்; அப்போது எனது வெளிவீடுகளையெல்லாம் ஒன்றுவிடாது அநுபவித்துவந்த தாயார் ஸன்னிதி வரதாசாரியர் ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி ஸன்னிதியில் அதைக்காட்ட, அவர் அதைக் கண்டிக்கவெண்ணி பூர்ணத்வ விசார: என்றொரு சிறுநூலெழுதி வெளியிட்டார். உடனே நான் ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா என்கிற [வ்யாக்க்யானஸஹித ச்லோகமயமான] நூலை வெளியிட்டபின் அந்த சர்ச்சை அப்போது ஓய்ந்தது, பிறகு சிலவாண்டுகட்குப் பிறகு டி. டி. தாதாசாரியர் ஸர்வ சக்தி யென்றொரு சிறு நூலை வெளியிட்டார். அதற்கு மறுநாளே அத்புத சக்தியை வெளியிட்டேன். இதையெல்லாம் நீர் பார்த்ததில்லையா?

அனந்தர்— பாராமல் எப்படி யிருப்பேன். அப்போதைக்கப்போது பார்த்தேயிருக்கிறேன். பலவாண்டுகள் ஆய்விட்டபடியால் மீண்டும் விளக்கியருளவேண்டுகிறேன். இந்த சர்ச்சையை ஸாரமாகச் சுருக்கி ஸாதிக்கவேணும்.

அண்ணு— அப்படியே சொல்லுகிறேன். இடையிடையில் உமக்கு நினைவுக்கு வருவதை நீரும் சொல்லவேணும். குறிக்கொண்டு கேளும். உபநிஷத்தானது "அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" என்று ஸகல பதார்த்தங்களிலும் எம்பெருமான் உள்ளும் புறமும் வியாபித்திருப்பதாக ஓதியிருக்கின்றது; அணுவான பொருள்களில் உள்ளீடாக வ்யாப்தி ஸம்பவிக்கமாட்டாதென்று ஒரு வாதம்; அவயவியான பதார்த்தங்களுக்கே உள் வெளியென்று சொல்லக்கூடுமாதலாலும் நிரவயவமான அணு பதார்த்தங்களுக்கு 'உள்ளே வெளியே' என்று சொல்வதற்கு ப்ரஸக்தியில்லாமையாலும் அணு பதார்த்தங்களிலே எம்பெருமானுக்கு உள்ளுற வ்யாப்தி சொல்லவொண்ணாது என்கிறார்கள் பிறர். அன்றியும் ஒரு பொருளிலும் எம்பெருமானுக்குப் பரிஸமாப்யவர்த்தித்வம் [அதாவது-பரிபூர்ண வ்யாப்தி] கொள்ளவொண்ணாது. ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ண வ்யாப்தியை அங்கீகரிக்குமளவில் [அதாவது பகவானுடைய ஸ்வரூபம் ஒன்றிலே பரிஸமாபித்து வர்த்திக்கிறதென்னில்] மற்றொரு பதார்த்தத்தில் வியாபிக்க ப்ரஸக்தியில்லாமையாலே பரிஸமாப்ய வ்யாப்தியை அங்கீகரிக்கலாகாதென்றும் மற்றொரு வாதம் கூறுவர் பிறர். இதெல்லாம் உமக்குத் தெரிந்ததுதானே.

அனந்தர்— நன்றாகத் தெரிந்ததுதான்; நினைவுக்குவந்தவரையில் அநுவதிக்கிறேன். கேட்டருளவேணும் அணுபதார்த்தங்களிலும் அந்தர்வ்யாப்தி உண்டென்றும், ஒவ்வொரு பொருளிலும் பரிஸமாப்யவர்த்தித்வமும் பொருந்துமென்றும் ஸத்ஸம்ப்ரதாய ஸித்தாந்தம்; சாரீரக மீமாம்ஸையில் (ப்ரஹ்ம ஸூத்ரத்தில்) "க்ருத்ஸ்ந ப்ரஸக்திர் நிரவயவத்வசப்த கோபோ வா" என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தின்மேல் "ச்ருதேஸ் து சப்த மூலத்வாத்" என்கிற ஸித்தாந்தஸூத்ரம் அவதரித்துள்ளது. சாஸ்த்ரங்களினால் தேறுகின்ற விஷயங்களில் குதர்க்க மூலகமான குசோத்யங்களைச் செய்யாமல் சாஸ்த்ரம் சொன்ன கட்டளையிலே இசையவேண்டுமென்று இந்த ஸூத்ரம் சிக்ஷிக்கின்றது. *அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்று சுருதி ஸ்பஷ்டமாகச் சொல்லிவைத்தது. வேதஞ்சொன்னது ஒரு புறமிருக்கட்டும். வேதார்த்த நிர்ணயகர்களான வேதாந்த மஹாகுருப்ரப்ருதிகள் நிஸ்ஸந்தேஹமாக அருளிச்செய்திருப்பது என்ன? என்று பார்க்குமளவில், ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸாக்ஷாத் திருவடியான திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழியில் (1—1—10) *பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்* என்கிற பாசுரத்தின் ஆறாயிரப்படியிலே இங்ஙனே யருளிச் செய்கிறார்: "அதி ஸூக்ஷ்மமாயிருந்த அசித் வஸ்துக்களிலும் வியாபித்து அவற்றினுள்ளே ப்ரகாசிக்கிற சித் வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வியாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனாய்" என்று. தசோபநிஷத் பாஷ்யகாரரான ஸ்ரீ ரங்கராமாநுஜஸ்வாமி திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படியென்று ஸம்ஸ்க்ருத ப்ரதிபதார்த்தடீகை பணித்துள்ளார். (அச்சிட்டு மிருக்கிறது.) அதில் இப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் அவர் பணித்திருப்பதாவது:— "ஏகைகஸ்மிந் ஜலபாமாணௌ அதிவிசால ப்ரஹ்மாண்ட இவ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்தி:" என்று. இதன் பொருளாவது வ்யக்திகளில் ஜாதியானது எப்படி பரிஸமாப்ய வர்த்திக்கின்றதாக ஜாதிவாதிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அப்படி எம்பெருமான் ஒவ்வொரு ஜலபரமாணுவிலும் அதி விசாலமான ப்ரஹ்மாண்டத்திலிருப்பதுபோல (நெருக்குண்ணாமல்) நிறைந்திருக்கின்றான் என்பதாம். இங்கு *பர்யாப்த வ்ருத்தி:* என்று இம்மஹான் பணித்திருப்பது பூருவர்களின் ஸித்தாந்தத்தை நன்கு அடியொற்றியதாம். பரிஸமாப்ய வர்த்தமாநத்வமே சொல்லிற்று ரங்கராமாநுஜஸ்வாமியின் ஸ்ரீஸூக்தியென்றால் அது ஸ்வாமி ஸூக்தியோடொப்ப ஆதரணீயமன்றோ? நேராக ஸ்வாமி ஸூக்தியும் இராநின்றதே; நியாயஸித்தாஞ்ஜந—ஈச்வர பரிச்சேதத்தில் இவ்வாக்ஷேபத்தை யெடுத்துக்காட்டி "ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்" என்கிற ப்ரஹ்மஸூத்ரத்தையே தஞ்சமாகக்கொண்டு "யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவான்" (சாஸ்த்ரம் சொன்னபடி எம்பெருமான் எங்கும் பூர்ணனே) என்று முடித்தார். இந்த ஸித்தாஞ்ஜனத்தில் "சதஸ்ருஷு ச மூர்த்திஷு பரிபூர்ண ஏவ" என்றருளிச் செய்துவிட்டு, உடனே "அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் ந ஸ்யாதிதி சேத்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இந்த ஸூக்திக்கு உதயம் எப்படி? என்பதொன்றையே விவேகிகள் விமர்சிக்கவேணும். *ஸர்வத்ராபி பூர்ண ஏவ* என்று ஸாதித்தவுடனே "வேறிடங்களிலுமிருக்கிற ஈச்வரன் ஒரேயிடத்தில் எப்படி பூர்ணனாயிருக்கமுடியும்?" என்று ஒருவன் ஆக்ஷேபிப்பதாக எழுதப்பட்டிருக்கிறதே.

கீழ் வாக்கியத்திலிருந்துதானே இந்த ஆக்ஷேபம் தோன்றவேண்டும். இப்படி ஆக்ஷே பிக்கவேண்டும்படியான விஷயமே கீழ் வாக்யத்தில் சொல்லி முடிக்கப்பட்டிருக்கிற தென்பது கைகொள்கனியாகக் காண்கிறதே. இதை இல்லைசெய்ய யாரால் முடியும்? ''ஸர்வத்ராபி பூர்ண ஏவ'' என்று ஸாதித்த ஸ்வாமியின் திருவுள்ளத்தில் ''அந்யத்ர வித்யமாநஸ்ய அந்யத்ர பூர்ணத்வம் கதம் பவேத்?'' என்று சங்கிப்பதற்கு உறுப் பான அர்த்தமே உறைந்து கிடந்ததென்பது அசைக்கமுடியாதபடி தேறிவிட்டது. அந்த பூர்ணத்வந்தான் வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தி யென்பது; கடைசியாக இவ்விஷயத்தை முடிக்குமளவிலும் வேறொரு சப்தத்தையிட்டு முடிக்காமல் ''யதா கமம் ஸர்வத்ர பூர்ண ஏவ பகவாந்'' என்று முதல் முதலிலெடுத்த பூர்ண சப்தத் தையேயிட்டு முடித்தார். இவ்விடத்தில் ¤க்ருத்ஸ்நப்ரஸக்திரித்யாதி பூர்வபக்ஷ ஸூத்ரத்தையும்¤ ச்ருதேஸ்து சப்தமூலத்வாத்¤ என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தை யும் தஞ்சமாகக் கொண்டே விவாத விஷயம் உபஸம்ஹரிக்கப்பட்டது. பிறர் சொல்லுகிறபடி ஸ்வாமிக்குத் திருவுள்ளமிருந்தால் இங்கு இந்த ஸூத்ரத்தை உதாஹரித்தது ஸர்வாத்மநா அப்ரஸக்தமாகுமே. லோக விஸஜாதீயமான அத்புத சக்திவாய்ந்த பரமபுருஷனிடத்திலே 'இது எப்படி ஸம்பவிக்கும்? அது எப்படி ஸம்பவிக்கும்? என்று வாயைத் திறவாதே என்றன்றோ ஸூத்ரகாரர் முடித்திட்டது. அதுதானே இங்கு தேசிகனது முடிவுக்குக் கைகொடுத்தது. அகடிதகடநாசக்தன் பக்கலிலே கூடாத தொன்றில்லையென்று சொல்லித் தலைக்கட்டினாராயிற்று. இவ் விஷயத்தில் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் அருளிச் செய்திருக்கிறபடியைப் பார்த் தாலோ அந்தோ! என்ன சொல்லுவது! நியாய ஸித்தாஞ்ஜனகர்த்தா வேறு நபர், ரஹஸ்யத்ரயஸாரகர்த்தா அந்த ஸித்தாஞ்ஜனத்தைக் கண்ணெடுத்தும் பாராத வேறொரு வ்யக்தி - என்னலாமேயொழிய வேறொன்றும் சொல்லமுடியாது—என்று தேவரீர் நிர்ணயித்திருப்பதாக அடியேன் கிரஹித்திருக்கிறேன், இது ஸரிதானே?

அண்ணு— நீர் க்ரஹித்திருப்பது மிகவும் ஸரியே; ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார மூலமந்த்ராதிகாரத்தில் நாராயண சப்தார்த்த விவரண ப்ரகரணத்தில்

> ''வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது:- ஓரொரு உபாத்யவச்சிந்நப்ர தேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியுடைத்தாயிருக்கை. அல்லது வஸ்துதோறும் ஸ்வரூபஸமாப்தியன்று. இது கொள்ளில் பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாம். இத்தை அகடிதகடநா சக்தியாலே நிர்வஹிக்கில் விருத்த ஸமுச்சயங்கொள்ளும் பரமதங்களிற்படியாம்''

என்று ஸாதிக்கப்பட்டிருக்கிறது. உலகில் எத்தனையோ மதங்கள் இருப்பதுபோலே இப்படியொரு மதமிருந்தால் ப்ரமாதமொன்றுமில்லை. இந்த விஷயத்தை நியாய ஸித்தாஞ்ஜநத்தில் விசிஷ்ய விமாசித்து ப்ரஹ்மஸூத்ரத்தையெடுத்துக் காட்டி துர்வாதத்தைத் தொலைத்து ''அதோ யதாகமம் ஸர்வத்ர பூர்ண ஏவ'' என்று சீமைத் தீர்ப்பாக எழுதி முடித்துவிட்டு—''ராமன் ராவணனை வதைத்தானென்றல் *ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்—ஸமோஹம் ஸர்வபூதேஷு—தேவாநாம் தாநவா நாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்—இத்யாதி பஹுப்ரமாணங்கள் விரோதிக்குமாகை யாலே அது கொள்ளவொண்ணாது; புராணபலத்தாலே அது சொல்லுகிறோமென்

ணில் சாஸ்த்ரார்த்த க்ஷோபமே உண்டாகுமத்தனை'' என்றெழுதிவைக்குமாபோலே ''அந்யேந்த்ரகம் புவநமந்யத் அநிந்த்ரகம் வா கர்த்தும் க்ஷமே கவிரபூத் அயமந்வ வாயே'' என்றதொன்றுக்கே சேருமாறு எழுதி வைப்பது என்னேவென்கிறார்கள் ஸாராஸார விவேக குசலர்கள்.

அனந்தர்—''சேட்லூர் நரஸிம்ஹாசாரியரும் இதற்கு ஒரு வியாக்கியானம் (டிப்பணி) எழுதி வைத்திருக்கிறரே. அதிலுள்ள வேடிக்கையைப் பார்ப்போம்; அதில் அவர் எழுதியுள்ளார். ''இவ்வர்த்தம் ஸ்ரீமந்ந்யாயஸித்தாஞ்ஜனத்தில் விவரமாய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது'' என்று. என்ன விவரமோ இவர்தாம் அறியவேணும்; நீதிமன்றங்களில் வாவதூகர்கள் தம் கக்ஷிக்கு நேர்முரணான ஏடுகளைத் தாமே முன்னமெடுத்துக் கொண்டு குழப்பி மழப்பி பங்கப்படுவதுண்டே அதே ரீதிதான்- மற்றொரு வ்யாக்க்யாதாவான இஞ்சிமேட்டழகியசிங்கர் நல்ல சாஸ்த்ரஜ்ஞராகையாலே நியாய ஸித்தாஞ்ஜநப்ரஸ்தாவம் பண்ணாமலே அவ்விடத்து ஸ்ரீஸூக்தியை ஸ்மரிப்பித்துத் தெளிவுபெறுத்திவிட்டார். (அதாவது) அவரைப்போன்ற வித்வான்களன்றோ இந்த நுட்பத்தையறிந்து ரஸிக்கவல்லார். நியாய ஸித்தாஞ்ஜநத்தில் ''அத: ஸர்வத்ர பூர்ண ஏவ'' என்றவிடத்தில் பூர்ணத்வமென்பது பரிஸமாப்ய வர்த்தித்வமன்று என்று சிலர் மழப்புவதுண்டே, அதற்கு லவலேசமும் இடமில்லாதபடி

''ஸர்வபரிஸமாப்தத்தம் பூர்ணத்வம்—என்பதுதான் முக்கியார்த்தம்''

என்றெழுதிவைத்திட்டார். நியாய ஸித்தாஞ்ஜனத்தில் ஸர்வத்ரபூர்ணத்வத்தை நிர்த்தாரணம் செய்வதற்கு ப்ரபலாவஷ்டம்பமாகக் கொண்ட (ச்ருதேஸ்து) இத்யாதி ஸூத்ரம் (பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாம்) என்றபோது எங்கே புக்கொளித்தது என்று சங்கித்து ஸமாதானம் எழுதலாம். ப்ராமாணிக பரிப்ருடரான அந்த ஸ்வாமிக்கு (அவஹிதமநஸாம் ஜதமர்த்த்யம் பஜேத) என்றாற்போன்ற விப்ரலம்பவர்த்மநி ப்ரவேசமில்லையென்று பருத்திப்பட்டழகிய சிங்கர் பணிப்பரென்பது மிகவும் ப்ரஸித்தமான விஷயம்.

அண்ணு—நியாயஸித்தாஞ்ஜனத்தில் விவரமாக ஸாதிச்சாச்சுதென்ற சேட்லூர் ஐயங்கார் அவ்வளவோடு நிற்காமல்—''இந்தால் ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே இத்யாதிகளாகச் சொல்லியிருப்பது அஸங்கதமென்று எழுதியிருக்கிறார்; அது வேதாந்த தீபஸூக்திக்கும் உபநிஷத் பாஷ்யகாரஸூக்திக்குமே கண்டனமென்று விரிவாக நிரூபித்திருக்கிறேன். அதன் மேல் வாயைத் திறக்க முடியாமலே அவர் விண்ணுலகெய்தினார்.

அனந்தர்—தேவரீர் ராமாயணம் போலவும் பாரதம் போலவும் எழுதியிருப்பவைகளை இந்த யுகத்தில் வாசித்து முடிக்க ஒருவராலாகாது. ஒன்றிலிருந்து ஒன்று நினைவுக்கு வருகிறது. எதை விடுவது, என்று திகைத்து நிற்கவேண்டியன்றோ இருக்கிறது. ''நம்பிள்ளை முதலானவருடைய திவ்யக்ரந்தங்களில் அருமையான சில உபமான வாக்கியங்களுண்டு; அவற்றைக்கண்ட ஸ்ரீதேசிகன் அந்த வாக்யங்களைத் தாமும் ப்ரயோகிக்க ஆசைப்படுகிறார். மருமமறியாமல் சில ப்ரயோகங்கள் பண்ணுகிறார். அது சோசநீயமாகிறது. ''காலன்கொண்டு மோதிரமிடுபோபாதி'' என்பதொரு உபமானவாக்கியம். இது ஸ்ரீவசனபூஷணத்திலுள்ளது. இதன் கருத்து என்ன

வென்றால், ம்ருத்யுபீடா பரிஹாரார்த்தமாக ஒருவன் மஹிஷதானம் பண்ணுகிறான். அதை வாங்கிக்கொண்டவன் அதை ஒருவாறு பரிஹரித்து விடாது அதை விற்று அந்தப் பொருளைக்கொண்டு மோதிரம் பண்ணுவித்துப் பூண்டானும்; குண்டல மேகலாதிகள் செய்வித்துப் பூண்டானுகில் அவை அவன்தன் கண்ணுக்குப் புலப் படுவது கதாசித்தாகும். இந்த அவிவேகி மோதிரம் பண்ணிப் பூண்டானுகையாலே இது அடிக்கடி கண்ணில்பட்டு தனக்கே வெருவும்படியாயிருக்கும். இந்த த்ருஷ் டாந்தத்திற்கு இதுவே சுவைமிக்க கருத்து. இதையறிய விரகில்லையாயிற்று. ரஹஸ்யத்ரயஸாரத்தில் சிஷ்யக்ருத்யாதிகாரத்தில் "முறையொழியக் கேட்டுச் சொல்லுமாகில் காலன்கொண்டு ஆபரணம் பூண்டாற்போளே கண்டாரெல்லாரும் தன்னை அருவருக்கும்படியாம்" என்றெழுதுகிறுர், இதன் கீழே "களவுகொண்டு ஆபரணம் பூண்டாற்போலே கண்டார்க்கெல்லாம் தான் அஞ்சவேண்டும்படியாம்" என்றுர். அது ஒக்கும்; மோதிரமென்கிற விசேஷ நிர்தேசத்தின் சுவடறியாதே ஆபரணம் பூண்டாற்போலேயென்று பொதுப்படச் சொன்னுர்; அஸ்து. அதனல் கண்டாரெல்லாம் தன்னை யருவருக்க என்னப்ரஸக்தி? இங்கு சேட்லூர் நரஸிம்ஹா சாரியர் எழுதுகிறுர்—"காலன் கொண்டு—காலபுருஷ தானம் வாங்கி. அதாவது ஒருவனுக்கு ஆயுஸ்ஸுக்குப் பீடைவருமாகில் எள்ளினல் புருஷன்போல் செய்து ஒரு பையில் அனேகம் விதமான ஆபரணுதிகளை அத்றகுள் வைத்து தக்ஷிணை யுடன் தானம் கொடுப்பது" என்று. ஐயோ! இதற்கு ஏதாவது அர்த்தமுண்டோ? இஞ்சிமேட்டழகியசிங்கர் இப்படி அஸப்யமாக உரை செய்திலர். ஆனல் மூலத் தைப் பொருந்தவைத்துக் காட்டவில்லை. காட்ட வல்லாருளரோ? என்று தேவரீர் கேட்டிருக்கிறதே, இதைப்பற்றி யாரேனும் விடை யிறுத்ததுண்டோ?

அன்னு-ஒன்றுக்கும் வாய்திரப்பாரில்லை; இதைக் கேளும்; ஒரு விசிஷ்டாத்வைதி வித்வான் திருமாலிருஞ்சோலை மலைக்குப் போயிருக்கையில் அங்கே அப்பயதீக்ஷிதர் வந்திருந்தாராம். இருவர்க்கும் சற்று வாத கேலி நடந்ததாம். தீக்ஷிதர் மனச் சாக்ஷிக்கு விருத்தமாகவே வாதம் செய்து வந்தாராம்; அப்போது ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதா "தீக்ஷிதரே! இந்த க்ஷேத்ரத்தில் பதினெட்டாம்படி விசேஷம் கேட்டிருப் பீரே; இங்கே படியேறியிறங்கி சபதம் செய்து வெற்றிபெறுகிறுர்கள்; நீர் அப்படி சபதம் செய்வீரா? நான் சொல்லுவதெல்லாம் மனச்சாக்ஷிக்கு இணங்கவே தான் சொல்லுகிறேனென்று சபதம் செய்வீரா?" என்று கேட்டாராம். அதற்கு அவர் ஒன்றும் சொல்லாமல் வாளாவிருந்தாராம் அப்போது ஸ்ரீ வைஷ்ணவ பண்டிதர் தீக்ஷிதருடைய கையை கெட்டியாகப் பிடித்துக் கொண்டு "நீர் சொல்லுவதெல்லாம் அபிநிவேசவசத்தால் சொல்லுவதேயொழிய ஸஹ்ருதயமாகச் சொல்லுவதன்று என்று நான் சபதம் பண்ணுகிறே"னென்று சொல்லிக்கொண்டே (அவரைத் திமிறிக்கொண்டுபோகவொட்டாமல் இறுகப் பிடித்துக்கொண்டு) படியேறி யிறங்கி விட்டாராம் அப்போது தீக்ஷிதர் ஒன்றுஞ் சொல்லமாட்டாமல் "என்ன ஐயங் காரே! பொல்லாதவராயிருக்கிறீர்!" என்று சிரித்துக்கொண்டே சொல்லிப் போய்விட்டாராம். இதேபோல் ரஹஸ்யத்ரயஸாரப்ரவசனகர்த்தாக்கள் அந்த அழகர்மலைக்கு வந்தால் "நீங்கள் வீண் கட்டுப்பாட்டுக்குத்தான் ஸப்தபங்கீஸமாந ஸ்கந்தமான சுவடிகளைக் கட்டிக்கொண்டழுகிறீர்கள்" என்று சபதம் செய்தே தீருவேன்—என்றெழுதியிருக்கிறுரொருவர்; "இதையெல்லாம் எத்தனை நாளைக்கு

ஸஹித்திருப்பதந்தோ! எவ்வளவு துணிச்சலான பேச்சு இது.'' என்கிறார்களே தவிர விஷயத்திலே புகுந்து மறுவாய் திறக்க இடமில்லாதபடி மறுப்பெழுதவல்லாரில்லை.

அனந்தர்— ஒன்று நினைவுக்கு வருகிறது விஜ்ஞாபிக்கிறேன். தேவரீருக்கும் தெரிந்தேயிருக்கும். அஹோபிலமடத்து ஆஸ்தான வித்வான் ஸ்ரீ. உ. வே. திருக்கள்ளமையங்கார் ஸ்ரீமதுபயவே வித்வான், காரப்பங்காடு வேங்கடாச்சார்ய ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்திநினைவுமலர்க்கு எழுதிக்கொடுத்துப் பிரசுரமாகியுள்ள கட்டுரையில் காண்பது. (என்னவென்றால்)

''தேசிகன் நிகமபரிமலமென்று மிக விரிவான வியாக்கியானம் அருளிச் செய்தாரென்றும் அது லுப்தமாய்விட்டதென்றும் 'சிலர் சொல்லுகிறார்கள். தேசிகனிடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் சென்று எல்லா கிரந்தங்களுக்கும் அத்யத்புதங்களான வியாக்கியானங்களை இயற்றுகின்ற தேவரீர் திவ்யப்ரபந்தங்களுக்கும் ஒரு அத்புதமான வியாக்கியானம் இயற்றவேணுமென்று பிரார்த்தித்ததாகவும் அதற்கு தேசிகன் 'சோழியன் யாவற்றையும் சுவைத்துவிட்டான். நமக்கு சக்கையே காணுமுள்ளது' என்றருளிச் செய்ததாகவும் சிலர் சொல்லுகிறார்கள். இங்கு சோழியனென்பதனால் பெரியவாச்சான்பிள்ளையைக் குறிப்பிட்டாரென்று கொள்க. பரம காருணிகரான பெரியவாச்சான்பிள்ளை நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திற்கும் வெகு அழகான மதுரமான கம்பீரமான வியாக்கியானத்தை அருளிச்செய்திருக்கிறபடியினாலே தாம் உரை இயற்றவேண்டிய அவசியமில்லையென்று ஸாதித்தார் என்பதே அவ்வாக்யத்தின் கருத்து'' என்றெழுதிவிட்டார் திருக்கள்ளம் வித்வான். இத்தால் நிகமபரிமலத்தைப்பற்றிச் சொல்லிக்கொண்டிருந்த ஐதிஹ்யம் விதைதைதிஹ்ய ஸஹஸ்ரங்களில் சேர்ந்ததாக ஆகவில்லையா ?என்று அவர்களிலே ஒருவர் கேட்கிறார்.

அண்ணா— ஒருவர் துணிந்து எழுதியுள்ளார்— 'ரஹஸ்யத்ரயஸார தத்வத்ரய சிந்தனாதிகாரத்தில் ''தர்க்கபாண்டித்யத்தாலே நாம்நினைத்ததெல்லாம் ஸாதிக்கலாயிருக்கச் செய்தேயிறே நாம் ப்ரமாண சரணராய்ப்போருகிறது'' என்று அஸ்தாநே எழுதியிருக்கிறாரே; ரஹஸ்யக்ரந்தத்தில் இப்படியு மெழுதுவாருண்டோ? ''பால்ய விதந்துவான நான் ஸ்வைரசாரிணியாக இருக்கலாமாயினும் உலகுக்கஞ்சியிறே ஒடுங்கி நிற்கிறது'' என்னுமாபோலன்றோ இது விருப்பது'' என்று. இதையுங் கேளும்; பிள்ளை லோகாசாரியர் தமது ரஹஸ்யங்களிலே ''ப்ரபந்தபரித்ராணத்திலே சொன்னோம்; ப்ரமேய சேகரத்திலே சொன்னோம், அர்ச்சிராதிகதியிலே சொன்னோம்'' என்றெழுதியிருப்பதைப் பார்த்துத் தாமும் அப்படியெழுத ஆசைப்பட்டு (அதிகாரி விபாகாதிகாரம் முதலானவற்றிலே) ''ந்யாஸதிலகத்திலே சொன்னோம். நிக்ஷேபரக்ஷையிலே சொன்னோம்'' என்றெழுதுகிறார். நியாஸதிலகத்திலே என்ன சொன்னதாக எழுதியிருக்கிறாரென்றால் ''அந்தோநந்தக்ரஹணவசக:'' என்கிற ச்லோகத்தைப் பூர்த்தியாக எழுதிவைத்திருக்கிறார். ''அந்தேநந்தக்ரஹணவசக:''. இத்யாதி சொன்னோமென்றால் போதாதா? பூர்த்தியாக ஏனெழுதினார் தெரியுமோ?

அனந்தர்— இதைப்பற்றிக் கீழே விரிவான சர்ச்சை நடந்திருக்கிறதே; மறந்திலேனடியேன். இன்று நம்மாழ்வாருத்ஸவத் தொடக்கமன்றோ? திருமஞ்சன ஸமயமாயிருக்கும்; ஸன்னிதிக்குப் புறப்பட்டுப்போவோம். (ஸல்லாபசேஷம் தொடரும்)

—: முதலான்னிகம் முற்றிற்று. :—

சிரஞ்சீவி. ராஜஹம்ஸனுடைய உபநயன மஹோத்ஸவ ஊர்வலக் காட்சி





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

சென்னை முத்தியாலுபேட்டை ஸ்ரீவேணுகோபால கிருஷ்ணஸ்வாமி ஸந்நிதியில்

ஸ்ரீமதுபயவே. P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்

# * கீதோபநிஷத் பிரவசன விருந்து *

ஸ்ரீமான். பிள்ளைபாக்கம் பகுகுடும்பி. அனந்தாசாரியர் எழுதுவது.

நெடுநாளாக ஷெ பேட்டையிலுள்ள பல ஆஸ்திக ஸபையினரும் கோவில் தர்மகர்த்தர்களும் விரும்பியபடி சென்ற சித்திரைத் திங்கள் 19-ம் தேதி (1-5-1972) முதல் தினசரி 9-நாட்களில் ஷெ பிரவசனம் வெகு விமரிசையாக நடந்தேறியது. இந்த வைபவத்தில் பங்கு கொண்டவர்களும் சிரவணானந்தம் அடைந்தவர்களும் இம்மாதிரி வாய்ப்பு மறுபடியும் கிடைக்காதா என்று ஏங்கி இருக்கின்றனர். கேட்கத் தவறியவர்களின் ஏக்கமோ பின்னும் அதிகம். இந்நிலையின் காரணம் கீழ்க்கண்ட விசேஷங்களினால் இருக்கலாம்.

முக்கியமாக, பிரவசனகர்த்தாவின் ஒப்புயர்வற்ற வித்வத்தின் பூர்த்தியும், அவரது உபந்யாஸத்தின் தனிப்பாணியும் அடங்காத ஆர்வமும் முதற் காரணம். ஜகதாசார்ய சிம்மாஸனாதிபதி என்னும் பட்டமும் மஹாமஹிமோபாத்யாய பிருதும் அவருக்கே உரித்தானவை. சென்னை உயர் நீதிபதிகளில் ஒருவரான ஸ்ரீ T. ராமப்ரஸாத ராவ் அவர்கள் ஸ்வாமியைப்பற்றி ஸ்ரீராமாயண உபந்யாஸம் ஒன்றில் இரண்டே சொற்களில் ஆங்கிலத்தில் வர்ணித்தார். அதாவது (ஸிட்டிங் என்ஸைகிலோபீடியா.) இதற்கு ஸ்திர சகலகலா நிகண்டு என்று பொருள் கூறலாம். "என்ஸைகிலோபீடியா" என்னும் ஆங்கில புஸ்தக சாலைக்குப்போய் எல்லா விஷயங்களையும் படித்து அறியலாம். அதுபோல எவரேனும் எவ்விஷயமாயினும் ஸ்வாமியை அணுகி தெளிவுபெறக்கூடும்; சிரமப்பட்டு தேடவேண்டியதில்லை என்றார் அவர். வயோதிகத்தினால் தமக்கேற்பட்டுள்ள பலஹீனத்தைப் பொருட்படுத்தாது ஆஸ்தையுடன் அணுகிய அடியேனை ஆதரித்து கண்ணன் ஸந்நிதியில் கீதை உபந்நியாஸம் செய்யும் சந்தர்ப்பம் வாய்த்ததையே பெரும் பாக்கியமாகக் கருதிப் பட்டணத்தில் பத்து நாட்கள் தங்கும் வசதிகளைத் தாமே ஏற்படுத்திக் கொண்டது அவரது ஸௌலப்ய குண விசேஷமே.

இரண்டாவது காரணம்: உபந்யாஸ விஷயத்தின் ஏற்றம். பகவத் கீதையில் காணும் தத்வார்த்தங்களும் உபதேச ரத்நங்களும் வேறு எந்த க்ரந்தத்திலும் ஒருங்கே கிடையா. மூதோர் இதை வேத சாரம் என்றே சொல்வர். ஆதலால் தான் பகவத்கீதை நம் நாட்டிலும் வடநாட்டிலுமன்றி ஐரோப்பிய நாடுகளிலும் பல பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டு ஆயிரக்கணக்கில் பல வியாக்யாநங்களுடன் பிரசுரமாகி பரவி இருக்கிறது. இக்கீதம் பகவத்வாசகமே ஆகையால் (ஸாங் ஸெலெஸ்டியல்) என்றும் (ஸாங் டிவைன்) என்றும் ஆங்கிலத்தில் மேல் நாட்டார் கொண்டாடுகிறார்கள்.

கடைசியாக, உபந்யாஸம்நடந்த ஸ்தல மகிமையே காரணமாகக் கூறலாம். இக்கண்ணன்கோவில் நூதன கோபுரத்துடனும், புத்துயிர்பெற்ற விமானங்களுடனும் உயிரோவியங்கள் நிறைந்த மண்டபங்களுடனும் ஸர்வம் க்ருஷ்ணமயமாய்ப் பிரகாசிப்பது ப்ரஸித்தம். ஸ்வாமியும் மற்றும் பல வித்வான்களும் மஹா ஸம்பிரோக்ஷணையின் வைபவத்தில் கலந்துகொண்டு அபிமானித்த ஸந்நிதி. நம் கண்ணனுக்கென்றே வாழித்திருநாம ச்லோகமும் கட்டியமும் நம் ஸ்வாமி எழுதிக்கொடுத்துள்ளார். ஸ்ரீராமாநுஜன் பத்திரிகையில் கண்ணனிடம் உரையாடிவரும் அண்ணு ஸ்வாமி கீதாகீதம் பாடி உகப்பித்ததும் பொருத்தமாச்சுது.



ஆரம்பதினம், மாலை 6 மணிக்கே கோபுரவாசலில் பக்தர்கள் திரளாகக் கூடி எதிர்பார்த்திருந்த ஸ்வாமியும் அவரது பிரவசனங்களைத் துவக்கி அக்ராசனம் வகிக்க இசைந்த சென்னை உயர் நீதிமன்ற நீதிபதிகளும் N. க்ருஷ்ணஸாமி ரெட்டியார் அவர்களும் தனித்தனியே ஒரே சமயத்தில் ஸந்நிதி வீதியில் வந்திறங்கினர்கள். அவர்களை நிர்வாகக் குழுவினர் கோவில் மரியாதைகளுடன் பூர்ண கும்பம் கொடுத்து வரவேற்றதைப் படத்தில் காண்க.

உடனே கஜேந்திர ஆழ்வான் அவ்விருவருக்கும் மாலை அணிவித்து வணங்கி வழிபாடு செய்து இருகாலில் நின்று அழைத்த கோலம் மறக்கவொண்ணுக் காட்சி. பிறகு எல்லாரும் சந்நிதிபிராகாரத்தில் அமைத்திருந்த பந்தற் கீழ் விரிப்புகளில் அமர்ந்ததும் அலங்காரமேடைமீது தனி ஆசனங்களில் வீற்றிருந்த ஸ்வாமிகளுக்கும் நீதிபதி அவர்களுக்கும் சுருக்கமாக அடியேன் நல்வரவு கூறியவுடன் நீதிபதி அவர்கள் ஸ்வாமியைப்பற்றிப் புகழ்ந்து பேசியதும் உபந்யாஸம் தொடக்கமாச்சுது கடைசிவரையில் நீதிபதி அவர்கள் அன்றைய உபந்யாஸத்தை ரசித்து மறுபடியும் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்.

அன்று முதல் நாள் தவறுமல் சரியாய் மாலை 7 மணிமுதல் 9 மணிவரை இரண்டுமணி நேரம் கர்ணாம்ருதமாய் கீதையின் ஸாராம்சங்களை விடாமல் அத்யாயவாரியாக மூன்று ஷட்கங்களாக வகுத்து பாமரர்களுக்கும் புரியும்படியாய் விமர்சித்தது அத்யாச்சர்யமாயிருந்தது. அவரது மனத்தில் புதைந்து கிடந்த அர்த்த விசேஷங்கள் தேங்கித் ததும்பி அருள்வர்க்காக வழிந்தோட ஆஸ்திக மக்கள் ஆனந்தமாகப் பருகினர்கள். அப்படி விக்ஷேபித்தால்தான் தம் தேகம் தரிக்கும் என்றும் ஆயாஸமே ஏற்படாது என்றும் அவர் ஒருசமயம் அறிவித்த பிறகு, அன்னரின் மற்ற நேரங்களில் உள்ள அசக்தியைக் கவனித்து கவலைப்பட்டவர் சாந்தி அடைந்தனர்.

கடைசிநாள் 9—5—72 செவ்வாயன்று கீதை சாற்றுமுறை உற்சவத்தை முன்னிட்டு ஸந்நிதி கல்யாண மண்டபத்தில் ஸ்ரீவேணுகோபால கிருஷ்ணனையே கீதாசார்ய சாரதியாகவும் திருமங்கை மன்னனை அர்ச்சுனனாகவும் சாத்துப்படி சமர்ப்பித்து 5 குதிரைகள் பூட்டிய தேரில் வீற்றிருந்த திருக்கோலம் கீதோபதேசம் நடப்பதேபோல் ஸேவையாயிற்று. ஸ்ரீஸ்வாமி அங்கு எழுந்தருளிமங்களாசாஸனம் செய்தபோது திருவல்லிக்கேணியிலிருந்தும் ஸ்ரீபெரும்பூதூரிலிருந்தும் தருவித்திருந்த பரிவட்டங்கள், மாலைகள் கண்ணன் ஸந்நிதி பரிவட்டம் மாலை முதலிய மரியாதைகளை ஸ்வாமி ஸ்வீகரித்து உபந்யாஸ மேடைக்குப் போகும் வழியில் சில பக்தர்களுடன் எடுத்த படமும், முடிவில் அவருக்கு ஸம்பாவனை ஸமர்ப்பித்த போது எடுத்த படமும் இங்கே காண்க.





இந்த விழாவில் சௌகார்பேட்டை ஸத்கதா பிரஸங்க சபையாரில் சிலர் கலந்து கொண்டது ஓர் விசேஷம். தவிர, முத்தியாலுபேட்டை ஆஸ்திகச்சிறுவர்கள் பலர் அடியேனுக்கு அநுகூலமாக பற்பல கைங்கரியங்களைப் புரிந்தது மற்றொருவிசேஷம். தவிர, கோயில் அறங்காவலர்களும் பட்டர் ஸ்வாமிகளும் உள்துறையாரும் உபந்யாஸங்கள் கிரமப்படி நடக்க ஒத்துழைத்ததும் குறிப்பிடத்தக்கது. வந்தனோபசார கிரமப்படி ஸ்வாமிக்கு நிர்வாகஸ்தர்களின் பிரதிநிதியாக அடியேன் க்ருதஜ்ஞதையை தெரிவித்துக் கொண்டபோது ஸ்வாமியின் மகிழ்ச்சியும் திருப்தியும் அவரது முகவிலாஸத்தில் விளங்கியது. ஸ்வாமியை வித்வத்துக்குத் தக்கபடி கௌரவிக்க இயலவில்லையே என்ற எங்கள் குறை நீங்கவில்லை. இக்குறையைத் தீர்க்கும் நாளை நோக்கி நிற்கும்

அடியவர்க்கடியவன்,
**P. B. அனந்தாச்சாரி,**
அட்வகேட்.

சென்னை-1,
1—6—1972.

# திருமலையில் லக்ஷ்மீநாராயணக்ரது.

ஏறக்குறைய ஒரு வருஷகாலமாக உலகமெங்கும் ப்ரஸ்தாவிக்கப்பட்டு வருகின்ற இந்த மஹாயஜ்ஞம் நிகழத் தொடங்கும் நன்னாள் அணுகிவிட்டது. இந்த ஜூன் மாதத்திலேயே இருபத்தெட்டாந்தேதியன்று தொடக்கமாகி ஜூலைமாதம் பத்தாந்தேதி அவபிரதமாகும். இந்த மஹாயஜ்ஞத்தின் நிகழ்ச்சி விவரங்களை ஏற்கனவே நாம் ஸ்ரீராமாநுஜனில் விபுலமாக வெளியிட்டிருக்கிறோம். ஸகல பாஷைப் பத்திரிகைகளிலும் விளக்கமாக வெளிவந்துள்ளது. இதைப்பற்றி யறியாதார் எந்தவூரிலும் எந்த ஜாதியிலும் ஒருவரும் இருக்கமாட்டார். இந்த விசேஷத்தைக் கண்டுகளிக்க த்வீபாந்தரங்களில் நின்றுங்கூட வருவர் பலர். எத்தனையோ விதமான அருமை பெருமைவாய்ந்த கண்காட்சிகள் இந்த சந்தர்ப்பத்தில் அற்புதமாகக் காண நேரும். உலகம் பரந்தபுகழாளராய் தபஸ்விகளும் தவங்களும் ஒன்று கூடி வடிவெடுத்தனவோ! என்று நினைக்கும்படியாய் விளங்குகின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகளை ஸேவிப்பதையே புருஷார்த்தமாகக் கொண்டு திருமலைக்கு வரவிரும்புவர் பலர். லக்ஷக்கணக்கான பக்தர்கள் கூடினாலும் ஒருவர்க்கும் ஒருவிதமான அஸௌகரியமும் விளையாதபடிக்குப் போதுமான ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. ...



# செவியேற்கத்தகாத ஆராய்ச்சி.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த பெரிய திருமொழியாயிரத்தில் திருவரங்கம் பெரிய கோயிலுக்கான திருமொழிகள் ஐந்தில் இரண்டாவதும் ஐந்தாவதுமான இரண்டு திருமொழிகள் எப்போதோ இடம்மாறி அநியாயமாய் ஐந்தாம்பத்தில் புகுந்துவிட்டனவென்றும் அவை மூன்றும்பத்தின் முதலில் இருக்கவேண்டியவையென்றும் அவை ஸ்ரீ ரங்கநாதன் விஷயமானவை யல்லவென்றும் திருவரங்கமென்கிற ஓர் அக்ரஹாரத்திலுள்ள பெருமான் விஷயமே யென்றும் வாதிக்கச் சிலர் தலைப்பட்டிருக்கிறார்கள். இந்த குத்ஸிதவாதம் புத்தகமேறியும் வெளிவந்துவிட்டது. என்றைக்கோ நடந்த பௌண்ட்ரகவாஸுதேவன் கதையை நினைவூட்டுமிக் கூற்று. இதன் மறுப்பை இப்பத்திரிகையின் அட்டைப்பக்கம் 2, 3ல் காண்க. ஆவச்யகதை ஏற்படின் விரிவான மறுப்பு வெளிவந்து மூளை கலங்கினவர்களைத் தெளிவிக்கும். "வெருவாதாள்" "ஏழையேதலன்" பதிகங்களில் காவிரியாற்றின் ப்ரஸ்தாவமில்லாமை ஒரு காரணமாகக் கூறப்படுகிறதாம். காவிரியின் பேச்சேயில்லாத பெரியாழ்வார் குலசேகராழ்வார்களின் கோயிற் பதிகங்களையும் சிலம்பாற்றின் பேச்சேயில்லாத திருமாலிருஞ்சோலைப் பதிகங்களையும், கருட நதியின் பேச்சேயில்லாத திருவயிந்திர புரப்பதிகத்தையுங்கண்டு தெளிக. ... ...



# தென்னரங்கமும் திருவரங்கமும்

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பௌராணிக க்ஷேத்திங்களிற் காட்டிலும் ஆழ்வார்களின் மங்களாசாஸனம்பெற்ற திவ்யதேசங்களுக்கு ஏற்றம் கொள்ளப் பட்டுள்ளது. அந்த திவ்யதேசங்களின் திருநாமங்களை ஸ்ரீமந்நாதமுனிகள் முதலான நம் பூருவாசாரியர்கள் இன்னின்னவை யென்று நிர்ணயித்து நித்யாநுஸந்தானம் செய்துவந்தார்கள். அது பிறழ்வுறாதபடிக்கு பட்டர் நியமனத்தினால் பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதிப் பிரபந்தத்தைப் பணித்தார்.

தென்னாட்டில் ஸ்ரீராஜமன்னார் ஸன்னிதி யென்று ப்ரஸித்தமான மன்னார்குடியும், மேல்நாட்டில் திருநாராயணபுரமும் ஆழ்வார் பாடல் பெறவில்லை யென்கிற குறையை ஆசாரியர்களிருவர் தீர்த்துவைத்தனர். (அதாவது) எம்பெருமானார் திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகத் திருவாய்மொழியை ஸமர்ப்பித்தருளினார். மணவாளமாமுனிகள் ஸ்ரீராஜமன்னார் ஸன்னிதிக்கு *தீர்ப்பாரையாமினித் திருவாய்மொழியை ஸமர்ப்பித்தருளினார். ஸ்ரீராஜமன்னார் தக்ஷிணத்வாரகாதீசனாகப் புராண ப்ரஸித்திபெற்றிருப்பதும், தீர்ப்பாரையாமினிப் பதிகத்தில் "வண்துவராபதிமன்னனை ஏத்துமின்" என்றிருப்பதுமாகிற ஔசித்யத்தை நோக்கியருளினபடி.

திருக்கோவலூர்ப் பிராந்தத்தில் திருவரங்கமென்றொரு க்ஷேத்திரம் பிரஸித்தி பெற்றுள்ளது. அதை ஆழ்வார் பாடல்பெற்ற திவ்யதேசமாக ஆக்கவேணுமென்று தோன்றினால் மேலே விவரித்த ரீதியில் ஒரு பதிகத்தையோ பல பதிகங்களையோ பூருவர்களிலொருவர் அதற்கு ஸமர்ப்பித்தார் என்று பிரசுரஞ் செய்வது பாங்காகும். அந்த வழியைவிட்டுச் சிலர் கூறுவதென்னவென்றால், பெரிய திருமொழியில் ஐந்தாம்பத்தில் ஐந்தாம் பதிகமான *வெருவாதாள் திருமொழியும், எட்டாம்பதிகமான *ஏழையேதலன் திருமொழியும் இரண்டாம்பத்தின் முடிவிலுள்ள திருக்கோவலூர்ப் பதிகத்திற்கு அடுத்தபடியாக (மூன்றாம்பத்தின் ஒன்றிரண்டு திருமொழிகளாக) ஆழ்வாரால் ஸாதிக்கப்பட்டிருந்து, தத்துவமறியாத பின்னோர்களால் இடம் மாற்றி அமைக்கப்பட்டுவிட்டன என்பதாம். இந்த வாதத்தை மிக லகுவாகக் கிள்ளிக் களைந்திடுவோம்; வேதத்தில் அநுவாகக்ரமம் பிறழாதப்படிக்கு கோவைகள் என்று ஏற்பட்டு அநாதியாகவே அத்யயன பரம்பரையில் ஸ்வரத்தோடுங்கூடவே வந்திருக்கிறது. [*இஷேத்வா யஜ்ஞஸ்ய சுந்தத்வம்* இத்யாதி.] இதேபோல் திவ்யப்ரபந்தங்களுக்கும் அடிவரவு என்பது அநாதிகாலமாக ஏற்பட்டுள்ளது. [*வாடியரவி சேமம் வென்றி* இத்யாதி.] இயற்பாவும் திருவாய்மொழியுமாகிற இரண்டாயிரமும் அந்தாதித் தொடையால் அமைந்ததனால் அவற்றுக்குமட்டும் அடிவரவு ஏற்படவில்லை. முதலாயிரத்திற்கும் பெரிய திருமொழியாயிரத்திற்கும் ஏற்பட்டிருப்பது உலக மறிந்தது. திவ்யப் பிரபந்தங்களுக்கு அத்யயன பரம்பரை எப்போது ஏற்பட்டதோ அப்போதேதான் அடிவரவும் ஏற்பட்டது. எனவே நாதமுனிகள் தாம் இந்த அடிவரவையும் நியமித்தருளினாரென்னத் தட்டில்லை. அடிவரவில்லாமல் அடைவுதப்பாமல் அருளிச்செயலை ஸேவிக்க முடியாததலால் திவ்யப்ரபந்தம் போலவே அடிவரவும் அநாதியென்று இசைந்தாக வேண்டும். அந்த அடிவரவுதான் பாசுரங்களுக்குப் போலவே பதிகங்களுக்கும் உள்ள அடைவை ஒரு பிறழ்வுமின்றி நியமித்துத் தருகின்றது. திருக்கோவலூர்ப்

தொடர்ச்சி அட்டை இரண்டாம் பக்கம் பார்க்க